

# மரகதவல்லி

## 1-வது அத்தியாயம்.

### மணமாலை

ஓம்! ஓம்! ஓம்! என கடல் ஒலிக்கும் கருங் குயில் குன்றத்தில் மணிகள் பரப்பியதென மாட கூட மேடைகள் தோறும் அலங்கரித்திருந் தது. அழகு என்னும் செல்வ பரிநாமம் பூண்ட மரகதவல்லிக்கும் இராஜகிரி மன்னனுக்கும் விவாக மான மாலை நமது கதை ஆரம்பமாகிறது.

விவாகத்திற்கு வந்திருந்த விருந்தினரில் எவரும் தங்கள் இல்லத்திற்குப் போகவில்லை. விருந்தினர் யாவரும் களைப்பான மருந்தி அவரவர்கள் மனோ பீஷ்டப்படி சிலர் வெளியில் உலாவவும், சிலர் கூடத்திலே பேசிக்கொண்டிருக்கவும் ஆரம்பித்தனர். கருங்குயில் குன்றத்து அரசன் மாரமார்த்தாண்ட பிரபுவும் அவர் மனைவி கற்பகவல்லி தேவியும் ஒரு புறமாய்ப் போடப்பட்டிருந்த சோபாவில் அமர்ந்து எல்லையில்லாத ஆனந்த மனக்கிளர்ச்சி யுள்ளவர் களாக ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டிருந் தார்கள். அவர்கள் மனக்கிளர்ச்சியில் என்ன பேசுவ தென்றும் என்ன யோசிப்பதென்றும் இருவரிலொரு வரும் எண்ணவேயில்லை.

கடைசியாக கருங்குயில் குணரத்தாசன் வாய் திறந்து "காதலி, இஃதென்ன ஆனந்தம் பார்த்தனையா? நீண்ட காலமாக அனுபவித்த துன்பம் முடிவடைந்து பிறகு அனுபவிக்கும் சந்தோஷமே ஆனந்தமானது. பிரிய காதலி, இன்று நாம் அனுபவிக்கும் ஆனந்தத்திற்கு முன்பாக நான் இத்தனை காலம் நாடு நகர் பெண்டிரையுமிழந்து சகிக்கப்பட்டவனாய்ப் பரதேசியாய் அனுபவித்த துன்பமெல்லாம் சூரியனைக் கண்ட பனிபோல தலைகாட்டாது பறந்தோடி விட்டது......காதலி, என்ன ஆனந்தம் பார்த்தனையா?" என்றார்.

கற்பகவல்லி.—பிரபு, என் குற்றமே உம்மை அதிக துன்பத்திற்குள்ளாக்கியது. நான் உம்மை மணந்து உம்முடைய சுக செல்வ போக்கியங்களுக்கு பங்காளியாகிய பிறகு நீர் குற்றவாளியாகக் கருதப்பட்டு அபகீர்த்தியுடன் தனியாய் ஊரைவிட்டு ஓடும்போது உமது துன்பத்திற்குப் பங்காளியாக உம்முடன் கூடியிராது விவாக விமோசனம் செய்துகொண்டு பிரிந்ததல்லவோ, உம்மை ஓயில்லாத துன்பத்திற்கு ஆளாக்கியது. பிரபு, என் குற்றத்தை மன்னிக்க வேண்டுமென்று கற்பகவல்லி நாக்குழற வேண்டினாள். அவள் கணவன் மாரமார்த்தாண்டன் அவள் கரங்களைப் பற்றி யிழுத்து மார்போடணைத்து முகத்தில்முத்தமிட்டு "பிராணகாந்தி, நீ குற்றமுடையவளல்ல, நான் குற்றமுடையவன் ஏனெனில் உன்னை நானே குற்றவாளியாக மதித்திருந்தேன். நீ என் மீதுள்ள பாசம் குறையாது என்னையே கனவிலும் நினைவிலும் நினைத்துப் பூஜிப்பவளாயிருக்க நானோ

அவர் நண்பர் சுந்தரநீரன் விக்கிரம வீரனுடைய இருவரோடும் பேசிக்கொண்டிருக்கிறார். நான் இதுகாறும் அஞ்சனவதி தேவியுடன் வார்த்தையாடிக் கொண்டிருந்தேன். அவர்கள் நோயில் வருந்துவதாகவே கூறுகிறார்கள். அவர்கள் மனநோயில் வருந்துகிறார்களே யல்லது வேறு நோய் இருப்பதாக நான் எண்ணவில்லை. எவ்வாறாயினும், அப்பா, அவர்கள் மிக்க நல்லவர்களே. அவர்கள் எனக்கு எவ்வளவு உபகாரம் செய்திருக்கிறார்க ளென்பதை உமக்கு முன்னமே கூறியிருக்கிறேன். அல்லாமலும், அப்பா, அவர்கள் கணவனின் சகோதரன் தான் கொலைக் குற்றத்திற்குரியவர் என்று அறிந்தவுடன் அவர்கள் மனம் என்ன பாடு பட்டிருக்கு மென்பதை நாமே யோசித்துப் பார்க்கவேண்டும். தந்தையே, அஞ்சனவதிதேவி நமது அனுதாபத்திற்குரியவர். நாம் அவர்களுக்குத் துணைபுரிய கடமைப் பட்டவர்களாவோம்.

மாரமார்த்தாண்டன்.—அலமு, நான் முன்னமே அஞ்சனவதிக்குக் கூறி யிருக்கிறேனே. அவள் இந்த கருங்குயில் குன்றத்து அரண்மனையில் முன்போலவே அவள் பதவியில் யாதொரு குறைவுமின்றி நடத்தப் படுவாளென்று கூறியது உனக்கு ஞாபகமில்லையா? மேலும், அலமு, அவள் நமது குலத்தவளென்பதை நான் மறக்கவில்லை. அவளுக்கு என் மனையில் யாதொரு குறைவும் ஏற்படாது.

அலமு.—ஆம் அப்பா, அவர்களுக்கு யாதொரு குறைவும் ஏற்படக் கூடாதென்பதே என் எண்ணம். அப்பா, அவர்களுக்கு நான் பரிந்துபேசியதால் அவர்கள் என்னிடம் முறையிட்டுக் கொண்டதாக எண்ண

வேண்டாம். நானே அவர்களைப் பற்றி உம்மிடம்
பரிந்து பேசினேன் என்று மூவரும் பலவாறான விஷ
யங்களைப்பற்றி பேசிக்கொண்டிருக்க மாளிகையில்
கலியாண வைபவத்திற்கு வந்திருந்த விருந்தினர்கள்
பலரும் வெவ்வேறு விதமான வழியில் உல்லாச
மாய்க் காலங் கழித்துக்கொண்டிருந்தார்கள்.

சில ஆடவர் நீண்ட சுருட்டை வாயில் பற்றிய
வர்களாகப் பல அரிய விஷயங்களைப்பற்றிப் பேசிக்
கொண்டிருந்தார்கள். சிலர் முற்றத்தில் சீட்டாடிக்
கொண்டிருந்தார்கள் வேறு சிலர் தாம்பூலம் தரித்து
தோட்டத்தில் கைகோர்த்து உலாவிக் கொண்டிருந்
தார்கள். பொதுவாய்ப் பலரும் பல வேறு விதத்
தில் காலங் கழிப்பவர்களாயிருந்த போதிலும் முக்
கியமாய் ஒரு விஷயத்தைப் பற்றியே பேசிக் கொண்
டிருந்தார்கள். அதாவது அலமுவின் தீரசெயலைப்
பற்றி யென்று நாம் சொல்லவும் வேண்டுமோ? அநி
யாயமாகக் கொலைக் குற்றம் சாட்டப்பட்டு தனது
பதவியை யிழந்து சபிக்கப்பட்டவனாய்ப் பரதேசஞ்
சென்ற மார்த்தாண்ட பிரபுவான தனது தந்
தையின் அபகீர்த்தியை யொழித்து அவர் அரச
பதவியில் மீண்டும் அவரைக் கொண்டுவந்த அலமு
வின் தீர செயலைப்பற்றிப் பேசாதவர்களில்லை.

கருங்குயில் குன்றத்தில் ஒரு புறமாக பலவித
வாத்தியங்களும் முழங்கிக்கொண்டிருந்தன. சாதா
ரணமாகவே அரச மாளிகையில் வாத்தியங்கள்
முழங்குவது இயல்பென்றால் விவாக மாலை யன்று
விசேஷ வாத்தியங்கள் முழங்குவதிலென்ன ஆச்சரி
யம்? கருங்குயில் குன்றத்து மாளிகையிலெங்கும் சக்

தோஷ ஆரவாரமாகவே யிருந்தது.

தோட்டத்தில் புதிய தம்பதியான மகேந்திர வர்மன் தனதிரு தோழர்களாகிய சுந்தரேசனிடத்திலும் விக்கிரமவீரனிடத்திலும் உற்சாகத்துடன் பேசிக்கொண்டிருந்தான். அப்போது சுந்தரேசன் இராஜகிரி ஜமீன்தாரைப்பார்த்து, "பிரபு, நீர் மோகவல்லி தேவியை மணம் செய்துகொண்டதில் உம்மை விட பாக்கியவான் ஒருவரும் இவ்வுலகிலில்லை யென்றே சொல்லவேண்டும். மகேந்திரரே, நாம் இலங்கையில் உக்கிரம சிங்கனால் சிறைப்பட்டிருந்த போது அவள் வானுலக மாதுபோல் தோன்றி நம்மை அந்த வல்லாளி உக்கிரம சிங்கனிடத்தி லிருந்து மீட்டுவிட்டவள் இப்போது உம்முடைய மனைவி யல்லவோ?"

விக்கிரமவீரன்:—ஆம் பிரபு, அந்நாளில் அச் சிறுமி கருங்குயில் குன்றத்து அரசனின் புத்திரி என்று நாம் ஒருபோதும் எண்ணவில்லை

மகேந்திரன்:—நேசா, அவள் திராட்சைத்தோட்டக்காரனான அனந்தரன் மகள் என்றெண்ணிய போதும் அவளைக் காதலிக்காமலிருக்கவில்லையே. விக்கிரமா, அவள் செல்வம் என்னை அவள்பால் இழுக்கவில்லை. அவளது நேர்மையான பார்வையின் வசீகரத் தோற்றமே என்னை அவளிடத்தில் கட்டுப்படுத்தியது. அவள் நற்குணம் என்னை அவள்பால் அடிமைப்படுத்திக்கொண்டது.

சுந்தரேசன்:—பிரபு, இப்போது அவள் உமது மனைவி. உமக்கு முற்றுமுரியவள். உமது சுகத்திற்குப் பங்காளியானவள்.

வசந்தன்:--நீர் கூறுவதுண்மையே. என் எண்ணம் முடிவடைந்தது நேசா, இப்போது அவள் என் செல்வம், என் பாக்கியம், என் மரகதம் என்று ஆனந்தப் பரவசனாய்க் கூவினன். பிறகு மூவரும் வேறு விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

சூரியன் மேற்கடலை யடைந்தான். சுந்தரியும் விக்கிரம வீரனும் ஏதோ வேலையாக வேறு புறம் சென்றார்கள். தனியாய் விடப்பட்ட இராஜகிரி மன்னன் சுற்று முற்றும் பார்த்தான். அவன் கண்கள் மரகதவல்லியைத் தேடியது. அவன் பிரிய மனைவியைப் பார்க்க அவன் மனம் நாடியது. அவள் தோட்டத்தி லில்லாதது கண்டு வீட்டிலிருப்பா ளென்று எண்ணி மாளிகையை நோக்கி நடக்கலானான். அப்போது அவன் வேலைக்காரனான விசுவாசதாசன் வசந்தனுக்கு நேராக வந்தான். அவன் நோக்கம் அவனைச் சந்தேகமுள்ளவனாகவும் கவலையுள்ளவனாகவும் விளக்கியது. அவன் யாரையோ தேடுபவன் போல அங்கு மிங்கும் பார்த்துக் கொண்டே நடந்தான். அவனைக் கண்ட இராஜகிரி மன்னன் விசுவாசா வென்று கூப்பிட அவன் திடுக்கிட்டவனாகத் திரும்பிப் பார்த்தான். "பிரபு, உம்மையே தேடி வருகிறேன்" என்றான்.

வசந்தன்.—"ஏன் முகவாட்டத்துடனிருக்கிறாய்? உன்னைக் கருங்குயில் குன்றத்து வேலைக்காரர்கள் கண்ணியமாக நடத்தவில்லையா? என்ன விசேஷம்?" என்று கேட்க விசுவாசதாசன் தாழ்வான குர

லுடன், "இல்லை பிரபு, இங்கு எனக்கு யாதொரு குறைவும் நேரவில்லை. ஆனால்.........".

வரேந்திரன்.—என்ன விசேஷம் சொல்லு. என்னிடம் உனக்கென்ன பயம் விசுவாசா, உன் முகம் வாடியிருப்பதின் காரணமென்ன?

விசுவாசதாசன்.—பிரபு, என்னை மன்னிக்க வேண்டும். நான் சற்றுமுன் கடைவீதிக்குச் சென்றிருந்தேன்......

வரேந்திரன்,—என் உத்தரவில்லாது வெளியே போன குற்றத்தை மன்னிக்க வேண்டுகிறாயா? விசுவாசா, நீ என் பிரமாணிக்கமுள்ள ஊழியன என்று நானறிவேன். மேலும் உன்னை நான் தேடவில்லை.

விசு.—"இல்லை பிரபு, நான் கடை வீதியில் ஒருவனைக் கண்டேன். அவன் பார்வையே என்னை கலக்கத்திற் குள்ளாகியது. அவன்......" என்று சொல்லி வேறு சொல்ல வகையில்லாதவனாக விழித்தான். இராஜகிரி மன்னனும் கலக்கமுள்ளவனாகி "நீ யாரைக் கண்டாய்? அவன் யார்? கூறு" என்று உரத்த குரலாய்க் கேட்க விசுவாசதாசன், "பிரபு, விக்கிரமசிங்கனைக் கண்டேன். அவன் இறந்ததாக நாமெல்லோரும் வெண்ணியிருக்க அவன் சுகஜீவியாய் நமக்கு சமீபத்திலேயே யிருந்து வருகிறான்." என்று கூறக் கேட்ட ஜமீன்தார் சற்றுநேரம் மரம்போல அசைவற்று நின்றார். பிறகு தெளிந்தவராக வேலைக்காரனைப் பார்த்து, "நீ அவனை நன்றாய்ப் பார்த்தாயா? அவன்தானா அல்லது!......

விசு.—பிரபு, நான் மோசம் போகக் கூடியவனல்ல, அவன்தான். அவனை நான் அறியமாட்

டேனா? உம்முடன் நானும் அவனால் சிறையிலடைக்கப்பட்டு காதுகளை யிழக்கவேண்டியவனா யிருந்ததில்லையா? மேலும் பிரபு, அவனை ஒரு முறை பார்த்தவர்கள் மறுமுறை பார்க்கவேண்டிய அவசிய மில்லையே. அவன் கண்களே அவனைக்காட்டிக்கொடுத்துவிடும்... ..நான உக்கிரமசிங்கனைத் தான் கண்டேன் அவன ஏன இங்கு வந்தான் என்று என்றால் உண்மையாக கூடவில்லை. அவன் சிங்கள கவர்ன்மெண்டின் தண்டனைக்குத் தப்பி இவ்விந்திய தேசத்தை ஒளியிடமாக மதித்து இங்கு வந்து சேர்ந்தானோ? அல்லது ஏதோ ஒரு காரியத்தில் முயலும்பொருட்டுத்தான் வந்தானோ தெரியவில்லை, என்று கூறவும் ஜமீன்தார் வெகுநேரம் பேசாமலே ஆலோசித்துக் கொண்டிருந்தார். கடைசியாக சற்று திடங்கொண்டு வேலைக்காரனைப் பார்த்து, " நீ கவலைப்பட வேண்டியதில்லை. நீ கூறுவதுபோல உக்கிரமசிங்கன் இங்கிருப்பானானாலும் அவனால் நமக்கு என்ன தீங்கு செய்யக்கூடும்? நாம் இலங்கையில் அவன் கையிலிருந்ததுபோல இப்போதும் யாத்திரைவாசிகளாக இருப்பதில்லை இங்கு நாம் சகல வல்லமையும் உடையவர்களா யிருக்கிறோம். நீ கூறுவதுண்மையானால் அவனைப் பிடித்து தண்டிக்க முயலுவோம். அதுபற்றி நீ பயப்பட வேண்டியதில்லை. உன் வேலையைப் பார்க்கப்போ " என்று கூறி மறுபக்கம் திரும்பினான்.

அப்போது அவன் மனைவி அவனைத் தேடிக் கொண்டு அங்கு வந்தாள். வேலைக்காரன் அப்புறம் போகவே புதிய தம்பதிகளிருவரும் ஒருவரையொருவர் ஆலிங்கனம் செய்துகொண்டு கைகோர்த்த

வண்ணமாக அரண்மனைக்குள் நுழைந்தார்கள். இவர்களைக் கண்ட விருந்தினர்கள் இருவருக்கும் ஆசிகூற வாழ்த்தினார்கள். அழகும் அவள் காதலன் இராஜகிரி மன்னனும் கூடத்தில் போட்டிருந்த சோபாவில் உட்கார்ந்தார்கள். இராஜகிரி மன்னன் வேலைக்காரன் சொல்லிய சமாசாரத்திலேயே மனதை செலுத்திக் கொண்டிருந்தான். அவன் முகம் சற்று வாட்டமடைந்திருந்ததென்றே சொல்ல வேண்டும். வீரேந்திரன் உக்கிரமசிங்கனுக்குப் பயப்படவில்லை என்றாலும் அவனைப்பற்றி எண்ணும்போது அவனுக்குத் திகிலாகவே யிருந்தது. தனக்கு விசுவாசக்காரன் கூறிய சமாசாரத்தைத் தன் காதலி மரகதவல்லிக்குச் கூற வெண்ணினான். பிறகு சற்று யோசித்து அவளை வீணில் கலவரப்படுத்தக் கூடாதென்று எண்ணி மௌனமாக இருந்துவிட்டான். அழகுநங்கை காதலன் ஆழ்ந்த யோசனையில் இருப்பதைக் கண்டு விட்டாள். ஆனாலும் அதுபற்றிக் கேட்க விரும்பவில்லை. சற்று நேரத்துக்கெல்லாம் யாவரும் போஜனத்துக்கு அழைக்கப்பட்டார்கள். இராஜகிரி மன்னனும் அவன் பத்தினியும் எழுந்து போஜன சாலைக்குள் நுழைந்தார்கள்

## 2-வது அத்தியாயம்.

### சதியாலோசனை

அலைகளைத் தத்தளிக்கும் கடல்நீர் கருங்குழியில் குமுறத் துப் பாறைகளில் மோதி சப்தித்துக்கொண்டிருக்க செங்குத்தான பாறையின்மேல் ஒரு மனிதன் நின்று கொண்டிருந்தான். இருண்ட வேளையிலும் அவன் கண்கள் தீப்பொறிபோல பிரகாசித்துக்கொண்டிருந்தன. இருள்போல் கறுத்த உடலையும் முத்தைப்போல் வெளுத்த பற்களையுமுடைய உக்கிரமசிங்கன் பாறையின் உச்சியில் நின்று கொண்டிருந்தான். முன், அலமு அந்த பாறையில் நின்று கொண்டிருக்கும்போதுதான், பிஞ்சகனால் தள்ளப்பட்டாள். அவள் விழுந்த பாறையின் உச்சியில் நின்று கொண்டிருந்த உக்கிரமசிங்கன் யாரையோ எதிர் பார்ப்பவன்போல இங்குமங்கும் பார்த்துக் கொண்டிருந்தான். சற்று நேரத்திற்கெல்லாம் அவன் தேடிய மனிதன் அவ்விடம் வந்தான். அவன் உக்கிரமசிங்கனின் கூட்டாளியான ஒரு திருடன். அவனைக் கண்டவுடன் உக்கிரமசிங்கன் அதிகாரத்துடன், "கண்டகா, தேனவேசரி எங்கே? உன் கூட வரவில்லையா? இப்போது என்ன செய்கிறான்? நமது காரியத்தில் முயன்று வருகிறானோ அல்லது நம்மைக் காட்டிக்கொடுக்கும் வேலையில் முயன்று வருகிறானோ?" என்று கேட்டான்.

உக்கிரம சிங்கனின் உத்திரவுக்குப் பணிந்து நடக்கும் கண்டகன் தலைவனைப் பார்த்து "ஐயனே, அவன் நம்மைக்காட்டிக் கொடுக்க மாட்டான். தேனவேசரி நம்காரியமாகவே கருங்குயில் குன்றத்து மாளிகையுள் நுழைந்திருக்கிறான். அவன் இந்தக் கோட்டையை யறிந்தவன். நமக்கு உதவி புரிய பின் வாங்கவில்லை. அவனைப் பலவிதமாகச் சோதித்துப்பார்த்தேன். அவன் அலமுவைத்தலைக்க கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறான். அவனுக்கு நாம் செய்வதாகக் கூறிய நன்மைகள் மட்டிலும் அவனை நமது விஷயத்தில் முயற்சிக்கச் செய்ய வில்லை. அந்தரங்கத்தில் அவன் விரோத முள்ளவனு மிருக்கிறான். அவன் தமையன் பிஞ்சகன் உயிரோடிருக்கும் போது அவனால் சற்று ஆதரிக்கப்பட்டு வந்தவனாகத் தெரிகிறது. அவன் தூக்கில் தொங்கவே தேனவேசரி பாடு திண்டாட்டமாக முடிந்ததாம். அவன் தமையன் பிஞ்சகன் தூக்கில் மாட்டித் தொங்குவதற்கு அவளே காரணமா யிருந்தாளென்பதைப் பற்றி அவன் அலமுவை விரோதிக்க வேண்டியவனாயிருக்கிறான்.

உக்கிரமசிங்கன்.—நல்லது, இப்போதவ னெங்கே?

கண்டகன்.—அவன் நமது ஏற்பாட்டின்படி சகலமும் செய்துமுடிக்க அரண்மனைக்குள் போயிருக்கிறான். கூடிய சீக்கிரம் நம்மிடம் வந்து சேருவான்.

உக்.—ஆம். நமது ஏற்பாட்டில் தவறிப்போக சம்மதியோம். கண்டகா. நம்மை இவ்விந்திய தேசம்

கொண்டுவந்த பாய்கட்டிய கட்டில் தயாராயிருக்கிற தல்லவா? அவள் முன் என் காரியத்தில் தவறிப் போகச் செய்தாள். இப்பொழுது நான் என் காரியத்தில் தவறிப்போக மாட்டேன். கண்டகா, அவள் என் பழைய சாகதியான இராஜகிரி மன்னனை விவாகம் செய்துகொள்ளுமு முன்னமே அவளை என் வசத்தில் கொண்டுவர முயற்சித்தேன். அவள் அவனை மணந்துகொண்டாள். ஆயினும் என்ன, இன்னமும் அவள் கற்புடைய மங்கையே யாவாள். அவள் என் மனைவியாக வேண்டும்- அல்லது நான் சாகவேண்டும். நான் உயிரோடிருக்கும் வரையில் அவள் சுகஜீவியாயிருக்க மாட்டாள். என்னை மணந்தாலொழிய ஜீவிக்க மாட்டாள் என்று ஆணையிட்டுக் கூறுவதைக்கேட்ட கண்டகனும் நடுங்கினன். பிறகு "தலைவரே, அவள் உம்மை இறந்தவர் கூட்டத்தில் சேர்த்து எண்ணி யிருக்கிறாள். அவள் அப்படி எண்ணி யிருப்பதே நமக்கு அநுகூலமாய் முடியும்."

உக்.—உக்கிரமசிங்கனை நன்கு அறிந்தவளாகிய அவள் எப்படி நான் பிடிபட்டு தண்டிக்கப்பட்டே னென்பதை நம்பினாள் என்பதுதான் எனக்கு ஆச் சரியமா யிருக்கிறது. கண்டகா, அவள் என்னை அறிந்தும் அறியாதவளா யிருக்கிறாள்.

கண்டகன்.—தலைவரே, அவள் மதியீனமாகவே உம்மைப்பற்றி அவ்விதம் எண்ணியிருக்கிறாள். என் சொல்லினும் அவள் பெண்பிள்ளைதானே.

உக்.—கண்டகா, அவளை இழிவாக வெண்ண வேண்டாம். அவள் சிங்கத்தை அதன் குகை யிலேயே எதிர்க்கவல்ல தீர நெஞ்சுடையவள்.

உக்கிரம சிங்கனாகிய என்னையே அவள் பார்வையால் கீழ்ப்படியும்படி செய்துவிட்டா ளென்றால் அவள் வல்லமையை யாரால புகழக்கூடும். அத்தகைய தீர மனதுடையவளே உக்கிரமசிங்கனுடைய மனைவி யென்று எல்லோராலும் புகழ்ந்து பாராட்டக் கூடியவள். கண்டகா, அவள் என் மனைவியாக வேண்டும் மேலலம என் கைதியான வரேந்திரனை வரிப்பதில் அவளுககு என்ன பெருமையிருக்கிறது? மேலும் இராஜகிரி மன்னன் அவளை மணந்ததால் அவன் என் விரோதியானான். முன்னமே அவன என்கையிலிருந்து அவளால் மீண்டான். இனி அவன் என் பழிக்குத் தப்பமாட்டான. அவனு' அவள் நாயகன்? இல்லை, ஒருபோதும் இல்லை. நான்..... நான்தான......என்று உரத்துக கூறக்கேட்ட கண்ட கன் அச்சங்கொண்டவனாக, "தலைவரே, நாம் இவ் வூருக்கு அன்னியர்கள், நம்மை யாரேனும் இங்கு கண்டு விட்டால் பிறகு"...... .. .

உக்.—பிறகு என்ன? கண்டகா, என்னை எதிர்ப் பவர்கள் இவவுலகில் உண்டோ? அல்லது வேறு உலகில்தானு முண்டோ? என் கூட்டாளியான நீ பயப்படுவது எனக்கு வெட்கமா யிருக்கிறது.

கண்டகன்.—இல்லை ஐயனே, எதற்கும் முன் ஜாக்கிரதையுட னிருப்பது அவசியமென்றே கூறி னேன். நீர் கடைவீதிக்குப் போனபோது உம்மை யாரேனும் சந்திதகார்களோ அல்லது நீர் யாரையே னும் கண்டீரோ என்று கேட்க உக்கிரம சிங்கன் தணிந்த குரலுடன், "கண்டகா, நான் கடைவீதியில் என்னுடைய பழைய கைதியும் என் பங்காளியுமான

யாவும் ஒழுங்காய் அறியவேண்டும். நீ இந்த நகரத்திலுள்ள குன்றத்து மாளிகையின் அமைப்பை நன்கறிவாயல்லவா? நீயும் இங்கு பலவருடங்கள் இருந்திருப்பதாகத் தெரியவருகிறது.

தேன.—நான் இந்த மாளிகையிலிருந்ததில்லை. ஆனால், தலைவரே, நான் இந்த மாளிகையின் அமைப்பை நன்கறிந்திருக்கிறேன். என் தலைமையன் பிஞ்சகன் உயிரோடிருக்கும்போது இங்கு அடிக்கடி வருவேன். அவனுடைய உதவியால் நான் அரசனுடைய சயன அறை முதலாய் அறிவேன். என் தலைமையன் பிஞ்சகனே இவ்வழகிய மாளிகைக்குத் தலைவன்போல் இருந்து வந்தபடியால் யான் இந்த கோட்டையின் அமைப்பு யாவையும் அறிவது இயல்பாய் முடிந்தது.

உக்.—தேனவேசரி, உன்போன்ற ஒருவன் எனக்கு அவசியமாயிருந்தான். என் அதிர்ஷ்ட வசத்தால் உன்னைக் கண்டேன். மேலும் நல்லவேளையில் சந்தித்தேனல்லவா?

தேன.—ஆம். பிரபு, நான் பசியினால் உழன்று இன்ன செய்வதென்று தோன்றாது அவநம்பிக்கையென்னும் கடலில் மூழ்கும்போது நீர் யெனக்கு அரிய தெப்பம்போல் உதவி செய்தீர். நான் கடனுக்குப் புசித்து வந்த சத்திரக்காரன் என்னை நிர்ப்பந்தித்து இனி உணவளிக்க மாட்டேன், கடன் கொடுக்கத் தவறினால் அதிகாரிகளின் கையில் பிடித்துக்கொடுப்பேன் என்று திட்டமாய்க் கூறும்போது தான் நீர் வந்து எனக்கு உதவியாக நான் கொடுக்க வேண்டிய பாக்கி யாவும் கொடுத்து என்னை ரக்ஷித்

தீர். தலைவரே, உம்மை நான் ஒரு தெய்வம்போல் கொண்டாடுவேனா என்று கூறும்போது உக்கிரம சிங்கன் நகைத்து, "உன் தமையன் பிஞ்சுகன் இந்த கோட்டையில் தலைவன்போல் வாழ்ந்து வந்தகாலத்தில் உனக்குத் தேவையான சொத்துக்களைச் சம்பாதித்து வைத்திருந்தால் இப்போது நீ இவ்வாறு வருந்த வேண்டியதில்லையே. தேனவேசரி, முதுமைக்கு வேண்டியதை இளமையிலும், இராவுக்கு வேண்டியதை பகலிலும், சம்பாதிக்க வேண்டுமென்பதை நீ அறிந்திருக்கவில்லை போலும்"

தேன.—"அந்த நாளில் கொஞ்சம் பணம் சம்பாதித்து வைத்திருக்கலாம் என்பது உண்மைதான். ஆனால், தலைவரே, நீர் எண்ணுவதுபோல என் தமையன் கண்டபடி தாராளமாய் வாரிக்கொடுக்கக் கூடியவனல்ல. அவனை அப்போதைக்கப்போது நிர்ப்பந்தித்தே எனக்குச் சேரவேண்டியதைப் பெறவேண்டியதாயிருந்தது. உதாரியைப் போல டம்பத்திற்கு செலவிடுவதென்றால் எவ்வளவானாலும் லட்சியமில்லாது செலவிடுவான். கொடுக்கவேண்டியதை உபத்திரவம் செய்துதான் பெறவேண்டும். ஆனால் அவனுக்கு அனுகூலமான வேலை செய்வதென்றால் வரையின்றி கொடுப்பான்" என்று சொல்லிக்கொண்டிருக்கும் போதே உக்கிரமசிங்கன் சலிப்படைந்தவன் போல நாக்கைத் தட்டிக்கொண்டு, "அஃதிருக்கட்டும், தேனவேசரி, இப்பொழுது அரண்மனையுள் என்ன செய்கிறார்கள்?" என்று கேட்டான்.

தேன.—தலைவரே, நான் இங்கு வரும்போது யாவரும் போஜன சாலைக்குள் நுழைந்தார்கள். இப்

போது உண்டு முடித்திருப்பார்களென்று எண்ணு கிறேன்.

உக்.—அப்படியா?...நாம் இங்கு நாய்கள்போல் காத்திருக்க வேண்டியிருக்கிறது. நல்லது நமக்கும் ஒரு காலம் வரும்.

கண்.—"நாம் இங்கு நாய்கள் போலவே காத் திருக்கிறோம். ஆனால்! தலைவரே வேட்டை நாய்கள் தங்கள் இரைக்கே காத்துக் கொண்டிருக்கின்றன. நாம்......"என்று முடிக்கு முன் உக்கிரமசிங்கன், "தேனவேசரி, நாம் சற்று கோட்டைக்குள் போவோம்" என்று சொன்னான்.

தேன.—"தலைவரே உம்மிஷ்டப்படியாகட்டும். நாம் இவ்வழியாகப் போவோமானால் முன் பாழ டைந்த மண்டபமாய்க் கிடந்த கோவிலின் புறமாகச் செல்லுவோம்"என்று கூற மூவரும் நடந்தார்கள். தேனவேசரி வழிகாட்டியாக முன் நடந்தான். உக் கிரமசிங்கன் அவனுக்குப் பின் நடக்கலானான். கண் டகனே இருவருக்கும் பின்னால் சுற்று முற்றும் பார்த் துக் கொண்டே அவர்களைப் பின் தொடர்ந்தான்.

இரவு ஒன்பது மணி வேளையானதால் இவர்கள் நடக்கும் வழி இருண்டு காணப்பட்டது. உக்கிரம சிங்கன் இருட்டில் தடுமாற்றத்துடன் நடக்கலானான். அப்படி நடக்கப் பிடிக்காதவன்போல தோள்களைக் குலுக்கிகொண்டு, "நாம் திருட்டுப் பயல்கள்போல் இருட்டில் நடப்பது எனக்குப் பிடிக்கவில்லை. யதேச் சையாய் விடப்பட்ட சிங்கம் பகலிலேயே தன்னு டைய இரையைத் தேடிக்கொள்வதுபோல சிங்கள நாட்டின் மலை பாகத்துக்கு அரசு சிங்கமாகிய யான்

இந்நாட்டின் ஏழைத் திருடன்போல இப்போது இருட்டில் நடக்கவேண்டி யிருக்கிறது. ஆ! அலமு! சகல கஷ்டங்களும் என் மனதைக் கொள்ளை கொண்ட வளாகிய உன் பொருட்டல்லவோ. அ ? ! என் உள் ளத்தைக் கொள்ளைகொண்டவளே! உன்னை மறந் திருக்க என்னால் எப்படிக் கூடும்? நங்காய், உன்னை மணந்திருக்க என்றால் கூடும்'' என்று பித்தன் போல் பிதற்றி தேனவேசரியுடன் நடந்தான். மூவரும் கோவிலுக்கு முன்பாக வந்து நின்றார்கள். அரண் மனையில் விளங்கும் பிரகாசமான விளக்குகள் இவர் கள் கண்களுக்கு எட்டியது. முன் பாழடைந்து கிடந்த கோவிலும் இப்போது அலங்கிருதமாக சிங்காரிக்கப்பட்டு சுந்தரமாய் விளங்கியது. ஆந்தை கோட்டான் முதலிய இராக் குருவிகளெல்லாம் வேறு இருண்ட பாழிடம் தேடி குடிபோய் விட்டன. புதிய வெள்ளை பூசிய கருங்குயில் குன்றத்து மாளிகை யின் தோற்றம் விளக்கொளியில் பளிங்கு மாளிகை போல் விளங்கியது. இதுகளை யெல்லாம் கண்ட உக் கிரமசிங்கன் அசைவற்று நின்றான். இவ்வித உன்னத மாளிகைக்கு அவள் அலமுதான் உரியவள் என் பதை எண்ணும்போது அவன் நெஞ்சம் படபடத் தது. இவ்வித செல்வமுடைத்தான மலைக் கோட் டைக்கு முன்பாக தனது சிங்கள தேசத்து மலைக் குகை எத்தனை கேவலமானதென்று மனதில் எண்ணி னான். பிறகு தனக்குள் தானே "அவள் செல்வம் எனக்கு வேண்டுவதில்லை. என்னுடைய யதேச்சை யான மலைக் குகையே எனக்குப் போதுமானது. எனக்கு வேண்டியது அவளுடைய நெஞ்சம், அவள்

அன்பு, அவள் உடல்; வெறும் அலமுவே. வன தேவதை போல யதேச்சையான மலைவாசத்தில் எனக்கு மனைவியாக ஜீவிக்கவேண்டும், அவள் அவனோடு வாழ என் மனம் எப்படி இசையும். இராஜகிரி மன்னன் அவளுக்குகந்த நாயகனாக மாட்டான். அலமு, நீ எனக்குகந்த மனைவியா யிருப்பாய் என்பதில் சந்தேகமில்லை. ஆம்! சந்தேகமில்லை'' என்று தனக்குள் கூறிக்கொண்டே மாளிகையின் வாசற்படியைப் பார்த்துக்கொண்டிருந்தான்.

சற்று நேரத்துக்கெல்லாம் உக்கிரமசிங்கன சர்ப்பம் தீண்டியவன்போல் துள்ளிக்குதித்து ''ஆ! அவள் அவனோடு'' என்று கூவினான். அருகில் நின்றிருந்த சேனைவீரரும் கண்டகனும் திடுக்கிட்டார்கள்.

# 3-வது அத்தியாயம்

## ஆபத்தில் சிக்கினாள்

போஜனம் முடிந்தவுடன் விருந்தினர் யாவரும் கூடத்திற்கு வந்தார்கள். மரகதவல்லி தன் தாயுடன் பேசிக் கொண்டிருந்தாள். அப்போது கற்பகவல்லியின் தோழி மாணிக்கவல்லி அங்கு வந்துற்றாள்.

அவளைக்கண்ட மரகதவல்லியின் தாய் "மாணிக்கவல்லி, இப்போது என் பிரிய அலமு யார் என்று அறிந்துகொண்டாயா? முன்னொரு காலத்தில் 'அவள் யார் என்று அறிவாயோ கற்பகவல்லி. அவள் ஓர் விரியன் பாம்புக்குட்டி' என்று கூறியது உன் ஞாபகத்திலிருக்கிறதா?" என்று பரிகாசத்துடன் கேட்டாள்.

இந்த வார்த்தைகளைக் கேட்டவுடன் மாணிக்கவல்லி நாணித் தலை குனிந்தாள். அவள் தோற்றத்தைக் கண்ட மரகதவல்லி அவள் பேரில் அனுதாபம் கொண்டவளாக, "அம்மா, அவர்கள் வருந்தும்படி செய்யவேண்டாம். அவர்கள் என் பேரில் பொறாமை கொண்டிருந்தது உண்மையே. ஆனால் உங்களுக்குக் கெடுதல் வாராது காக்கும் பொருட்டே அவர்கள் அவ்விதம் கூறவேண்டியிருந்தது. மேலும் என் காரியங்கள் யாவும் சந்தேகத்துக்குரியவைகளாயிருந்தன வென்பது மறந்துவிடக்கூடாது. உங்கள் மேலுள்ள அன்பினாலே என் காரியத்தில் சந்தேகங்கொண்டு

அவ்வாறு செய்தது தப்பிதமாகமாட்டாது. அம்மா, அவர்களை நான் விரோதிப்பதில்லை. அவர்களுடைய அனுசரணை உங்களுக்கு அவசியமானது, அவர்கள் போன்ற கவலையுள்ள ஒரு தோழி உங்களுக்கு அவசியம். அவர்களுக்காக உங்களை மன்றாடுகிறேன் அம்மா, அவர்களை முன்போலவே உங்களுடன் இருத்திக்கொள்ளவேண்டும்'' என்று கூறுவதைக்கேட்ட கற்பகவல்லி உள்ளம் பூரித்தவளாக மாணிக்கவல்லியைப்பார்த்து, ''அலமு உனக்குப் பரிந்து பேசுவதைப் பார்த்தாயா?'' என்று சொல்லித் தன் மகளைப்பார்த்து, ''என் செல்வக குழந்தாய், உன் தந்தையின் தயாளகுணம் உன்னிடத்தில் விளங்குகிறது தன்னை வெட்டவரும் கோடரிக்காரனுக்கும் அரிய நிழல் கொடுக்கும் மரத்தைப்போலும் பொறுமையும் கொடையும உள்ளவளாகிய உன் மேன்மையான குணமே நமது குலத்தைப் பெருமைப்படுத்துகிறது. மதலாய்! உன்னைச் செல்வியாகப் படைத்ததே என் பாக்கியம்'' என்று சொல்லி அலமுவின் முகத்தில் முத்தமிட்டாள்.

பிறகு மாணிக்கவல்லியைப்பார்த்து, ''என் மகள் இஷ்டப்படிசெய். மேலும் மாணிக்கவல்லி, நான் உன்னை என் வேலையிலிருந்து நீக்கவில்லையே, நீ என் இத்தனை நாட்களாக என்னிடம் வரவில்லை?'' என்று கேட்டாள். இவள் கேள்விக்குப் பதில் கூறாத மாணிக்கவல்லி மரகதவல்லியின் கரங்களைப் பிடித்து முத்தமிட்டு '' கருங்குயில் குன்றத்தாசி! உம்மை அறியாதவளாகிய யான் செய்த கெடுதியை மன்னிக்கவேண்டும் '' என்று மன்றாடினாள்.

உடனே மரகதவல்லி அவளை அன்போடு பார்த்து "உம்மை யான் ஒருபோதிலும் விரோதித்ததில்லை. என் அன்னைக்கு ஒரு தாய்போலாகிய உங்களைக்கொண்டாடுகிறேனே யல்லது வேறல்ல. நீங்கள் மூன்று மாதகாலமாய் இங்கு வாராததின் காரணத்தைப்பற்றி அடிக்கடி என் தாயாரைக் கேட்டதுண்டு. என் அன்னைக்கு உம்போன்ற ஒரு துணை அவசியமானது. நீங்கள் இனி இந்தக் கருங்குயில் குன்றம் விட்டுப்போக வேண்டாம்" எனவே தெளிந்த குரலில் கருணையோடு புகலுவதைக் கேட்ட மாணிக்கவல்லி உள்ளம் உருகியவளாக மறுபக்கம் திரும்பி, "கற்பகவல்லி, இவளை மகளாகப் பெற்றதில் உன்போல பாக்கியம் பெற்றவர்கள் இல்லையென்றே சொல்லவேண்டும். இவள் கருங்குயில்குன்றத்து அரசகுலத்தை விளக்க வந்தவொரு மரகதமென்பதற்கு ஐயமில்லை. நான் அவளை இன்னுளென்று அறியாமல் அவளுக்குச்செய்த தீமைகளையெண்ணி அவள் முகத்தில் எப்படி விழிப்பதென்று மதித்தவளாக இதுகாறும் இங்கு வரவில்லை. இனி நான் உனக்கும் உன்மகளுக்கும் ஏவல் செய்வதில் சந்தோஷமுடையவளா யிருப்பேன்" என்று ஆத்திரத்தோடு மொழிந்தாள்.

கற்பகவல்லி.—என்மகள் மனதின்படி செய் என்று சொல்லி மறுபக்கமாகத் திரும்பினாள். அப்போது தான் விருந்தினர்களை உபசரிப்பதில் சற்று இளைப்பாற்றி யடைந்த யௌவன இராஜகிரி மன்னனும் மாரமார்த்தாண்டப் பிரபுவும் இவர்களை நோக்கி வந்துகொண்டிருந்தார்கள்.

கருங்குயில் குணறத்தரசன் தூரத்தில் வரும்போதே—"கற்பகவல்லி, உன்மகள் என்ன சொல்லுகிறாள்? உன்னை அரண்மனையிலிருந்து துரத்திவிடுவதாகவும் அவளே இந்த மாளிகைக்கு இராக்கினி என்பதாகவும் கூறுகிறாளோ?" என்று புன்சிரிப்புடன் மொழிந்துகொண்டே அருகில் வந்தார். இராஜகிரி ஜமீன்தாரும் சிரித்துக்கொண்டே தன் காதலியின் அருகில்வந்து மரகதவல்லியின் தோளகளின்மீது புழுங்கையை யூன்றிக்கொண்டு நின்றார்.

கற்பகவல்லி தன் கணவன மொழிந்த வார்த்தைகளைக்கேட்டுச் சிரித்துக்கொண்டே மகளைப் பார்த்து, "பிரிய குழந்தாய்! உன் தந்தை கூறியதைக் கேட்டாயோ? அவர் கூறுவதும் நியாயமாகவேயிருக்கிறது. புதிய தம்பதிகள் நீங்களிருவரும் சுகமாக வாழ்வதற்கு வயோதிகர்களாகிய நாங்கள் வேறு விடத்திற்குப் போய்விட வேண்டாமோ? மேலும் நான் ஒரு காலத்தில் உன்மீது கவிப்படைந்தவளாக 'என்னை விட்டுப்போகலாம்' என்று சொல்லியது உனக்கு ஞாபகமிருக்கிறதா? அதாவது மாணிக்கவல்லி உன்னை எனது அருங்கிளிப்புரத்து பூந்தோட்டத்தில் ஓர் அன்னியனுக்கு முத்தங்கொடுத்ததாகக் கூறினளே. அப்போது நான உன்னை அது விஷயமாகக் கேட்டபோது ஒன்றும் கூறமுடியாது என்று பதிலுரைக்கவில்லையா? நான உன்மீது சினங்கொண்டவளாக 'அஞ்சனவதி உன்னைக் கூட்டிடுகிறாள் அவளுடன் எத்தனை காலம் வேண்டுமானாலுமிருக்கலாம்' என்று புகன்றேனே" என்று கற்பகவல்லி சொல்லிக்கொண்டே யிருக்கும்

போது மரகதவல்லி தெளிந்தவளாக, "ஆம் அம்மா, நான் முதலில் என் தந்தையை இவ்விந்திய தேசத்தில் சந்தித்தபோது மாணிக்கவல்லி எங்களைப் பார்த்துவிட்டு உங்களிடம் கூறினாள். அதனைப்பற்றி ஜமீன்தாரும் அறிவாரே" என்று சொல்லித் தன் கணவன் முகத்தைப் பார்த்தாள். இராஜகிரி மன்னரும், ஆம்! ஆம்! என்று தலையசைத்துக்கொண்டார்.

இதுகளையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்த மாணிக்கவல்லி வெட்கித் தலைகுனிந்து பூமியைப் பார்த்து நின்றாள். அப்போது கற்பகவல்லி தன் புத்திரியைக்கட்டி முத்தமிட்டு, "என் செல்வக்குழந்தாய், நீ அப்போது எப்படி மனம் நொந்து இருக்கவேண்டும்?" என்று சொல்லி ஆனந்தக் கண்ணீர் சொரிந்தாள். மரகதவல்லி தன் தாயின் அன்பையும் அனுதாபத்தையும் கண்டு, "தாயே, நான் அந்த நாளில் வருந்தினேனென்பது உண்மையே. ஆனால் இன்று நமக்கு ஒரு குறையுமிருப்பதில்லை" என்று சொல்லி தன் கணவனைப் பார்த்து, "பிரபு, நீர் அந்நாளிலும் என் மட்டில் சந்தேகங்கொள்ளவில்லையே. உம்முடைய மனோதிடமே என்னை உற்சாகத்துடன் வேலைசெய்யத் தூண்டியது. ஆதலால் என் தந்தையின் நாமத்தைக் கறைப்படுத்தி நின்ற கொலைஞன் மர்மத்தைக் கண்டுபிடித்ததில் ஏற்பட்ட பெருமையனைத்தும் உமக்கே உரியதாகும்" என்றாள்.

இராஜகிரிமன்னன்.—"காதலி, உன்பெருமை என்னுடையதானால் என் சிறுமை உன்னுடையதல்லவோ?" என்று கூறி தனது அரிய காதலியின் முகத்தில் முத்தமிட்டான். இவர்கள் அன்பைப் பார்த்து

நின்ற மாரமார்த்தாண்டப்பிரபு தன் பத்தினியின் காதில் மெதுவாக, "இவர்கள் என்ன வாஞ்சையுள்ளவர்களாக விருக்கிறார்கள். இவர்களே உலகத்தில் புருடனும் மனைவியும் ஆவார்கள்" என்றார்.

கற்பகவல்லி, ஆம், ஆம் என்று தலையசைத்துக் கொண்டாள். இவர்கள் மெதுவாகப் பேசுவதைக் கண்ட இராஜகிரி ஜமீன்தார் மரியாதையுடன் சற்று விலகி இரண்டடி பின்வைத்தார். மரகதவல்லி தன் கணவன்போக விரும்புகிறார் என்று எண்ணியவளாக, "பிரபு, உங்களுடைய அறைக்குப்போக விரும்புகிறீர்களோ?" என்று கேட்டாள்.

இரா.—இல்லை. சற்று தோட்டத்தில் உலாவலாமென்று எண்ணுகிறேன். என்னுடன் வருவதில் உனக்கு சிரமமில்லாதுபோனால் நீயும் வாவாம் என்று சொல்ல இருவருமாக மாளிகையைவிட்டு வெளியே புறப்பட்டார்கள். இவர்களிருவரும் வாசற்படியண்டையில் வந்தபோதுதான் உக்கிரமசிங்கன் தன்னிருப்பிடத்திலிருந்தபடியே குதித்து, "ஆ! அவள்! அவளேதான்!" என்று கூவினான் என்று முன் அத்தியாயத்தில் கூறியுள்ளோம்.

இராஜகிரி ஜமீன்தாரும் அவர் மனைவி கருங்குயில் குன்றத்தரசியும் களங்கமற்ற மனமுடையவர்களாகத் தோட்டத்தில் உலாவிக்கொண்டிருந்தார்கள். நறுமணம் பொருந்திய மந்தமாருதம் புதிய மணாளர்களாகிய இவர்கள் மீது குளிர்ந்து வீசியது. காதலர் இருவரும் ஒருவர்மீது ஒருவர் சாய்ந்து பூவும் மணமும்போல ஒன்றுபட்டு கூடி ஆனந்தப்பரவசத்தில் அமிழ்ந்தியவர்களாகத் தோட

டத்தில் உலாவிக்கொண்டிருந்தார்கள். விசுவாச தாசன் உக்கிரமசிங்கனைப்பற்றிக் கூறிய விஷயம் அப்போது வரேந்திரன் மனத்தில் உதித்தது. தன் காதலியிடம் அது விஷயமாய்ப் பேச வாயெடுத்தான். உடனே வேறு எண்ணம் தோன்ற மௌனமாய் இருந்துவிட்டான் தன் மனைவி சலனமற்று இருக்கும்போது கலக்கத்தைக் கொடுக்கக்கூடிய உக்கிரமசிங்கன் செய்தியைக் கூறுவது அவளை வீணில் மயங்கச் செய்வதாகுமென்று மதித்திருந்தான். யௌவன வரேந்திரனே கொடிய உக்கிரம சிங்கனைப் பற்றி எண்ணும்போது கலங்கினனென்றால் பேதையாகிய தனது மனையாட்டி வருந்த நேரிடும் என்று எண்ணுவது ஆச்சரியமாகுமோ? இராஜஸிம் மன்னன் தன் மனதை வேறு விஷயத்தில் செலுத்தக் கருதியவனாக தனது பிரியையைப்பார்த்து, "காதலி, காலம் குளிர்ந்திருக்கிறது. நாம் சற்று கடலோரமாக உலாவச் சொல்லலாமா?" என்று கேட்டான்.

மரகதவல்லி தன் கணவனைச் சந்தோஷப்படுத்துவதே விதியாய்க் கொண்டவளாகையால் அதற்கிசைய இருவரும் தோட்டத்தைவிட்டுக் கோவிலின் வழியாக நடந்து கடற்கரையோரமாக சென்றார்கள். இருவரும் கோவிலின் புறமாக நடக்கும்போது அருகில் யாரோ நடக்கும் சப்தம் கேட்டது. வரேந்திரன் திரும்பிப் பார்த்தான். காற்றினல் மரங்களின் இலைகள் அசைந்து ஒலிக்கும் சப்தமன்றி வேறொன்றும் தென்படவில்லை. "பிரபு அங்கு என்ன பார்க்கிறீர்?" என்று மரகதவல்லி கேட்டாள்.

வரேந்திரன் தன் மனைவிக்கு என்ன சொல்லுவ

தென்று தோன்றாத சற்று நிதானித்து, "ஒன்றுமில்லை. கோவிலின் புறமாக யாரோ நடப்பதுபோல் சப்தம் கேட்டது. அது ஒன்றுமில்லை, காதலி, உன் தாதை இக கோயிலின் பலிபீடத்து அருகிருக்கும் பதுங்குமிடத்தில் இருந்த வந்த செய்தி இப்பொழுது என் ஞாபகத்தில் வருகிறது. அவர் இந்த மகத்தான கோட்டைக்கு அரசராயிருந்தும் கொலைக் குற்றம் புரிந்தவராகப் பாவிக்கப்பட்டு இங்கு பதுங்கி இருந்ததை எண்ண என் மனம் ஆயாசப்படுகிறது" என்று இருவரும் பேசிக்கொண்டே உன்னத உப்பரிகையின் வழியாகச் சென்று கடலோரத்தின் பாறைகளின் பக்கமாய் வந்தார்கள். மரகதவல்லி பாறைகளில் குதித்து செங்குத்தான பாறையில் வந்து நின்றாள் வசந்தன் அவளைப் பின்பற்றி நடந்து அவளருகில் வந்த மரகதவல்லியின் கரங்களைப்பற்றி அன்போடு பார்த்து, "காதலி, நீ இன்று இந்த பாறைகளில் குதித்து ஓடும் காட்சியானது எனக்குப் பழைய விஷயங்களை ஞாபக மூட்டுகிறது. நான் சிங்கள தேசத்தில் உக்கிரமசிங்கனால் என் நண்பர்களோடு கைது செய்யப்பட்டபோது நாங்கள் ஒரு குகையில் அடைக்கப்பட்டோம். அங்கு நாங்கள் அங்கஹீனப்பட நேர்ந்த சமயத்தில் நீ ஒரு வாள் வீரனைபோல் தோன்றி எங்களை மீட்டுவிட்டாய். பிறகு நாங்கள் கண்களைக்கட்டி குகைக்கு வெளியே கொண்டுவரப்பட்டோம். எங்கள் கண்கள் திறக்கப்பட யதேசசையடைந்தோம் என்ற ஆனந்தத்தோடு ஆகாயத்தையும் பூமியையும்வாழ்த்தி எங்கள் முன் ஒரு தேவதைபோல் தோன்றி எங்

களை யிட்டவள் யார் என்று எண்ணினேன். நான் என்னைச் சுற்றிலும் பார்த்தேன். அப்போது நீ பாறைகளுக்கிடையே வெள்ளைமான்போல் தத்திக் குதித்து உன் வீட்டை நோக்கி ஓடினாய். உன்னைக் கண்ட எனக்கு அப்போது உண்டாகிய ஆச்சரியத் தையும் பிரேமையையும் யாரால் சொல்லக்கூடும். பிரிய காதலி! அன்று எனக்கு அன்னியளாக இங் களப் பாறைகளைத் தாண்டிக் குதித்து ஓடிய நீ இன்று எனக்கு உன்னியளாக கருங்குயில் குன்றத் துப் பாறையில் குதித்து ஓடிவதைக்காண நனவோ கனவோ கதைபோலவோ சந்தேகிக்கிறேன்" என்று சொல்லித் தன் முகத்தை மரகதவல்லியின் முகத்திலே வைத்து, "காதலி, என........" என்று ஆரம்பிக்கும்போது அருகில் சப்தம் கேட்டது. திரும்பிப்பார்த்து, "ஆ! அவனா!" என்று கூவி ஒரு அடி முன் வைத்தான். அதே சமயத்தில் பாறை களுக்குக் கீழ் வீழ்த்தப்பட்டான்

இதைக்கண்ட மரகதவல்லி ஒன்றுந் தோன்றாதவளாகத் திகைத்து நின்றாள். உக்கிரம சிங்கன் அவளை அவள் கரத்தோடு சேர்த்துப் பிடித்து பாவைபோல் தூக்கினான் அப்போதுதான் ஆபத்து என்பதை உணர்ந்தவளாகிய அவளும் உக் கிரமசிங்கனை விரைக்கப் பார்த்தாள். அவளுக்கு என்ன செய்வதென்று தோன்றவில்லை. தன் காத லன் அவனால் பாறையின்கீழ் வீழ்த்தப்பட்டானே என்று எண்ணும்போது அப்படியே மூர்ச்சை யானாள்.



## 4-வது அத்தியாயம்.

### ஆ! இதுவென்ன!! என்மகள்!!!

குருங்குயில் குன்றத்து மாளிகையில் பழமையான கடியாரம் மணி பன்னிரெண்டு அடித்தது. விருந்தினர் யாவரும் நித்திரைபோய் விட்டார்கள். எங்கும் நிசப்தமாய் இருந்தது. குண்டோதரன் மாளிகையின் கதவுகளைச் சாத்திக்கொண்டே வந்தான். கடைசியாக பெரிய வாசற்படியண்டை வந்து கதவைத் தாளிடும்போது புதிய தம்பதிகளிருவரும் வெளியில் போன செய்தி ஞாபகத்தில் வரவே அவர்கள் உள்ளே வந்திருக்க வேண்டுமே என்று எண்ணியவனாக கதவைச் சாத்தப்போனான். மீண்டும் சந்தேகத்துடன் திரும்பி மாளிகையுள் சென்று புதிய தம்பதிகளின் பள்ளியறையைக் கிட்டினான். அறையில் விளக்குகள் அடக்கப்படாமலே பிரகாசித்துக் கொண்டிருந்தன. இன்னமும் அவர்கள் இங்கு வரவில்லையோ அல்லது இருவரும் தூங்காமலே உல்லாசமாய் விளையாடிக்கொண் டிருக்கிறார்களோ [illegible] எண்ணியவனாக கதவண்டையில் போனான். [illegible]றயிருந்து யாதொரு சப்தமும் கேட்கவில்லை. [illegible] கரத்தால் தீண்டினான். கதவு திறந்திருந்[illegible]ள்ளே போனவர்கள் அவசரத்தில் கதவைத் [illegible]வில்லையோ என்று சந்தே[illegible]வனாக மெது[illegible] கதவைத் திறந்தான். அவன் திறக்கும் போதும் அவர்கள் உள்ளே இருப்பார்களானால் அவ

சங்கை யாருமே என்று எண்ணினான். கதவு திறந்து விளக்கு ஒளி அவன் கண்களில் படவே திடுக்கிட்டான். படுக்கை அடுக்கிய மேனி குலையாதிருந்தது. அவர்கள் போஜனத்திற்குப் பிறகு இங்கு வரவேயில்லை என்பதைத் திட்டமாய் அறிந்து கொண்டான். தான் அறையில் வந்து பார்த்தது நன்மையாகவே முடிந்தது என்று எண்ணியவனாக வாசற்படியண்டையிற் போய் நின்றான். இராஜகிரி மன்னனும் கருங்குயில்குன்றத்து அரசியும் இதோ வந்து விடுவார்கள், இதோ வந்து விடுவார்களென்று எண்ணிய குண்டோதரன் மணி ஒன்று அடிக்கவே பயந்தான். இனி தோட்டத்தில் போய்ப் பார்ப்போம் என்று இடங்கொண்டு வெளியே புறப்பட்டான். அவன் எண்ணம் பலவாறான விஷயங்களை நாடியது: மாதுளை, திராட்சை முதலிய தோட்டம் யாவும் சுற்றிப் பார்த்தான், ஒருவரையும் காணவில்லை. குண்டோதரன் பயங்கொண்டான். அவர்கள் எங்கே போனார்கள் என்று எண்ணவே அவன் மனம் படபடத்தது. இதுவென்ன விபரீதம். காலையில் மண முடித்துக் கொண்டவர்கள் இப்போது எங்கே என்று எண்ணியவனாக உன்னத உப்பரிகையை நாடினான். ஆண்பறவையின் சிறகிலிருந்து சிறிது நீங்கி [illegible] அன்றில் பறவை ஒன்று வீறிட்டு அரட்டியது [illegible] டோதரன் உன்னத உப்பரிகை, கோவில். [illegible] டம் முதலிய இடம் யாவும் தேடிப் பார்த்தா[illegible] வரின் நிழல் முதலாய்க் காணப்படவில்லை. [illegible] தத்துடன் மாளிகையில் நுழைந்தான். கா[illegible] யில் தோட்டத்தில் தேடியபோது மறுபுறமிருந்து

உள்ளே வந்து விட்டார்களோ வென்று எண்ணி மறுபடியும் பள்ளி அறையை நாடினான். அறை திறந்தபடியே யிருந்தது. உள்ளே ஒருவரையும் காணவில்லை. கூண்டு இருக்கப் பறவை பறந்தோடி யதுபோல சென்ற இருவரையும் எண்ணவே குண்டோதரன் முகம் சவம்போல் வெளுத்தது. இனி என்ன செய்வதென்று அறியாதவனாக அப்படியே அசைவற்று நின்றான். சற்றுநேரத்திற்குப் பிறகு மறுமுறையும் வெளியே சென்று பார்ப்போம் என்று எண்ணிக்கொண்டே அவன் அறைக்குள் சென்று ஒரு லாந்தர் விளக்கை யெடுத்துக் கையிற் பிடித்துக்கொண்டு தனக்கு ஒரு துணைவன் வேண்டுவ தவசியமென்று எண்ணினான். இராஜகிரி மன்னனின் வேலைக்காரன் விசுவாசதாசன் ஞாபகம் வரவே உடனே சென்று அவனை எழுப்பினான். விசுவாசதாசன் திடுக்கிட்டு எழுந்தான். குண்டோதரன் அவனைப் பார்த்து, "உன் எஜமானனும் என் எஜமானியும் வெளியே போனார்களே, மறுபடியும் உள்ளே வந்ததைப் பார்த்தாயா?" என்று கேட்டான். விசுவாசதாசன் முகம்வெளுக்க உரத்த குரலாய், "ஐயோ! என்ன அவர்கள் பள்ளி அறையில் இருக்கவில்லையா?" என்று கேட்டான்.

குண்.—"இல்லை"

விசு.—"என்ன ஆச்சர்யம்!" என்று சொல்லி [illegible] திடீரென்று சாயங்காலம் கடை வீதியில் கண்ட உக்கிரமசிங்கனின் ஞாபகம் வரவே, "ஆ! மோசம்!" என்று கூவி யெழுந்தான். அவன் முகம் பயங்கரத் தோற்றமடைந்தது. அவனைக் கண்ட

குண்டோதரன் பயந்தவனாக "என்ன மோசம்? விசுவாசா, உன் எஜமானனையும் என் எஜமானியையும் பற்றி ஏதேனும் அறிவாயோ?"

விசு.—" இல்லை. ஆம். ஐயோ! அங்கிருக்கட்டும் வாரும் நாம் சென்று பார்ப்போம்" என்று சொல்லி எழுந்து நடந்தான். குண்டோதரன் அவன் சொல்லிய இருவிரோதமான சொற்களைப் பற்றி ஒன்றுமறியாதவனாக அவனைப் பின் தொடர்ந்தான். விசுவாசதாசன் முதலில் பள்ளி அறையைப் பார்த்தபிறகு வெளிவாசற்படி நோக்கி நடந்தான். குண்டோதரன் தான் முன் தோட்டத்திலும் கோவிலிலும் உன்னத உப்பரிகையிலும் பார்த்து வந்த சமாசாரத்தை விபரமாய் கூறினான். அவர்களை எங்கும் காணவில்லை என்று கூறக்கேட்டவுடனே விசுவாசதாசன் பின்னும் சந்தேகமடைந்தான். உக்கிரமசிங்கனைப் பற்றி எண்ணும்போது நடுங்கினான். தான் அவனிடத்திலகப்பட்டுத் தனது இரு காதுகளையும் பறிகொடுக்க நேர்ந்ததை எண்ணி இப்போது தன் உயிரையே யிழக்க நேரிடுமோ வென்று எண்ணியவனாக நடுநடுங்கினான். அவனைக் கண்ட கிழவேலைக்காரனான குண்டோதரன் பயந்தான். விசுவாசதாசன் நடுக்கத்தில் [illegible] கவே குண்டோதரன் விளக்கைக் கையிலேந்தி[illegible] அதனைத் தூக்கிப் பிடித்துக்கொண்டு முன்னே நடக்கலானான். விசுவாசதாசன் பின் தங்கி[illegible] லாமோ என்று வெண்ணினான். தன் எஜமா[illegible] விஷயமாக அப்படிச் செய்வது துரோகம்[illegible] என்று மதித்தான். பிறகு தன்னையும் தனது [illegible]

களையும் காப்பாற்றியவளாகிய மரகதவல்லியைப் பற்றி எண்ணும்போது தன்னை அவர்களுக்கு முழுதும் ஒப்புக்கொடுக்கச் சித்தமானான். அலமு தனக்கும் தன் எஜமானனுக்கும் செய்த உதவியை எண்ணவே தனது உயிரைத் திரணமாக மதித்துத் திடங்கொண்டு குண்டோதரனுக்கு முன்னே நடந்தான்.

திராட்சக்கொடிகளடர்ந்த தோட்டங்களையும் மாதுளை மரங்கள் நிறைந்த வனத்தையும் மரத்திற்கு மரம் கொடிக்குக் கொடி ஆராய்ந்தார்கள். அவர்கள் ஆராயும் தன்மையை ஒரு புலவன் கண்டு இருப்பானால் அவர்கள் கொடியாயும் மரமாயும் ஆனார்கள் என்று எண்ணி இவ்விதமாகத் தேடுகிறார்களோ என்று எண்ணியிருப்பான். சிலையாக மாறினார்களோ வென்று எண்ணியவர்கள் போல கோவிலில் ஒவ்வொரு இடமும் தேடினார்கள். பிறகு கடற்கரை ஓரத்திலும் பாறைகளிலும் தேடி அலைந்தார்கள். உன்னத உப்பரிகையில் ஒவ்வொரு இடத்தையும் உன்னிப்பார்த்து மனம் சலித்தவர்களாக உப்பரிகையின் முகட்டில் கடல் ஓரமாகவந்து நின்றார்கள். ஒரு செங்குத்தான பாறையே அந்த உப்பரிகையின் முடிவான இடமாக விருந்தது. விசுவாசதாசன் அந்தப் பாறைமீது நின்று நாற்புறமும் பார்த்தான். அலையே கடல் கொந்தளிப்பதை விட வேறு ஒன்றையும் பார்க்கக்கூடாத அந்த இடத்தில் அவர்கள் இரவில் என்ன காணக்கூடும்?

குண்டோதரன் சோர்ந்தவனாக அந்த உன்னத உப்பரிகையின் கடைசி தூணில் சாய்ந்து தரையில் உட்கார்ந்தான். விசுவாசதாசன் பாறைமீது

நின்று இனி என்னசெய்யலாம். அவர்களென்ன வானார்களோ வென்பதைப்பற்றி எண்ணாத வெண்ணமெல்லாம் எண்ணலானான். கடல் அலைகள் எழும்பி வேகத்தோடு பாறையில் மோதி ஆரலிக்கும் சத்தத்தைவிட வேறு ஒன்றும் காணப்பட வில்லை. விசுவாசதாசன் இனி அவர்களை மாளிகையிலேயே தேடவேண்டும் அல்லது இவர்களைப்பற்றி மாளிகையிலுள்ளவர்களுக் கெல்லாஞ் சொல்லவேண்டும் என்று தனது உள்ளத் தில் தீர்மானித்து பாறையை விட்டு உன்னத உப்ப[illegible]கைக்குத் தாண்ட கால் எடுத்தபோது வெண்[illegible]மான ஏதோ வொன்று பாறைகளுக்கிடையே காணப்பட்டது. விசுவாசதாசன் இதுவென்ன? கடல் நுரையோ? அல்லது......என்று எண்ணிக்கொண்டே கூர்ந்து பார்த்தான். பிறகு குண்டோதரனை விளக்கு காண்பிக்கச்சொல்லி குனிந்து முகத்தைப் பாறையில் ஊன்றிக் கவனமாய்ப் பார்த்தான். வெள்ளிய வஸ்திரம் தெரிந்தது. உடனே கீழே இறங்கிப் பார்க்க வழி தேடினான். இவன் முயற்சியைக் கண்ட கு[illegible]டோதரன் இவனுக்கென்ன பித்து பிடித்ததோ வென்று எண்ணினான். அதற்குள்ளாக விசுவாச தாசன் வரேந்திரனைத் தூக்கினான். அவன் [illegible] கிரி மன்னனைத் தீண்டவும் உரைத்த பனி போல குளிர்ந் திருப்பதைக் கண்டு வீரிட்டுக் கூவினான், குண்டோதரன் பயந்தவனாக அசைவற்று நின்று பார்த்துக் கொண்டிருந்தான். விசுவாசதாசன் [illegible] மானனைத் தோள்மீது சுமந்து வந்து உன்னத [illegible]

பரிகையில் குண்டோதரனுக்குச் சமீபமாய்க் கிடத்தினன்.

இராஜகிரி மன்னனைக் கண்டவுடன் குண்டோதரன் "கருங்குயில் குன்றத்தரசி எங்கே?" என்று கேட்டான். விசுவாசதாஸன் மறுபடியும் சென்று பாறைகளுக்கு இடையே தேடினன். எங்கு தேடியும் அவளகப்படவில்லை. பிறகு குண்டோதரன் அணையில் வந்து அவர்களைக் காணேம். இவரை நாம் மாளிகைக்குக் கொண்டுபோவோம் என்று சொல்ல இருவருமாக வரேந்திரனைத் தோள்மீது சுமந்து கொண்டு மாளிகையை நாடினர்கள். மாளிகையில் அசதி குடிகொண்டது போல எங்கும் நிச்சப்தமாயிருந்தது. விசுவாசதாசனும் குண்டோதரனும் இராஜகிரி மன்னனைக் கொண்டுபோய் முற்றத்தில் போடப்பட்டிருந்த ஒருசோபாவில் படுக்க வைத்தார்கள். இனி என்ன செய்வது என்று இருவரும் அறியாதவர்களாக சற்று நேரம் திகைத்து நின்றார்கள். விசுவாசதாசனே தனது எஜமானன் ஸ்திதியை எண்ணியிருந்தான். சற்று ஆடைகளைவிலக்கி எங்கெனும் காயம் பட்டிருக்கிறதோ வென்று பார்த்தான். எங்கும் இரத்தம் ஒழுகிறதாகத் தெரியவில்லை. தேகத்தில் காயமில்லாது இப்படிக்கு குளிர்ந்து போக வேண்டிய காரணம் என்னவென்பதை உணரக் கூடாதவனாகத் தன்னைச் சுற்றிலும் பார்த்தான். குண்டோதரன் கருங்குயில் குன்றத்தரசியின் கதி என்னவானதோ என்று ஏக்கங்கொண்டவனாக அவளைப்பற்றி அவளுக்குரிய தாய் தந்தையரிடத்தில் கூற வேண்டும் என்று எண்ணினன். அவர்கள் இச்செய்தியைக்

கேட்டும் மருமகன் ஸ்திரியைக் கண்டும் எப்படி மனம் சகிப்பார்கள் என்று எண்ணும்போது குண்டோதரன் அவர்களிடத்தில் எப்படிக் கூறுவது என்று அறியாதவனாக விழித்தான். பிறகு அவர்களால் இவர்களுக்கு ஏதேனும் பரிகாரம்செய்யக் கூடும் என்பதை எண்ணி சற்று திடங்கொண்டு மாரமார்த் தாண்டப் பிரபுவின் அறையை நாடிச் சென்றான். அரசன் அறை தாளிட்டு இருந்தது. குண்டோதரன் அவர்கள் நன்றாய்த் தூங்குகிறார்கள் என்பதைத் தெரிந்து கொண்டான். அறையின் கதவை மெது வாய்த் தட்டினான். மூன்றுமுறை தட்டியும விழிக்க வில்லை. பிறகு தன எஜமானியின் அவசியத்தை எண்ணி சற்று உரக்கத தட்டினான. கருங்குயில் குரைத்துத் திடுக்கிட்டெழுந்து யார்? என்று கேட்க குணடோதரன நாக்குழற "அரசே!... அரசி...அரசன்" என்றான.

மாரமார்த்தாண்டப் பிரபு ஒன்றும உணராதவ ராக, "என்ன குண்டோதரா, எனன உளருகிறாய்?' என்று கேட்டுக்கொண்டெழுந்து கதவைத் திறந்து வெளியெ வந்தார். குண்டோதரனின் முகத்தைக் கணடு திடுக்கிட்டார். "என்ன சமாசாரம்? கூறு" என்று அதிகாரத்துடன் கேட்டார்.

குண்டோதரன் பயந்தவனாக "அரசே! என்ன கூறுவேன்......

மார.—குண்டோதரா, என்ன மாளிகையில்" தீ மூண்டதா? கோட்டையில் கள்ளர் புகுந்தனரோ? என்ன? சீக்கிரம் சொல். ஆலசியம செய்யாதே என்றார்.

குண்டோதரன் "அவைகளெல்லாம் இல்லை" என்று சொல்லி அசைவற்று நின்றான். மாளிகையில் தீ மூளவில்லை. அடிவயிற்றில் தீ மூண்டது. கோட்டையில் கள்வர் புகவில்லை. ஆனால் அரசிகாணாமற் போனாள். என்பதைக் குண்டோதரனால் எப்படி கூறக்கூடும்? மாரமார்த்தாண்டப் பிரபு குண்டோதரனால் ஒன்றும் அறியக் கூடாதவராக அவனை விரைக்கப்பார்த்தார். பணியாளன் பயந்தவனாக, "பிரபு! என்னைத் தொடர வேண்டுகிறேன்." என்று சொல்லி இராஜகிரி மன்னனை வளர்த்திருக்[illegible]சோபாவை நோக்கி நடந்தான். குண்டோதரனைப் பின்தொடர்ந்து சென்ற மாரமார்த்தாண்டப் பிரபு இராஜகிரி மன்னனைக் காணவே "ஆ! இதுவென்ன!! என்மகள்!!! அலமு! மரகதம்!" என்று கூவினார்.



# 5-வது அத்தியாயம்.

---

## புத்தி பேதித்து விட்டது.

மாராமார்த்தாண்டப் பிரபு நடந்த சங்கதியாவும் குண்டோதரனால் அறிந்துகொண்டு இன்னது எண்ணுவது என்று அறியாதவராகத் தன் மருமகனைப்பார்த்தார். உடனே ஓர் வைத்தியர் வேண்டும் என்று கூறுவதைக்கேட்ட குண்டோதரன விவாகத்திற்கு வந்திருந்த விருந்தினர்களில ஒருவர் தேர்ந்த மருத்துவர் என்பதை அறிந்தவனுகையால் அவர் அறையை நோக்கி ஓடினன். அப்போது விசுவாசதாசன் அரசனிடத்தில் தான் சாயங்காலம் கடைவீதிக்குச் சென்றிருந்ததையும அது விஷயமாகத் தன் எஜமானனிடம் கூறியதையும் விவரமாய்ச் சொன்னன். இதனைக் கேட்ட அரசன் அப்படியே அருகிலிருக்கும் ஆஸனத்தில் பொத்தென்று விழுந்தான்.

அது சமயத்தில் வைத்தியரும் அங்கு வந்து அவர் இராஜகிரி மன்னனைப் பரிசோதித்துத் தலையசைத்துக் கொண்டார். அதே தருணத்தில் "ஐயோ! இதுவென்ன?" என்று கூவும் சப்தம்கேட்க எல்லோரும் திரும்பிப் பார்த்தார்கள். கற்பகவல்லி அப்படியே மாக்கல் ஸ்வரூபம்போல் அசைவற்று நின்ருள், தன் கணவன் குண்டோதரனல் அழைக்கப்பட்டபோதே விழித்துக் கொண்டவள் ஏதோ விசேஷ மென்று எண்ணினள். பிறகு மாராமார்த்

தாண்டப் பிரபு வெகு நேரமாகியும் திரும்பி வாராதது கண்டு என்ன விசேஷமென்று பார்க்க மெதுவாய்த் தன் அறையைவிட்டு எழுந்து வந்தாள். இராஜகிரி மன்னனை வளர்த்தி யிருப்பதையும் மற்றவர்கள் அவனைசசுற்றியிருக்கும் தன்மையையும் காணவே பயந்தவளாக, "ஐயோ! இதுவென்ன?" என்று கூவினாள்.

அவள் தன்மையைக் கண்ட அவள் கணவன் எனனசெய்வான்? பிளவுபடும் தன் இருதயத்திற்கே பிறரிடத்தில் ஆறுதல் எதிர்பார்க்கும் மாரமார்த்தாண்டன் கற்பகவல்லிக்கு எபபடி ஆறுதல புகட்டக் கூடும்? அவள் செவ்வரிபடர்ந்த கண்களில் நீா பெறுக வைத்தியரைப் பார்த்தாள். "இவருக்காக ஆயாசப படவேணடாம். அரசே, இவருக்கு யாதொரு அபாயமும் இருப்பதில்லை. திடுக்கிடச்செய்த சம்பவத்தால் அல்லது தலையில் ஓடும்உணர்ச்சி நரம்பில் பட்ட பலத்த அடியால் ஏற்பட்ட மூர்ச்சை அல்லது வேறல்ல. இவருககுக் காயம் ஒன்று மிருப்பதில்லை. பயப்படவேண்டாம்" என்று சொல்லித் தன மடியிலிருந்த ஒரு உப்புத் திராவகத்தை முகராச செய்து பிறகு ஒருவித மருந்தை நாவில் தடவினார். வைத்தியர் செய்யும் காரியம் யாவும் கவனித்தவளாகிய கற்பகவல்லி தன் கணவனருகே வந்து கண்களை இமைக்காது இராஜகிரி மன்னனைப் பார்த்து நின்றாள். சற்றுநேரததிற்கெல்லாம் வீரேந்திரன் மெல்ல கண் திறந்தான். அவனையே பார்த்திருந்த கற்பகவல்லி தன் மருமகனருகே சென்றாள். இராஜகிரிமன்னன் கண்திறந்து சுற்றுமுள்ளவர்களை ஒரு

முறைப்பார்த்தான். அவன் தேடும் பொருள் அவன் கண்களுக்கு எட்டவில்லை என்று கண்டவுடனே கண்களை மூடிக்கொண்டான். சற்றுநேரம் அசையாதிருந்து பிறகு துள்ளி ஆசனத்திலிருந்து எழுந்து நின்றான். இதனைக் கண்ட யாவரும் திடுக்கிட்டார்கள். கெடியாரமும் மணி மூன்று அடித்தது. உடனே வரேந்திரன் முகம் மாறி விகாரத் தோற்றம் அடைந்தது. சுற்றுமுள்ளவர்களைப் பார்த்து "விசுவாசா, என கத்தி, என் கைத்துப்பாக்கி முதலிய யாவும் கொண்டுவா. ஆ! அவன்...அவனை .." என்றுசொல்லிப் பற்களை நெற நெற வெனக் கடித்தான்.

கற்பகவல்லி தன் மருமகன் கோலத்தைப் பார்த்து இதுவென்ன அதிசயம் என்று எண்ணியவளாக, "பிரபு! உமக்கு இப்போது ஆயுதங்கள் எதற்கு. உம்மனைவி எங்கே? நீர் மூர்ச்சையானதின் காரணம் என்ன? என் மகள் உம்மைக்காண வரவில்லையா? உமக்கு இப்போது எப்படி இருக்கிறது?" என்று பலகேள்விகளை ஒருங்கே கேட்டாள். இராஜகிரிமன்னனோ ஒரு கேள்விக்குப் பல விஷயம் கூற வேண்டியவனாயிருக்க கற்பகவல்லியின் பல கேள்விகளுக்கும் எப்படி பதில் கூறுவான்? அவன் மனைவி மரகதவல்லியைப்பற்றி அவளுக்கு என்ன சொல்லுவது என்பதை அறியாதவனாக கற்பகவல்லியைப் பார்த்து அசைவற்று நின்றான்.

மாமார்த்தாண்டப்பிரபு தன் ஆஸனத்திலிருந்து எழுந்து வரேந்திரன் கைகளைப்பிடித்து அன்போடு பார்த்து "என்ன நடந்தது? என் பிரிய மகளெங்கே? பயப்படவேண்டாம். காலம் செல்லு

வது நமக்குப் பிரதிகூலமாய் முடியக்கூடும். வீரேந்திரா, என்ன நேர்ந்தது?" என்று அனுதாபத்துடன் கேட்டார்.

இராஜகிரி.—அரசே! நான் என்ன சொல்வேன்! உம் மகளை அவன் கொண்டுபோனான்.

மார.—அவன் யார்? உக்கிரம சிங்கனா?

வீரேந்திரன். 'ஆம்,' அரசே' என்று சொல்லி முடிக்குமுன் கற்பகவல்லி "ஐயோ! என் மகள் போய்விட்டாளா என்ன உக்கிரமசிங்கனா கொண்டு போனான்?" என்று கூறி நிலத்தில் விழுந்தாள். கருங்குயில் குன்றத்து அரசனுக்கு தன்மகள் உக்கிரமசிங்கன் கையில் பட்டாளே என்கிற வேதனை ஒருபுறமிருக்கத் தன் மனைவியின் கோலத்தைக் காண சகியாதவராக கண்களில் நீர் வடித்தார்.

இவர்கள் இப்படியிருக்க மரகதவல்லி காணமற் போன செய்தி மாளிகையெங்கும் பரவியது. கருங்குயில் குன்றத்து மாளிகையில் விவாகத்திற்கு வந்திருந்த விருந்தினர் பலரும் இச்செய்தியைக்கேட்டு அவரவர்களிஷ்டப்படி பேசத் தொடங்கினார்கள். மாளிகை எங்கும் மணப்பெண் காணமல் போய் விட்டாள் என்கிற ஒரே சப்தமாயிருந்தது. இது காறும் வருந்திக்கொண்டிருந்த மாரமார்த்தாண்டப் பிரபு எழுந்து கோட்டையிலுள்ள வேலைக்காரர்களையும் மெய்க்காவலர்களையும் படைவீரர்களையும் ஏவி நாடு நகர் எங்கும் மரகதவல்லியைத் தேடச் செய்தார். தானே சில வேலைக்காரர்களுடன் ஒருபுறமாகத் தேடப்புறப்பட்டார். இராஜகிரிமன்னனும்

வேறு சில ஆட்களோடு மறுபுறம் தேடத் தலைப்பட்டான்.

வாசகர்களே! மரகதவல்லி உக்கிரமசிங்கனால் களவாடப்பட்ட செய்தி தெரிந்தவர்களாகிய இவர்கள் இப்படி மதியீனமாய் நாடு நகர்களிலும் மாட மாளிகைகளிலும் தேடுவதைக்காண உங்களுக்கு ஆச்சரியமுண்டாகலாம். ஆனால் அவர்கள் உக்கிரமசிங்கன் இவ்வளவு சீக்கிரமாக இத்தேசத்தைவிட்டு மரகதவல்லியைக் கொண்டுபோய் விடுவான் என்று எண்ணவில்லை. உள்ளூரிலேயே எங்காவது அவனுக்கு அனுகூலமானவிடத்தில் அவளை வைத்திருப்பான் என்பது அவர்கள் எண்ணம். ஆதலால் தான் அவர்கள் இப்படித் தேடினார்கள். மரகதவல்லியோ எங்கு தேடியும் அகப்படவில்லை.

கதிரவன் குணபுலத்தெழுந்தான். மணியும் எட்டு அடித்தது. மரகதவல்லியை எங்கு தேடியும் காணாத கருங்குயிலை குன்றத்து அரசன் மகளைக் காணாத துன்பம் ஒருபுறமிருக்க தன்மனைவியின் கதி என்னவானது என்கிற கவலை மேற்கொண்டவனாய் மாளிகையை யடைந்தான். கற்பகவல்லி அவளை அறைக்குள் கொண்டுபோய்ப் படுக்கையில் கிடத்தப்பட்டிருந்தாள்: மாரமார்த்தாண்டப்பிரபு அவள் அறைக்குள் சென்று தனது அன்புள்ள மனையாட்டியைப் பார்த்தான்.

கற்பகவல்லி தன் கணவனைக் கண்டவுடன் குதித்து எழுந்து, "நாதா! என் மகள்" என்றாள் கருங்குயில் குன்றத்தரசன், அவளுக்கு என்ன கூறுவது என்று உணராதவனாக, "கற்பகவல்லி! அவள்".

என்று கூற வாயெடுக்குமுன் "ஓ! அவள் இறந்தாள். என்னைவிட்டுத் துறந்தாள். மரகதம்! மரகதம்!!" என்று சொல்லி அரசன்மீது விழுந்து புரண்டு அழுதாள். மாரமார்த்தாண்டன் மகளை இழந்த துயரம் ஒருபுறம வாட்ட தன்மனைக் கிழத்தியின் கோலத்தைக்காண சகியாதவராக, கற்பகவல்லி! மரகதவல்லி! என்று மாறி மாறி வாயால் பிதற்றி அழுதார். சற்றுநேரத்திற்கெல்லாம் கற்பகவல்லி அரசனைவிட்டு படுக்கையில் சாய்ந்தாள். பிறகு "ஆ! ஆஹா! என்ன ஆச்சர்யம்" என்று கூவி சிரித்தாள். அவள் மாறுதலைக்கண்ட அரசன தன் பத்தினியை உற்று நோக்கினர்

கற்:—" என்ன அழகிய கனவு, ஆ. ஆ!!" என்று பின்னும நகைத்தாள் "மாணிக்கவல்லி, என் மகள் கடலில் விழுந்து இறந்தவள் என்னை வந்து அடைந்ததாகவும் அவளால் என் கணவர்மீதிலிருந்த அபவாதம் நீங்கியதாகவும் பிறகு. நான் என் நாயகரோடு சுகஜீவியாயிருப்பதாகவும் கடைசியாக என் மகளை இராஜகிரி மன்னனுக்கு விவாஹம்செய்து கொடுத்து களிப்படைந்ததாகவும் கனவு கண்டேன. என்ன கனவு பார்த்தாயா? மாணிக்கவல்லி, என்ன அழகிய கனவு. நான் தூக்கத்திலிருந்து விழித்ததற்காகவே வருந்துகிறேன். இன்னமுஞ் சற்று விழிக்காதிருப்பேனேயானல் என்ன நன்மையாக விருந்திருக்கும்" என்று பலவிதமாகப் பிதற்றுவதைக்கேட்ட மாரமார்த்தாண்டப் பிரபு திடுக்கிட்டார். பஞ்சணையில் கிடக்கும் தன் மனைவியின் கரத்தைப்பற்றி,

"காதலி! என்ன கூறுகிறாய்?" என்று வினயமாய்க் கேட்டார்.

கற்.—ஐயா! நீர் யார்? இங்கு எப்படி வந்தீர்? மாணிக்கவல்லி.

மார.—பிராணகாந்தி! என்னைத் தெரியவில்லையா? உன் கணவனை மறந்தாயோ? ஆ கற்பகவல்லி!

கற.—என் கணவனா? ஆ! அவர்...என்ன கனவு! ஆ ஹா ஹா! மாணிக்கவல்லி......

மார.—கற்பகவல்லி, உன் மகளை இழந்ததில் உன் புத்தியை இழந்தாயோ? இது என்ன? காதலி, என்னைப் பார் என்று கூறி அவள் கரத்தைப் பிடித்தார். அப்போது "கனவு! கனவு! கனவு! ஆ, மாணிக்கவல்லி," என்று கூவினாள்.

அது சமயத்தில் வெளியில் சென்றிருந்த மாணிக்கவல்லி தன்னைப் பலமுறையும் கூப்பிடும் சப்தம் கேட்டு உள்ளேவந்து அரசியண்டையில் சென்று "கற்பகவல்லி, என்னை அழைத்தாயோ?" என்று கேட்டாள்.

கற்.—ஆ! ஆ! கனவு!

மாணி.—என்ன கற்பகவல்லி! இப்போதா கனவு கண்டாய்?

கற்.—ஆம், கனவு! என் மகளையும், என் கணவரையும் கண்டதாகக்கனவு—ஆஹா! என்ன கனவு!! என்ன கனவு மாணிக்கவல்லி!!! என்றாள்,

இதனைக்கேட்ட மாணிக்கவல்லி ஒன்றும் விளங்காதவளாக கருங்குயில் குன்றத்தரசரைப் பார்த்தாள். அரசன் தன் கரங்களில் சிரசைத் தாங்கியவனாக அப்படியே அழுதுகொண்டிருந்தான். பிறகு

ஒருமுறை தன் பிரியைப் பார்த்து "காதலி! என்னைப்பார்" என்றார்.

கற்,—நீர் யார்? மாணிக்கவல்லி, இவர் நமது அறைக்குள் எப்படி வந்தார்" என்றாள். இதனைக் கேட்ட மாரமார்த்தாண்டப் பிரபு துயரம் தாளாதவராக அந்த அறையை விட்டு வெளியே வந்தார். ஒரு ஞாபகம் வரவே குண்டோதரனைக்கூப்பிட்டு வைத்தியரை அழைத்துவரும்படியாகக் கட்டளையிட்டார். உடனே குண்டோதரன் ஓடி மருத்துவரை அழைத்து வந்து அரசன்முன விட்டான். அரசர் வைத்தியரைப் பார்த்து தன் மனைவியைக் கண்டு வரும்படியாகத் தெரிவித்து கூடத்திற்கு வந்தார்.

அப்போதுதான் ஊரெங்கும் தேடித் திரிந்து அலுத்தவனாகிய இராஜகிரி மன்னன் மாளிகையுள் நுழைந்தான். அவன்முகம் வாடியிருந்ததென்று நாம் கூறவும் வேண்டுமோ? கூடத்தில் கருங்குயில் குன்றத்து அரசரைக்காணவும் துன்பம் தாளாதவனாக, "பிரபு," என்று பிரலாபித்தான். அதனைக் கண்ட மாரமார்த்தாண்டப் பிரபு கண்களில் நீர் பெருக "என்ன செய்வேன்! எல்லாம் இழந்தேனே!" என்று கதறினார், இன்பதுன்பங்களை ஆண்டு அனுபவித்த தீரபுருடனாகிய மாரமார்த்தாண்டப்பிரபுவே குழந்தைபோல் கதறினார் என்றால் தன் அரிய காதலியை இழந்த யௌவன வீரேந்திரன் பெண்பிள்ளை போல ஓலமிட்டு அழுதானென்பதில் என்ன ஆச்சரியம்? மேலும் மணநாள் மாலையிலேயே காதலியைப் பறிகொடுப்பதென்றால் யார் சகிக்கவல்லார்?

சிறிது நேரம் செல்ல அழுது கொண்டிருந்த

யௌவன வரேந்திரன் அரசரைப் பார்த்து "பிரபு, தங்கள் மனைவி எங்கே?" என்று கேட்டான். இந்தக் கேள்விக்கு கருங்குயில் குன்றத்தரசன் என்ன பதில் சொல்லக்கூடும்? வரேந்திரன் முகத்தை உருக்கத்தோடு பார்த்தார். அதே சமயத்தில் வைத்தியரும் அங்கே வந்தார். அவரைககண்டவுடன் மாரமார்த்தாண்டப்பிரபு அவசரத்தோடு "என்ன விசேஷம்?" என்று கேட்டார்.

வைத்தியர்.—அரசே! திடுக்கிடச் செய்ததொரு சம்பவத்தால் புத்தி பேதித்து விட்டது என்று மெதுவாய்க் கூறினார்.

இதனைக் கேட்ட இராஜகிரி மன்னன் வியப்போடு, "யார்? யாருடைய புத்தி பேதித்து விட்டது?" என்று ஆத்திரமாகக் கேட்டான்.

வை.—வரேந்திரரே! கருங்குயில் குன்றத்து அரசி கற்பகவல்லி தேவியின் புத்தி பேதித்து விட்டது என்றார்.

இதனைக் கேட்ட யௌவன ஜமீன்தார் அசைவற்று மரம்போல் நின்றார். பூமியைப் பார்த்த வண்ணமாகவே அழுதுகொண்டிருந்த மாரமார்த்தாண்டப்பிரபு தலைநிமிர்த்தி இராஜகிரி மன்னனைப் பார்த்து, "வரேந்திரா, பெண்கள் போல நாம் வருந்திக்கொண்டிருப்பதில் பிரயோஜனமில்லை. இந்த மாளிகையில் இனி நமக்கு வேலையில்லை. நாம் உன் மனைவியைத் தேடும் தொழிலில் முயலவேண்டும். வரேந்திரா! உக்கிரமசிங்கன் அவளை நெருங்கியதை நீ கண்டிருப்பதால் அவள் அவனால் சிங்கள நாட்டிக்குக் கொண்டுபோகப்பட்டிருப்பாள் என்பதில் சக்

தேகமில்லை. சிங்கத்தை அதன் குகையிலேயே எதிர்ப்பதுபோல நாம் அவன் மலைகளை வளைத்துப் போராடி அவனை வதைத்து உன் மனைவியை மீட்டு வரவேண்டும். இனி ஒரு கணமும் தாமதம் செய்ய லாகாது " என்று ஆத்திரத்தோடு புகன்றார்.

இராஜகிரி.—"ஆம் அரசே! அக்கொடியனை என் வாளால் வதைத்து உமது மகளை மீட்டு வருவேன். இப்போது இலங்கையை நாடிச்செல்வோம. பிறகு..." என்று சொல்லிக்கொண்டு உற்சாகத்துடனெழுந்து நடந்தான்.

அவனை மனே திடத்தைக்கண்ட கருங்குயில் குன்றத்தரசர் தைரியமடைந்தவராக எழுந்து அங்கு வைக்கப்பட்டிருக்கும் மணியை அடித்தார். உடனே ஒரு மெய்க்காவலாள் ஓடிவர, "இன்று பகல் இரண்டு மணிக்குள்ளாக ஒரு கப்பல் இலங்கைக்குப் போகத் திட்டமாகவேண்டும். பெருத்த சேனைகளும் பலத்த ஆயுதங்களும் கப்பலில் ஏற்றப்பட்டிருக்கவேண்டும். யாங்கள் மூன்று மணிக்குள்ளாக இவ்விடத்தை விட்டு வெளியேறுவோம். இதனை அறிவி" என்று கூறவும் மெய்க்காவலாள் தலை வணங்கி வெளியே சென்றான்.



## 6-வது அத்தியாயம்.

---

### மீளவழியில்லை.

மரகதத்தை மண்ணுள் தேடுவதுபோல மரகத வல்லியைக் கருங்குயில் குன்றத்தில் மூலைமுடுக்குகள்தோறும் தேடிக்கொண்டிருக்க வல்லாள உக்கிரமசிங்கனால் களவாடப்பட்டுக் கடலில் பாய் கட்டிய கப்பலில் இலங்கையை நோக்கிக் கொண்டு போகப்பட்டாள். துஷ்டர்களுக்குச் சார்பாகக் காற்றுவீச பாய் மாக்கப்பல் வேகமாய்ச் சென்றது. ஆகாயமும் கடலும் ஒன்றுசேர்ந்ததுபோல ஒரே நிறத்தை விளக்கி நின்றது. கடல் கொந்தளிப்பதால் உண்டாகிய நுரைகள் வானத்தின் வெள்ளிய மேகத்தின் நிறத்துக்குச் சமானமாயிருந்தன.

கணவனை விட்டுப்பிரித்து உக்கிரமசிங்கனால் களவாடப்பட்டுக் கொண்டுபோகப்படுகிற மரகதவல்லி பாய்க்கப்பலின் மேல்தட்டில் மெய்ம்மறந்து தூங்குவதுபோல் இருந்தாள். உக்கிரமசிங்கன் அவளைத் தீண்டும்போதே மெய்ம் மறந்தவளாகிய அலமு இன்னும் மூர்ச்சை தெளியாமலே இருந்தாள். அவளருகே உட்கார்ந்து அவள் முகாரவிந்தத்தைக் கண்டு களிப்பவனாகிய உக்கிரமசிங்கன் அவளை இமைக்காது பார்த்துக்கொண்டிருந்தான். மரகதத்தின் மதிமுகம் இருளாகிய அவன் மனதைக் குளிரச்செய்வதுபோல மனம் பூரித்திருந்தான்.

கண்டகன் தேர்ந்த மாலுமிபோல தன் சிறு கப்பலைக் காற்றின் வல்லமையால் நடத்திக்கொண்டிருந்தான். தேனவேசரியோ சுமக்கும் கழுதை களிக்கும் தன்மைபோல உற்சாகத்துடன் கண்டகனுக்கு வேண்டிய உதவி செய்துகொண்டிருந்தான். கப்பலும் நடுக்கடலில் சென்றது. காலம், செல்லச்செல்ல மரகதவல்லி மூர்ச்சை தெளிந்து மெதுவாகக் கண்களைத் திறந்தாள். தன்னைச்சுற்றி யுள்ளவர்களை ஒருமுறை பார்த்தாள். உடனே தன் நிலை இன்னதென்று அறிந்துகொண்டாள். உக்கிரமசிங்கன் அவள் முகத்தில் விளங்கும் சிறு மாறுதலையும் கவனித்தவனாக அவளைப் பார்த்து, "அனங்கரன் மகளே, பயப்பட வேண்டாம். நான் உனக்கு ஒரு தீமையும் செய்ய மாட்டேன். நீ விரும்புவாயானால், உனக்கு வேண்டிய பணியாவும் செய்யச் சித்தமாயிருக்கிறேன்" என்றான்.

இவன் வார்த்தைகளைக் கேட்ட மரகதவல்லி அவனுடன் என்ன பேசலாம், இப்போது என்ன செய்யலாம், என்பதைப்பற்றி யோசிக்கலானாள். தன் கணவன் இராஜகிரி மன்னனைப்பற்றி எண்ணும்போது அவள் இருதயம் பிளந்து விடும்போலிருந்தது. அவரை உக்கிரமசிங்கன் பாறையிலிருந்து கீழே தள்ளியதை எண்ணவே அவள் அங்கமெல்லாம் நடுநடுங்கியது. பிறகு அவர் என்ன கதியானார் என்பதை எண்ணும்போது அவள் மெய் சிலிர்த்தது. மெதுவாய்க் கண்களைத் திறந்து உக்கிரமசிங்கனைப் பார்த்தாள். சிங்கள நாட்டுக்களவன தன் கணவருக்குக் கொலையாளியானானே என்று எண்ணும்போது அவள்

துக்கம் சகிக்கக்கூடாததாயிருந்தது. உக்கிரமசிங்கன் இறந்தானென்று தேசமெங்கும் புரளியாகவிருக்க தனக்கும் தன்னைச் சேர்ந்தவர்களுக்கும் துன்பம் விளைவிக்க இப்போது எங்கிருந்து முளைத்தான் என்று ஆலோசித்தாள். சிங்கள தேசத்தைவிட்டு இந்தியதேசம் வருமுன் தன் தந்தை எழுதிய ஓர் கடிதத்தில் "உக்கிரமசிங்கன் காவற்கூடத்திலிருந்து தப்பித்துக் கொண்டான். இப்போது அவன் எதேச்சையாகவிருக்கிறான்" என்று எழுதிய சங்கதி அப்போது அவள் ஞாபகத்தில் உதித்தது. ஆ! கொடியன். என்னைத் துன்பப்படுத்தவே இன்னமும் ஜீவித்திருக்கிறான் போலும் என்று தன் வாய்க்குள்ளே சொல்லிக் கொண்டாள். பிறகு தனக்கு உரியவர்களைவிட்டு கொடியனால் களவாடப்பட்டுக் கொண்டுபோகப்படுவதை எண்ண மரகதவல்லியின் கண்களில் நீர்பெருகியது. தன்னைப்பற்றி அங்கு என்ன எண்ணுவார்கள். காலையில் மணக்கோலமாயிருந்த மாளிகை இப்போது பிணக்கோலமா யிருக்குமே என்று எண்ணி பெருமூச்சுவிட்டாள். முதலில் தோட்டக்காரன் அனந்தரன் மகள் வெறும் அலமுவாய் இருந்து பிறகு தன் தந்தைமீது சுமத்தப்பட்டிருந்த அபவாதம் நீங்கி, கருங்குயில் குன்றத்து அரசபாகியதும் தனது அரிய காதலன் இராஜகிரியன்னனைக் காலை மணந்து இப்போது உக்கிரமசிங்கனால் சிங்களக் குகைக்கு கொண்டுபோகப் படுவதுமாகிய காரியங்கள் ஒவ்வொன்றாய் முறையே அவள் மனதில் தோன்றி அவளைத் துக்கசாகரத்தில் மூழ்கச்செய்தன.

வல்லான் உக்கிரம சிங்கனிடத்தில் இராஜகிரி

மன்னனை மீட்டவனும் மாரமார்த்தாண்டன் நிரபராதி என்பதை உலகப்பிரசித்தஞ் செய்தவனுமாகிய வீர அலமு இப்போது கள்வர் தலைவன் கையில் ஓர் பலமற்றக் குழந்தைபோல் இருந்தாள்.

மரகதத்தின் செய்கை ஒவ்வொன்றும் விடாது கவனித்தவனான உக்கிரமசிங்கன் அவளைப்பார்த்து, "அலமு, உன்னை என் குகையில் கண்ட நாள் முதலாய் உன் உருவம் என் சிந்தையை விட்டு அகலவேயில்லை. நீ என்னை மரித்தவனாக எண்ணியிருந்தாய். நானோ உன்னை என் தெய்வமாக வணங்கி ஸ்மரித்து வந்தேன். அழகிய மாதே, உன்னை என்னால் மறக்கக் கூடவில்லை. நான் உன்"......என்று ஆரம்பிக்கும் போது அலமு எழுந்து உட்கார்ந்தாள். அவள் முகம் சிவந்தது. உக்கிரமசிங்கனைத் தனது கண்களால் தகிப்பவள்போல் கோபத்தோடு பார்த்தாள். இதனைக்கண்ட உக்கிரமசிங்கன், "மாதே, உன் கோபக்குறியும் திடமான செய்கையுமே என்னை உன்னிடத்தில் அபிமானிக்கச் செய்தது. அலமு! என் வார்த்தைகளைக்கேள். நான் உன்னை எவ்வளவு உருக்கமாக நேசிக்கிறேன் என்பதை அறிவாயானால்......"

மரகதம்.—உக்கிரமசிங்கா! நீ ஒரு நன்றி இல்லாதவன். நான் உனக்கு இதம் செய்ய எனக்கு நீ அகிதம் செய்யத் துணிந்தாய். இதுதானோ சிங்கள நாட்டின் கள்வர் தலைவனான உன் நன்றியறிதல்?

உக்.—மாதே, என் வார்த்தைகளை முற்றிலும் கேள். அப்போது என்னை நீ அறிவாய். அலமு, நான் ஒரு நிர்ப்பாக்கியன்.

மர.—ஆம். பிறரை நிர்ப்பந்தப்படுத்துவதால் நீ நிர்ப்பாக்கியவானு யிருக்கிருய்.

உக்.—அலமு, என்னைப் பேசவிடு. பிறகு நீ என் வருத்தத்தைக்கண்டு மனதிரங்குவாய். அலமு, நான் உன்னை முதன் முதல் கண்ட நாள் பாக்கியம் பெற்ற நாளாகும். நான் அப்போது படுகாயப்பட்டிருந்தேன். அலமு, உன்னல் ஆதரிக்கப்படுவதானல் என் ஆயுள் அந்தம் வரையில் நோயில் வருந்தத் துணிவேன். அலமு, என் குகையில் அவ்விந்தியர்களை மீட்ட காக்ஷி இன்னமும் என்னல் மறக்கக்கூடவில்லை. அந்நாள்முதல் உன்னை நான் கனவிலும் நினைவிலும் ஸ்மரித்து வருகிறேன். உனக்காக நான் பட்ட கஷ்டங்கள் எத்தனை என்பதை நீ அறியமாட்டாய்.

மூர.—உக்கிரமசிங்கா, நீ ஒரு கொடியன். பாம்பிற்கு பால்வார்த்து வளர்த்ததுபோல உன்னை நான் காப்பாற்றினேன். உக்கிரமா, நீ ஞாதியற்றவனுக செடி மறைவில் படுகாயப்பட்டுக் கிடந்தாய். அப்போது நான் உன்னை ஆதரித்தேன். நீ கொடியன், கள்வர் கூட்டத்தின் தலைவன் என்பதை அறிந்திருந்தும் உன்னைக் காட்டிக்கொடுக்கவில்லை. நீ அனேக நாட்களாக என் உணவைப் புசித்து உடல் வளர்த்தாய். உயிர்போகும் தருவாயில் என்னல் காப்பாற்றப்பட்டாய். உக்கிரமசிங்கா, நான் உனக்கு உயிரும் உடலும் கொடுத்தவள்போல உதவி செய்திருக்க என் உபகாரத்தை மறந்து எனக்குத் தீங்கு செய்ய துணிந்தாய். இதுதானு சிங்களமலைநாட்டின் கள்ளர் தலைவன் செய்யும் உபகாரம்? உக்கிரமசிங்கா, காளை இப்போது உன்னுக்கு மன்னவி. நான் செய்த உதவி

உன் மனதில் இருக்குமானால் என்னை மறுபடியும் கருங்குயில் குன்றம் கொண்டுபோய் விடு. இப்போது நீ எனக்குச் செய்த அபகாரத்திற்குத் தண்டிக்கப்பட மாட்டாய். நான் உன்னைக் காப்பாற்றுவேன்.

உக்.—உன்னைக் கருங்குயில் குன்றம் கொண்டு போவதா? அது என்னால் ஆகாது. அல்லும், நான் உன்னை நேசிக்கிறேன். சிங்களக் குன்றம் கொண்டு போவேன்.

மர.—"உக்கிரமசிங்கா, நான் உன்னை கருணையோடு காப்பாற்றினேன். நீ ஒரு கல் நெஞ்சனாயிருக்கிறாய்" என்று உரக்க வெறுப்போடு கூறிப் பிறகு, "என்னை இராஜகிரி மன்னனிடம் கொண்டு போய் விடமாட்டாயா?" என்று கேட்டாள்.

இதனைக்கேட்ட கள்வர் தலைவன், "அடி மாதே, என்மீதில் இவ்வளவு துவேஷம் என்? இராஜகிரி மன்னனைக் காதலிக்கும் நீ எவ்விதம் சிங்களகிரி மன்னனை விரோதிக்கக் கற்றுக்கொண்டாய்? அல்லும், உன் கணவன் இராஜகிரி மன்னனாயிருப்பதுபோல நான் சிங்களகிரிக்கு மன்னன் என்பதை மறந்தனையோ? அடி உன்னை நான் என் மலைக்குக் கொண்டு போவேன். கொஞ்சகாலத்தில் என்னை நேசிக்கும் வகை கற்றுக்கொள்வாய்" என்று கூறுவதைக்கேட்ட மரகதம் முகம் வெளுக்கக் கோபம் கொண்டவளாகவும் அனுதாபமுடையவளாகவும் கள்ளர் தலைவனைப் பார்த்து, "உக்கிரம சிங்கா, என்னைக் கருங்குயில் குன்றம் கொண்டுபோக மாட்டாயா?" என்று கேட்டாள்.

உக்.—மாதே, உனக்கு என்ன பயித்தியமா?

உன்னை என் வசப்படுத்த எத்தனை பிரயாசைப்பட்டே னென்பதை நீ அறியமாட்டாய். உனக்காக எனக்கு உள்ளதெல்லாம் செலவழித்தேன். நீ அந்த இந்தி யர்களை மீட்டுவிட்ட பிறகு நான் உன்னை உன் வீட்டில் வந்துபார்த்தேன். கூண்டுருக்கப் புள் பறந்தோடியது போல உன்னை வீட்டில் காணவில்லை. நான் கோபங் கொண்டவனாக உன் வீட்டை அக்கினிக்கு இரை யாக்கினேன். பிறகு உன்னைப்பார்க்க முயன்றதில் என் தம்பியும் சிங்கள துரைத்தனத்தாரால் பிடி பட்டான். அவர்கள் என்னையே பிடித்துவிட்டதாக அகமகிழ்ந்தார்கள். பிறகு என் கூட்டத்தை யெல் லாம் நாசமாக்கினார்கள். நான்மட்டிலும் என் இரகசி யக்குகையின் துணையால் உயிர் தப்பினேன். பிறகு எனக்குவேண்டிய மனிதன், பொருள், ஆயுதம் முத லிய யாவும் ஒவ்வொன்றாய்ச் சேகரம் செய்வதில் என்ன கஷ்டப்பட்டிருப்பேன் என்று எண்ணுகிறாய். அலமு, இந்த கஷ்டங்களெல்லாம் உன்னால் ஏற் பட்டதே யொழிய வேறல்ல. என் முயற்சிக்குப் பலனாக உன்னைப் பெற்றேன். இப்போது நீயோ உன்னைக் கருங்குயில் குன்றம் கொண்டுபோய் விடும் படியாகச் சொல்லுகிறாய். நன்று உனது எண்ணம்!

மர.—உக்கிரம சிங்கா, உன் கஷ்டங்களுக்குச் சம்பாவனையாக என்ன திரவியம் வேண்டுமானாலும் கேள், கொடுக்கத் தயாராயிருக்கிறேன். உன் சிங்கள மலைக்குகைக்கு என்னைக் கொண்டுபோக வேண்டியு தில்லை. உக்கிரம சிங்கா, என்வார்த்தையை கேட்டு. உன்னை நான் காட்டிக்கொடுக்கமாட்டேன். என்னைக் கருங்குயில் குன்றம் கொண்டுபோய்விடு. உனக்கு

வேண்டிய செல்வம் கொடுக்கச் சித்தமாயிருக்கி றேன். உக்கிரமா, நான் வார்த்தையில் பிறழ்கிறதில்லை என்பதை நீ அறிவாய். என்னை நம்பு. என் மாளிகையில் கொண்டுபோய்விடு.

உக் —"மாதே, உன்னைக்கொடுத்து எனக்கு இப் பூவுலகையே வாங்கும்படியான செல்வம் வருவதானு லும் அதனை நான் மதிக்கமாட்டேன். நீயே எனக்கு விலையேறப் பெற்றவள். சிந்தாமணியும் பாற்கடல் அமுதமும் வந்தபோதிலும் அதனை நான் இகழ் வேன். அடி மடமான்விழி மயிலே! உன்னை நான் பிரிந்து ஆற்றுவனே? வருத்தம் மிகுதியுடையவ ளாகிய என்னை வாட்ட உன் மாளிகையை எண்ணுவது என்னே? பூங்குழலே" என்று பலவாறாகப் பித்தன் போல் பிதற்றுவதைக் கேட்க மரகதவல்லி நம்பிக்கை இழந்தவளாக தான் வீற்றிருந்த இடத்தில் சாய்ந் தாள். இனி என்னசெய்யலாம் என்று ஏக்கங் கொண்டாள்.

பாய்விரித்தோடும் மரக்கலம் வேகமாய்ச் சென் றது. சூரியனும் கடலில் குளித்து எழுந்திருப்பவன் போல கிழக்கிலெழுந்தான். மரகதத்தைக் கொண்டு போகும் மரக்கலம் சாகரத்தில் மூழ்கிச் செல்லுவது போல கருங்குயில் குன்றத்தரசியின் மனம் துக்க சாகரத்தில் மூழ்கிச்சென்றது. அழகு தன் கணவனைப் பற்றியும் தாய் தந்தையர்களைப் பற்றியும் எண்ணி னள். ஒரு சிங்களக் குடியானவனை அனந்தரன் [illegible]ாய் வளர்க்கப்பட்டு வந்தவள் தேவ கிருபை யால் இழந்துபோன அரச பட்டத்தையும் காதலக் கடவுள் கணவனையும் கிடைக்கப் பெற்று இட

மென்று சகல வற்றையும் இழந்து ஒரு கள்வனால் கொண்டு போகப்படுவதென்றால் அவள் வருந்தி மனம் நொந்தாள் என்பதில் என்ன ஆச்சர்யம்? மரகதவல்லி இழந்து போனவைகளைப்பற்றி எண்ண எண்ண அவள் மனம் புண்ணாகியது. இனி தான் அனுபவிக்கப் போகும் கஷ்டங்களை எண்ண பின்னும் மனது உருகினாள்.

இவள் துன்பப்படுவதைக் கண்ட சிங்களக் கள்வன் மரகதவல்லியை அனுதாபத்தோடு பார்த்து, "மாதே, நீ வீணில் வருந்துகிறாய். என் வார்த்தையைக் கேட்பாயானால் நீ ஒருபோதும் வருந்த வேண்டியதில்லை. அழகு, நீ சிங்கள தேசத்தில் மகாத் தேவதைபோல யதேச்சையாய் வளர்க்கப்பட்டால் காடுகளும் வனாந்தரங்களும் மலைகளுமாகிய இயற்கைப் பொருள்களே உன்மனதைச் சந்தோஷப்படுத்தக் கூடியதுகளா யிருந்தன. நகர் நடுவில் வெளிப்பகட்டான ஜீவியம் உன்னைக் கூண்டில் அடைக்கப்பட்ட பக்ஷிபோல துன்பம் செய்வதாகும். நங்காய், என் சொற்படி கேட்பாயானால் சிங்கள மகாசாலுக்கு ஒரு இராக்கினிபோல குன்றுகளில் மான்போல் குதித்து விளையாடி உற்சாகத்துடன் ஜீவிக்கலாம்" என்று கூறிக்கொண்டிருந்தான்.

அவன் வார்த்தைகளில் கவனம் செலுத்தாதவளாகிய மரகதவல்லி கடலில் அலைகள் கொந்தளிக்கும் தன்மையைப் பார்த்துக்கொண்டிருந்தாள். ஈசனருளால் தனக்கு உதவி எத்திக்கி லிருந்தாவது கிடைக்கமாட்டாதா வென்று சுற்றிப்பார்த்தாள். கடலின்கண் [illegible] வேறு ஒன்றும் [illegible]

படவில்லை. வானம் தனக்குத் துணையாக கடலைத் தழுவிக் கொண்டிருப்பதைப் பார்த்துக்கொண்டிருந் தாள். இதனைக்கண்ட அவள் தன் துன்பத்தை நீக்கி மானத்தைக் காக்க வானத்தைப்போல கடலுள் மூழ்குவதே உத்தமமாகும் என்று எண்ணினாள். உடனே பரபரப்புடன் எழுந்தாள்.

அவள் எண்ணம் உணர்ந்தவனான உக்கிரம சிங்கன் அவள் ஆடையைப்பற்றி யிழுத்து ஆசனத்தி லிருத்தி, "பேதாய், நீ எத்தனை தீரமுடையவளாயி னும் என்னை மோசம் செய்யக்கூடிய வல்லமை உனக்கு ஏது?" என்று நகைத்துக்கூறினான்.

மரகதவல்லி, முகம் வெளுங்க, கண்கள் சிவக்க, உக்கிரம சிங்கனைக் கடுமையாய்ப்பார்த்து "அடா பாவி, உன்னையும், ஈசன் ஒரு மனிதனாகப் படைத் தானே. உனக்கும் பேதையாகிய யான் உதவி புரிந் தேனே, பாதகா, என்னை மறிக்காது மரிக்கவிடு" என்றுகூறி மூடிக்கொண்டு மரக்கலத்தின் ஓரமாகச் சாய்ந்தாள். உக்கிரம சிங்கன் அவள் கரத்தைப் பற்றி யிழுத்து மறுபடியும் அவளை ஆசனத்தில் கிடத்தினான். மரகதவல்லி அப்படியே மூர்ச்சை யாயினாள்.



## 7-வது அத்தியாயம்

### கமடத்தில் பிரயாணம்.

கருங்குயில் குன்றத்து மாளிகையில் மணப்பெண் காணாது போனதைப்பற்றி மூலைக்கு மூலை பேசிக்கொண்டார்கள். நகரெங்கும் அரசன் மகளை உக்கிரம சிங்கன் களவாடிப்போனான் என்பதைப்பற்றி பெரும் அமளியாய் இருந்தது. வீதிக்கு வீதி ஜனங்கள் கும்பல் கும்பலாய் நின்று மரகதத்தின் தீரச்செயலால் அவள் தகப்பன் அடைந்த மகிமையையும் இப்போது அவளை யிழந்து அனுபவிக்கும் துன்பத்தைப்பற்றியும் வார்த்தையாடிக் கொண்டிருந்தார்கள். கடற்றுறை முகத்தில் கமடம் என்னும் கப்பல் பிரயாணத்துக்கு ஆயத்தமாயிருந்தது. கப்பலில் அரசன் ஆணைப்படி யாவும் சித்தமாயிருந்தன. ஒரு வல்லரசையும் தாக்கி ஜயமடையக்கூடிய போர்வீரர்கள் கப்பலில் புறப்படுவதற்கு சன்னத்தர்களா யிருந்தார்கள். கப்பல்தான் புறப்படுங்காலம் நெருங்கிவிட்டது என்னும் அறிகுறியாக ஊதி சப்தித்தது.

கருங்குயில் குன்றத்து மாளிகையின் கடியாரத்தில் மணி மூன்றடித்த ஓசையும் கேட்டது. மாளிகையில் அரசன் தன் அறையை விட்டு வெளியே வந்தான். அழுது கொண்டிருந்த தனது கண்களைத் துடைத்துக்கொண்டு மெல்ல நடந்தான். பின்னும் ஒருமுறை தன் பத்தினியைப் பார்த்துப் போவோம்

என்று எண்ணியவனாகத் திரும்பவும் அறைக்குள் நுழைந்தான். கற்பகவல்லி படுக்கையில் தூங்குபவள் போலக் கண்களை மூடிக்கொண்டிருந்தாள். அவளருகே செல்லச் செல்ல கருங்குயில் குன்றத்தரசன் கண்களில் நீர் பெருகியது. அருகிற்சென்று குனிந்து முத்தமிட்டான். அன்பின் அடையாளமான அந்த முத்தமே தன் காதலி அடையக்கூடிய கடைசி முத்தமாக விருக்குமோவென்று எண்ணும்போது அவன் இருதயம் அவனைவிட்டுப் பிரிந்துபோவது போலிருந்தது. அசைவற்று தன் பாரியைப் பார்த்தவண்ணமாகவே நின்றான்.

கற்பகவல்லி திடுக்கிட்டு எழுந்து மருண்ட பார்வையாற் பார்த்து, "மாணிக்கவல்லி, இது என்ன கனவு, கனவு!" என்று கூவினாள். அரசன் அவள் கூக்குரலுக்கு பயந்தவன்போல அறையைவிட்டு வெளியே வந்தான்.

அப்போது காரிருளில் காதலியைக் கைவிட்டவனாகிய இராஜகிரி மன்னன் அரசனைத் தேடிக்கொண்டு அங்கு வந்தான். அவனைக் காணவும் மாரமார்த்தாண்டன் புன்கண்கூர்ந்து, "வரேந்திரா, யாவுமிழந்தேன்" என்று கதறினார்.

இராஜகிரி மன்னன் அரசன் கரங்களைப்பற்றி அன்போடு முத்தமிட்டு, துன்பம் தாளாதவனாக, "பிரபு, என்ன செய்வேன்!" என்று கதறினான். இவர்கள் பேதைப் பெண்கள்போல் கதறி அழும் சப்தம் கேட்ட இராஜகிரி மன்னனின் தோழர்களாகிய விக்ரமவீரனும் சுந்தரதீரனும் அவ்விடம் வந்தார்கள். [illegible] படும் அல்லலைக்கண்டு அவர்[illegible] தேறு

தல் சொல்வதையும் மறந்தவர்களாக அப்படியே நின்று பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

சிறிதுநேரம் செல்ல விக்கிரமவீரன் ஒருவாறு மனம் தேறியவனாக இராஜகிரி மன்னனை நெருங்கி, "வரேந்திரா, வருந்தவேண்டாம் நேரமாகிவிட்டது. அந்தப் பாதகனை வதைத்து நமது காரியத்தை முடித்து வருவோம். அல்லல் கண்டு இரங்குவது பெண்தன்மையாகும். துன்பத்தை அடித்து ஊர்வதாகிய ஆண்மையே ஆண்மையெனப் படுகிறது; வரேந்திரா, நேரம் ஆகிவிட்டது. நமக்காக கமடம் என்னும் கப்பல் காத்திருக்கிறது" என்று தேறுதல்கூறி இராஜகிரி மன்னனது கரத்தைப்பிடித்து மெல்ல நடத்தினான்

சுந்திரதீரன் கருங்குயில் குன்றத்து அரசன் கையைப்பிடித்து கடற்கரையோரமாக அழைத்துச் சென்றான். மன்னர்களிருவரும் அன்னையைப்பற்றிப் போகும் குழந்தைகள்போல அவர்கள் பின்னே சென்றார்கள். துன்பப்படுகிறவர்களைக் காணச் சகியாதவன்போலக் கதிரவன் மேகத்துள் மறைந்தான். கடற்கரையோரமாக ஜனங்கள் திரள் திரளாய்க்கூடியிருந்தார்கள். உக்கிரமசிங்கன் கொடுமையையும் மரகதத்தின் பெருமையையும் பேசிக்கொண்டிருந்தவர்கள் கருங்குயில் குன்றத்தரசனையும் அவன் மருமகனையும் காணவே பேசுவதையொழித்து அவர்களை நோக்கலானார்கள்

இருவரும பூமியைப் பார்த்தவண்ணமாகவே நடந்தார்கள். விக்கிரமவீரன் மட்டிலும் சுற்றிலு முள்ளவர்களுடைய தன்மையை அறிய மன [illegible]

வனுகக் கண்களைச் சுழற்றி நாற்புறமும் நோக்கினான். தங்களைச் சூழ்ந்துள்ளவர்கள் யாவரும் கவலையுள்ளவர்களாகவும் அனுதாபமுடையவர்களாகவும் விளங்கினார்கள். மன்னன் கலங்குவானானால் அவன் குடிகள் கலங்குவது ஆச்சர்யமாகுமோ? பண் அதிர்ப்பில் பாடல் அதிர்ந்துவிடும் என்பதைத் தெரிந்தவனாகிய விக்கிரமவீரன் யாதொரு வார்த்தையும் பேசத்துணியாமல் இராஜகிரி மன்னனை நடத்திக் கடற்கரையை யடைந்தான். இவர்களுக்காகக் கரையில் நிறுத்தப்பட்டிருந்த படகு இவர்களை எதிர்கொண்டு வந்து எல்லோரையும் ஏற்றிக்கொண்டு கப்பலுக்குச் சென்றது.

மன்னரிருவரும் அவர்கள் துணைவர்களும் கமடத்தை யடைந்தவுடனே கப்பலில் மணியடிக்கும் சப்தம்கேட்டது. அச்சப்தமானது கரையில் நிற்கும் ஜனங்களுக்குக் கப்பலிற் செல்லுவோர் கூறும் கடைசி வந்தனமபோல் இருந்தது. கமடம் மெல்ல அசையத் தலைப்பட்டது. கரையிலுள்ளவர்களெல்லோரும் தலைவணங்கி வந்தனம் கூறினார்கள். கப்பலில் மன்னர்களுக்குத் துணையாகச் செல்லும் போர் வீரர்களின் மனைவி மக்கள் தாய் தந்தையர்கள் எல்லோரும் கரையில் அசைவற்று நின்று கப்பலைப்பார்த்துக்கொண்டிருந்தார்கள். கப்பலில் வீரர்கள் தங்கள் உறவினர்களுக்குக் கூறும் கடைசி வந்தனக் குறியாக ஆடையை வீசி வந்தனம் செலுத்தினார்கள். கணவனைக் கப்பலுக்கு அனுப்பிய கன்னியர்களும் மக்களை மரக்கலத்தில் ஏற்றிய தாய்மார்களும் [illegible] அவர்களைப்பார்க்கக் கொடுத்து வைப

போமோ இல்லையோ என்கிற கவலை மேற்கொண்டவர்களாக அழத் தொடங்கினார்கள். கமடம் இவர்கள் கண்ணுக்கு மறைந்தது.

மன்னர்களை ஏற்றிச் செல்லும் மரக்கலம் தண்ணீரைக் கிழித்துக்கொண்டு இலங்கையை நாடி வரும் வேளை மரகதத்தைக் கொண்டுபோகும் மரக்கலம் சிங்களதேசத்தைக் குறுகியது.

நீகாமியனை கண்டகன் தங்கள் ஆளுகைக்கு உட்பட்ட மலைச்சாரலைக் காணவே உள்ளம் பூரித்தான். அவனுக்குத் துணைபுரிவோனை தேனவே சரி பரபரப்புடன் வேலை செய்துகொண்டிருந்தான். கண்டகன் மனம் பூரித்தவனாக, "தலைவரே, நமது எல்லையைக் கிட்டி விட்டோம். இனி நம்மை வெல்ல இப்பூவுலகத்தவரால் ஆகாது" என்று மகிழ்ச்சியோடு கூவினான். மரகதத்தின் அருகில் அமர்ந்திருக்கும் உக்கிரமசிங்கன் கண்டகன் கூறியதைக் கேட்டவே மனம் பூரித்தான். தன் தீரச செயலை எண்ணி அகமகிழ்ந்தான். இவனுக்கு ஏற்ற நாயகன் நான்தான் என்று எண்ணி ஆனந்தப் பரவசனானான். அவள் எப்படித் தனியாய்த் தன் குகையில் வந்து நமது மனோசக்திகளாகிய மூன்று இந்திரியங்களையும் காப்பாற்றினாளோ அதுபோலவே நானும் அவள் கோட்டையிலே சென்று அவளைக் கைக்கொண்டேன் என்று சந்தோஷித்தான். அவளும் தன் வசமானாள் என்பதில் உறுதிகொள்ள அவளை உற்று நோக்கினான். உக்கிரமசிங்கன் எவ்வளவு மகிழ்ந்திருந்தானோ அவ்வளவுக்கும் அவள் முகம் வாடியிருந்தது.

மரகதம் அப்போதுதான் மூர்ச்சை தெளிந்...

ளாக கண்திறக்கப்போனவள் கண்டகன் கூறிய வார்த்தைகளைக் கேட்கவே கண்திறக்கப் பயந்து அப்படியே மூடிக்கொண்டிருந்தாள். தன்னை உக்கிரம சிங்கன் மலைக்குகைக்குள் கொண்டுபோய் விட்டால் எப்படி மீளுவது? துணைபுரிய எவராலும் ஆகாதே என்று எண்ணித் துக்கித்தாள். உக்கிரமசிங்கனின் சிங்களக் குகைக்குள் கொண்டுபோவதற்குள்ளாக அவன் கையிலிருந்து தப்பாவிட்டால் அவனுக்கு இரையாக வேண்டியதுதான் என்று யோசித்தாள். கடற்கரையோரமாக கப்பலை நிறுத்தி அவன் குகைக்கு தன்னைக் கொண்டுபோகப் படுவதற்குள் தனக்கு ஏதேனும் உதவி கிடைக்கக்கூடும் என்று எண்ணினாள். அவ்வெண்ணம் அவளுக்கு சற்று ஆறுதலளித்தது.

அதே சமயத்தில் மரக்கலமும் நின்றது. கண்டகன் சந்தோஷக் கூச்சலிட்டு, "தலைவரே, இதோ நாம் கரை அடைந்துவிட்டோம்" என்று கூவினான். உக்கிரமசிங்கன் மெதுவாயெழுந்து மரகதவல்லியைப் பார்த்தான். கப்பல் நிறுத்தப்படவே அவளும் மெல்ல கண்திறந்து மரக்கலம் எந்தக்கரை யடைந்தது என்று பார்க்கலானாள். அவள் கண் விழித்து நோக்குவதைக்கண்ட உக்கிரமசிங்கன் தணிந்த குரலில், மரகதத்தைப் பார்த்து, "மாதே, நமது பிரயாணம் முடிந்துவிட்டது. இனி நமது குகையை நாடிச் செல்லுவோம்" என்றான். கருங்குயில் குன்றத்தரசி எழுந்து நாற்புறமும் பார்த்தாள். அவள் முகம் இருண்டது; கண்களும் சிவந்தன. அவள் எண்ணியபடியால கப்பல் ஒரு கடற்றுறைமுகத்தை யடைய

வில்லை. பாறைகளின் ஓரமாக நின்றது. இதனைக் காணவும் தான்கொண்ட கடைசி எண்ணமும் பாழாகி யது என்று எண்ணினாள். உக்கிரமசிங்கன் மீது கோபங்கொண்டாள். தன் விதியை நினைத்து வருந்து பவளாயினாள்.

இவன் செய்கையாவும் கவனித்துப் பார்த் திருந்த கள்வர் தலைவன், "மாதே, உன் எண்ணம் நான் அறியாதவனல்ல. உக்கிரமசிங்கனை மூட னென்று எண்ணினாய்? அவன் துறைமுகத்தை நாடிச்செல்ல அவனுக்கு என்ன பயித்தியமா? அழுமு, நீ இப்போது என்னுடன் வருகிறாயா அல் லது நானே உன்னைக் கொண்டுபோகவேண்டுமோ?" என்று நகைத்துக்கொண்டே கேட்டான். மரகத வல்லி அவனை வெறுப்போடு பார்த்து சற்றுநேரம் மௌனமாயிருந்தாள்.

உக்கிரமசிங்கன் மறுபடியும், "மாதே, நீயே வரு கிறாயா, அல்லது நானே உன்னைக் கொண்டுபோக வேண்டுமோ?" என்று கேட்டான். மரகதம் சற்று யோசித்து அவனால் கொண்டுபோகப் படுவதைவிட தானே அவன் கை தன் உடலில் படாமல் அவனோடு போவோம் என்று எண்ணிக்கொண்டு "நானே வருகிறேன்" என்று கூறினாள். உக்கிரமசிங்கன் சிரித்துக்கொண்டே பாறையில் இறங்கினான். அவ ளும் அவனுக்குப் பின் இறங்கி நாற்புறமும் நோக்கி னாள். எங்குபார்த்தாலும் முட்செடிகளடர்ந்த காடும் மலைக்குன்றுகள் நிறைந்த பூமியுமாயிருந்தது.

கண்டகனும் தேனவேசரியும் கப்பலை விட்டு கரையிலிறங்கவே சிங்களத்தலைவன் தன் ஆடையில்

மறைத்து வைத்து இருந்த ஒரு ஊதுங் கருவியை எடுத்து உரத்த சப்தமாய் ஊதினான். உடனே மரங்களும் குன்றுகளும் மனித உருக்கொண்டு வந்தனபோல விகாரத்தோற்றமுடைய கள்வர் அநேகர் வந்து கூடினார்கள். உடனே உக்கிரமசிங்கன் அவர்களைக் கம்பீரத்துடன் பார்த்து தான் ஏறிவந்த பாய் கட்டிய கப்பலைக் காட்டினான்.

பிறகு மரகதவல்லியைப்பார்த்து, "நங்காய், என்மீது கோபங்கொள்ளவேண்டாம். நாம் இங்கிருந்து சற்றுதூரம் நடந்துசென்றால் நமது குகையை யடையலாம். உன்னைப்பற்றியே என் ஏழுக்குகையில் அநேக மாறுதல்கள் செய்திருக்கிறேன். பிறகு நீ எனக்கு உகந்தவளாகியபின் அவைகளையெல்லாம் காணலாம். இப்போது என் காரியத்திற்காக உன் கண்களைக் கட்டிக் கொண்டுபோக வேண்டும்" என்றான்

அப்போது கண்டகனும் தேனவேசரியும் கள்வர் தலைவன் முன்பாக வந்து நின்றார்கள். மரகதவல்லி அப்போதுதான் தேனவேசரியைக் கவனித்தாள். இவன் பிஞ்சகன் தம்பி தேனவேசரியல்லவா என்று எண்ணி அவனை நோக்கினாள். அவள் அழகிய கண்களின் பார்வை அவன்மீது படவே தேனவேசரி தலைகுனிந்துகொண்டான். இவனையும் இவன் தமையனையும்பெற்ற தாய் என்ன பாவியா யிருக்க வேண்டும் என்று எண்ணினாள். இவன் போன்றவர்கள் தாயின் கர்ப்பத்திலேயே அழிந்திருப்பார்களானால் எத்தனை நன்மையாக விருந்திருக்கும் என்று எண்ணி பின் உக்கிரமசிங்கனைப்பார்த்து "என் கண்

கண்களைக் கட்டும் சிரமம் உனக்கு வேண்டியதில்லை. நானே என் கண்களைக் கட்டிக்கொள்ளுகிறேன்" என்று சொல்லி தன் அரையில் சொருகியிருந்த கைக்குட்டையை எடுத்து கண்களைக் கட்டிக்கொண்டாள்.

கள்வர்தலைவன் அவள் சரியாய் கட்டியிருக்கிறாளாவென்று பார்த்து "இனி நடக்கலாம்" என்றான். மரகதவல்லி இனி நமக்கு யாருடைய உதவி கிடைக்கப்போகிறது என்று எண்ணினாள். உடனே அண்டசராசரம் அனைத்தையும் உண்டுபண்ணியருளிய கடவுள் தன்னைக் காப்பாற்றுவார் என்று எண்ணினாள். அருந்துணைக்கு ஈசன் திருநாமமல்லது வேறு துணையில்லை என்று கண்டு அவர் நாம[illegible]த்தை மனதில் இருத்திச் சற்று திடங்கொண்டவளா[illegible]ரமசிங்கனுக்குப் பின்னே நடந்தாள்.



# 8 வது அத்தியாயம்.

---

## மரகதத்தின் காதலன் கடலில்மூழ்கினான்.

சூரிய கடலை கலக்கிச் செல்லும் கமடம் என்னும் பெரிய கப்பலில் இராஜகிரி மன்னன் தன் அறையில் உட்கார்ந்திருந்தான். அவன் கண்களில் வடியும் நீர் அவன் வீற்றிருந்த பஞ்சணையையும் நனைத்தது. யௌவன ஜமீன்தார் வருந்தும் தன் மனதிற்கு என்ன சமாதானம் சொல்லியபோதிலும் பிரிய காதலியின் அழகிய உருவமே அவன் மனதில் மாறி மாறித்தோன்றி அவனைத் துன்பத்தில் மூழ்கச் செய்தது. அவளுடைய பெருந்தன்மையான குணமும் நேர்மையான பார்வையும் மன்னனைக் கலங்கச் செய்தன. அவளை உக்கிரமசிங்கன் களவாடினான் என்று எண்ணும்போது அவன்மீது கோபங்கொண்டவனாக ஆசனத்தைவிட்டு எழுந்தான்.

சற்றுநேரம் அறையிலேயே உலாவினான். பிறகு கடற்புறமாக வைக்கப்பட்டிருக்கும் சாளரத்தைக் குறுகினான். அவன் குறிப்பற்ற பார்வை சுருண்டு விழும் அலைகளை நோக்கியது. வீரேந்திரன் அலைகளின் காட்சி தன் மனதைச்சற்று ஆறுதல் படுத்துமென்று எண்ணியிருந்தான். அவன் எண்ணத்திற்கு விரோதமாக அலைகள் தத்தளிப்பது அவன் மனம் தத்தளிப்பதுபோல் இருக்கிறதென்று எண்ணி மனம் தாளாதவனாக, " கார்கடலே நான் என் பிரிய காதலியைக் காரிருளில் கைவிட்டு நாவாய் குழறபுரண்டு

அழுகிறேனென்றால் நீயேன் இவ்வாறு புரண்டு கூவி அழுகிறாய்?'' என்றான். பிறகு தன் அரியமனைவியை விவாகம் செய்துகொள்ளாமுன் அவளை முதல்முறை சிங்களநாட்டில் சந்தித்ததையும்பிறகு அவளால் தான் நோயில் இருக்கும்போது ஆதரிக்கப்பட்டதையும் முறையே ஒவ்வொன்றாக எண்ணலானான். தான் இந்தியதேசம் வந்தபிறகு அவளை முதல் முதலில் அருங்கிளிபுரத்தில் சந்தித்தபோது அவளோடு வார்த்தையாடியதும் அப்போது அவன் மனதில் உதித்தது. அவளோடு தனியாகப் பூந்தோட்டத்திற்குச்சென்று அங்கு அலமுவைப்பார்த்து, "அலமு, உன்னையே நான் பார்க்கிறேன் என்று என்னால் நம்பக்கூடவில்லை. அலமு உன் தகப்பனார் [illegible] எவ்வாறு தனியாக இந்தியதேசம் போகவிட்டார்? உன்னைத் தன் உயிர்போல் பாராட்டிவந்தாரே. அலமு அவருக்கு என்ன பயித்தியம் பிடித்துவிட்டதா? அலமு உன்னையே நான் இங்கு காண்கிறேனே அல்லது கனவு காண்கிறேனே? உன்னையே இங்கு காண்கிறேன் என்பதில் எனக்கு நம்பிக்கையில்லை. அலமு நீயேன் இங்குவந்தாய்?'' என்று கேட்டதும் அவள்பதில் கூறாமலே தன்னை நம்பும்படியாகக் கேட்டுக்கொண்டதும் அவன் ஞாபகத்தில் வந்தது. பிறகு அவளைப்பற்றி ஒவ்வொன்றாக எண்ணினான். கடைசியாக அவள் தன்னை விவாகம் செய்துகொண்டதையும் எண்ணினான். உடனே அவள் தன்னைப் பிரிந்து உக்கிரமசிங்கனால் கொண்டு போகப்பட்டதை எண்ணவே அவன் நெஞ்சம் படபடவென்றடித்தது. அழுகையில் சிவந்த கண்களில்

மறுபடியும் நீர்வடியத் துவங்கியது. அவன் கண்ணீர் முத்துமுத்தாய்க் கடலில்விழும் காட்சியை ஒரு கலைவல்லவன் கண்டிருப்பானானால் அவன் கண்ணீர் கடல்நீரை கண்ணீராக மாற்றி அந்நீரின் பெருக்கத்தால் உலகையும் மூழ்கச்செய்துவிடுமோவென்று பயந்திருப்பான். வரேந்திரன் அழுதுகொண்டே கடலைப் பார்த்துக்கொண்டிருந்தான் அப்போது தனக்குப் பின்புறமாக ஒருமனிதன் தன்தோள்களில் கரத்தை ஊன்றியிருப்பதையும் அவன் கவனிக்கவில்லை. அவன் தோள்களைப் பிடித்திருந்த விக்கிரமஸிம்ஹன் தன் பிரிய நண்பனின் துயரத்தைக்காண சகியாதவனாய் "வரேந்திரா" என்று அவன் காதுகளில் மெல்ல சொன்னான்.

இப்போதுதான் ராஜகிரிமன்னன் தன் தோள்களில் சாய்ந்திருக்கும் சுமையைக் கவனிக்கலானான். விக்கிரமஸிம்ஹனைப்பார்க்கப் பின்னும் வருந்தியவனாக "தோழா, அவளைக் கொண்டுபோனவன் இந்த கடல்மார்க்கமாகவே சென்றிருப்பான். இந்த கடலிலுள்ள மசசங்களேனும் என்மீது கிருபைகூர்ந்து அவளைக் கொண்டுபோன கப்பலை மறித்திருக்கப்படாதா. ஐயோ! நாமும் சற்று காலையிலேயே புறப்பட்டிருப்போமானால் இங்கேயே அவனை வளைத்து என் காதலியை மீட்டிருக்கலாமே. இப்போது அவள் என்ன துன்பம் அனுபவிக்கிறாளோ? விக்கிரமா, அவளை நான் காண்பேனோ? அவள் என்னை நினைத்து மனம் நொந்து அழுவாளே. தோழா, என் அரிய காதலியை எப்போது காண்பேன்? நான் ஆடவனாய்ப்பிறந்தும் அவளை அவனிட

யிருந்து காக்க வகையறியாமற் போனேனே தோழா ........"

விக் :—பிரபு! நீர் வருந்துவதில் என்ன பயன்? இதோ கப்பலும் இலங்கையை நெருங்கிப்போகிறது. நாமும் அக்கொடியனை எதிர்த்து உமது மனைவியை மீட்டுவருவோம்.

இராஜ:—அவளை மறுபடியுங் காண என் கண்கள் கொடுத்துவைக்கப் போகிறதா? நேசா ......

விக்:—நீர் அவளை யடைவீர். வருந்தவேண்டாம். வரேந்திரரே......என்று இருவரும் பேசிக்கொண்டிருக்கும் போதே சுந்தரன் ஓடிவந் "சீக்கிரமாகவாருங்கள் கப்பல் தலைவரும் கருங்குயில் குன்றத் தரசரும் பேசிக்கொண்டிருக்கிறார்கள். உங்களை உடனே அழைத்துவரச் சொன்னார்கள்" என்று பரபரப்புடன் சொன்னான். உடனே இருவரும் அறையைவிட்டு வெளியேவந்து கப்பலின் நடுக்கூடத்தை அடைந்தார்கள்.

சூரியன் சாய்ந்து இருள் பரவவும் கூடத்தில் எங்கும் விளக்குகள் ஏற்றப்பட்டன. வேலைக்காரர்கள் அங்குமிங்கும் ஓடிக்கொண்டிருந்தார்கள். அகண்ட கூடத்தின் நடுவே போடப்பட்டிருந்த ஆசனத்தில் அமர்ந்தவண்ணமாக கருங்குயில்குன்றத்தரசர் கப்பல் தலைவரோடு பேசிக்கொண்டிருந்தார். கூடத்தின் தலைவர் உட்காராமலே அவசரமாய்ப் பேசிக்கொண்டிருந்தார். அவர் முகம் கவலையடைந்தவன் சாயலைக் கொண்டிருந்தது. இராஜஸிரி மன்னனும் அவன் தோழர்களும் அவர்களை நெருங்கவே கப்பல் தலைவர் மறுபுறம் சென்றார்.

மாரமார்த்தாண்டப் பிரபு சந்தேகத்துடன், "வரேந்திரா, கப்பல் தலைவர் கூறியதைக் கேட்டாயோ?" என்று ஆத்திரத்துடன் கேட்டார். வரேந்திரன் மரகதத்தைப்பற்றியே எண்ணியிருந்தபடியால் அவளைக் கொண்டுபோகும் உக்கிரம சிங்கன் சற்றுமுன் செல்வதை தூரதிருஷ்டிக் கருவியால் பார்த்து கப்பல் தலைவர் அவரிடம் கூறியிருக்க வேண்டும் என்று எண்ணியவனாக ஆத்திரத்தோடு, "அவன் முன் போகிறானோ? பிரபு, என்ன வேண்டுமானாலும் கொடுப்பதாய்க் கப்பல் தலைவனிடம் கூறும். அவனை இங்கு கடலிலேயே பிடித்து விட்டோமானால் சகலமும் இனிதாய் முடியும். என் காதலியை இப்போதே சாதிப்போனானால் என்ன பாக்கியம்!" என்று கூவி உற்சாகத்துடன மொழிந்தான்.

இவன் சொல்லைக்கேட்ட மாரமார்த்தாண்டப் பிரபு பொருள் உணராதவராக, "வரேந்திரா, நீ என்ன கூறுகிறாய்? யாரைச சந்திக்கவேண்டுமென்கிறாய்? கப்பல் தலைவர் இப்போது புயல்காற்று வீசும் குறி காணப்படுவதாகக் கூறினார். அவர் உத்தேசத்தின்படி சில மாறுதல்கள் ஏற்படுமானால் பலத்தசுழல் காற்று வீசுவது நிச்சயமென்றுதான் கூறினார். மேலும் அப்படி ஏதேனும் ஆபத்து நேரிடுமானால் அரசர்களாகிய நமக்கென்று பொது விதிக்கு விரோதமாய் யாதொரு விசேஷ ஏற்பாடும்செய்ய தன்னால் இயலாது போகும் என்று கூறினார்" என்றவுடன் இராஜகிரி மன்னனின் முகம் மாறியது. அவன்

எண்ணமெல்லாம் வேறுபட்டது. அப்படியே ஸ்தம்பம்போல் நின்றான்.

அப்போது கப்பல் தலைவரும் அங்கு வந்தார். அவர் முகத்தைக்காண எல்லோரும் பயந்தார்கள். கமடத்தின் தலைவர் கருங்குயில் குன்றத்தரசனை நெருங்கி "அரசே, என்ன செய்கிறது? நான் தங்களை வருத்தக்கூடிய செய்திசொல்ல வந்ததற்காக என்னை மன்னிக்கவேண்டும். சுழல்காற்று வீசத் தலைப்பட்டு விட்டது. கமடம் இந்தச் சுழல்காற்றுக்குத் தப்புமானால் ஒரு புதிய பிறவி எடுத்தது என்றுதான் சொல்லவேண்டும். இனி என் வேலையைப் பார்க்கச் செல்லுகிறேன். பிரபு, நான் தங்களுக்காக ஏதேனும் பிரத்யேகமான ஒரு உதவி செய்யக்கூடாதவனாக இருப்பதைப்பற்றி என்னை மன்னிக்கவேண்டும். நான உங்களுககு யாதொரு உதவியும் செய்யக்கூடாதவன். உயிர் போகும் தறுவாயில் அரசனும ஆண்டியும் சமானமானவர்களே யாவார்கள். பிரபு, இனி நான் உம்மிடம் வந்துபேச அவகாசம் அற்றவனா யிருப்பேன். ஆபத்து வேளையில் நான் எல்லோரையும் பார்த்துக்கூறும் கட்டளைகளுக்கு நீங்களும் கீழ்ப்படிய வேண்டும் என்பதை இப்போது வற்புறுத்திக் கூறவேண்டியவனா யிருக்கிறேன். என்னை மன்னிக்கவேண்டும் பிரபு, என் கடமையை நான் நிறைவேற்ற வேண்டும். போய்வருகிறேன். கப்பலை மீட்பதிலும் ஜனங்களைக் காப்பதிலும் என்னாலான பிரயாசைப்படுவேன். பிறகு கடவுள் செயல். அவர் கருணையை நாடுங்கள்" என்று சொல்லி விரைவாக நடந்தார். அவர் சொல்லைக் கேட்டிருந்த

எவரும் பேசத்துணியவில்லை. யாவரும் அசைவற்று மரம்போல் நின்று ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

பாறையில் மோதுவதுபோல வேகமாகச சுழன்று எழுந்த அலைகள் கப்பலில் மோதித் ததளிக்கச்செய்தன. சுழன்று வீசும் பெருங்காற்று கப்பலின்மீது பரப்பிய சாமான்களைப் புரட்டித்தள்ளிக் கொடிகளையும் கிழித்தது. கலகலவென்று கமடத்தின் ஆராய்ச்சி மணிகள் ஒலித்தன. அந்த சப்தத்தைக்கேட்ட கமடத்தின் வேலையாட்கள் எல்லாம் திரண்டு கூடி ஆபத்துவேளையில் செய்யவேண்டிய காரியங்களைச் செய்யத் தொடங்கினார்கள்.

கப்பற்றலைவர் கமடத்தின் மத்தியில் நின்று வேலைக்காரர்கள் யாவரும் தங்கள் தங்கள் வேலைகளைச் சரிவர பார்க்கிறார்களோ அல்லது தங்களைக காப்பாற்றிக்கொள்ளும் வேலையில் முயன்றுவருகிறாகளோ வென்பதாகக் கண்கொண்டு பார்த்திருந்தார். அவர் இருகரத்திலும் பிடித்த துப்பாக்கிகள் சுடுவதற்குத் தயாராகவிருந்தன. கப்பல் ஆபத்துவேளையில் அதன் தலைவர் சொல்லுக்குக் கீழ்ப்படியா பின்வாங்கும் எந்த மனிதனையும் தாக்ஷண்யமில்லாது சுட்டுக் கொல்லுவதற்கு அவருக்குப் பூரண அனுமதியுண்டு. கப்பற்றலைவர் காலம் இனி தன்னை எவ்விதத்தில் வேலை செய்யத் தூண்டுகிறதோவென்று எதிர்பார்த்திருந்தார். வேலைக்காரர்களும் பிரயாணிகளும் தங்களால் செய்யக்கூடிய உதவிகளை விடாது செய்துகொண்டேயிருந்தார்கள்.

பொருளிழந்த [illegible]யாளன் மனம்போல கம

டம் தத்தளித்துக்கொண்டிருந்தது. கப்பல் ஆபத்தான நிலையிலிருப்பது கண்ட பிரயாணிகள் யாவரும் தேவனைப் பிரார்த்திக்க ஆரம்பித்தார்கள். கப்பலின் வேலைக்காரர்கள் ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் வேலையை விடாது செய்துகொண்டிருந்தனர். கப்பல் தலைவர் இனி நேரவிருக்கும் ஒவ்வொரு சம்பவத்தையும் எதிர்பார்த்திருந்தார்.

அப்போது கப்பல் உத்தியோகஸ்தன் ஒருவன் அவரிடம் வந்து, "தலைவரே, கமடத்தின் அடிதட்டுகளிலெல்லாம் நீர் நிறைந்துவிட்டது. எந்த வழியாகவோ கடல் நீர் கப்பலுள் நுழைந்து வருகிறது" என்றான். இதனைக் கேட்ட கப்பல் தலைவர் பரிதாபமான தொனியுடன், "எல்லாம் முடிந்துவிட்டது. இனி மனிதர்களைக் காப்பாற்றவேண்டியதுதான் கமடத்தைக்காக்க என்றும் முடியாது" என்று தோள்களைக் குலுக்கிக்கொண்டு மொழிந்து, பிறகு உரத்த சப்தமாக "கப்பலிலுள்ள படகுகள் யாவற்றையும் கீழ் இறக்குங்கள்" என்றார். உடனே படகுகள் தண்ணீரில் இறக்கப்பட்டு கடலில் விடப்பட்டன. நெஞ்சம்போல தத்தளித்தன. தலைவர் கப்பலில் கட்டியிருக்கும் பெரிய மணியை யடிக்கும்படி கட்டளையிட்டார், மணி கலகல வென்று ஒலிக்க பிரயாணிகள் எல்லோரும அங்குவந்து கூடினார்கள்.

கமடத்தின் தலைவர் அவர்களை அன்புடன் பார்த்து "நண்பர்களே" என்று வாய்திறக்கும்போது, கடகட வென்று முறியும் சப்தம் கேட்கத் தலைவர் கவலையுடன் நோக்கினார். "கப்பலின் அக்கமைப் ஒடிந்தது" என்று [illegible]. உடனே

தலைவர் முகம் வெளுத்தது. பிரயாணிகள் இறைவனைத் துதிக்கத் தலைப்பட்டார்கள். தலைவர் அவர்களைப் பார்த்து "நண்பர்களே, சகல முயற்சிகளும் பயனற்றதாய் முடிந்தன. என் செய்வது? கப்பலைக் காப்பாற்ற என்னாலாகாது. உங்களைக்காக்க நான் கடமைப்பட்டவனாயினும் இது சந்தர்ப்பத்தில் நான் என்ன செய்யக்கூடும்? சகலமும் ஈசன் அருளைப் பொருத்ததாயிருக்கிறது. எல்லோரும் அன்னவர் அருளை வாழ்த்தி அவர் கருணையை நாடுங்கள்." என்று சொல்லிக்கொண்டேயிருக்கும்போது ஒருவன் கூவி "தலைவரே, இயந்திரசாலை கடல் நீரில் மூழ்கிவிட்டது. இயந்திரங்களெல்லாம் நின்றுவிட்டன. மத்திய சாளரத்தின் வழியாக நீர் உள்ளே நுழைகிறது. உம்முடைய உத்திரவின்படி அடுத்தத் துறைமுகத்திற்குத் தந்தி சமாசாரம் தெரிவித்தாய் விட்டது. பதிலும் கிடைத்திருக்கிறது. அவர்கள் பதில் நமது பிரயாணிகளுக்கு அனுகூலமானதாயிருக்கவில்லை. என்ன செய்கிறது தலைவரே, நமக்கு உதவி செய்ய இயலாததுபற்றி வருந்துகிறதாகச் சமாசாரம் எட்டுகிறது" என்று பரபரப்புடன் மொழிந்தான்.

இதனைக்கேட்ட கப்பற்றலைவர் அசைவற்று நின்றார், பிரயாணிகளெல்லோரும் அழத்தொடங்கினார்கள். இவ்வளவிற்கும் நமது கருங்குயில் குன்றத்து அரசனும் இராஜகிரி மன்னனும் அவர்கள் துணைவர்களும் பிரயாணிகள் கூட்டத்தில் ஒருபுறமாக நின்று தலைவர் கூறும் செய்தியைக் கவலையோடு கேட்டுக் கொண்டிருந்தார்கள். அசைவற்று நின்ற கப்பற்றலைவரும் தோள் [illegible] ண்டு யாவரையும்

பார்த்து, "சகலமும் முடிந்தது. இனி அவரவர்களும் உயிரைக் காப்பாற்றும் வழியைத் தேடலாம்" என்று கூறித் தன் கரத்தில் பற்றியிருந்த கைத் துப்பாக்கியை நேரேபிடித்து "கப்பல் மூழ்கப்போகிறது இனி கப்பலிலிருப்பது சாகக் காத்திருப்பது போலாகும். கப்பலின் கீழ்ப்படகுகள் இறக்கப்படாநிருக்கின்றன. ஒவ்வொரு படகிலும் சொற்ப ஆகாரம் வைத்திருக்கும். கூடிய சீக்கிரம் உதவிக்கு எதிர் பார்ப்பது கூடாத காரியமாயிருக்கிறது. சகலரும் படகுகளில் இழியுங்கள்" என்று கூறவே பிரயாணிகள் யாவரும் படியண்டையில் ஓடினார்கள். அவர்கள் ஓடிய அவசரத்தில் வாலிபர் விருத்தர்களைத் தள்ளிக்கொண்டு படியண்டையில் போய்க்கொண்டிருந்தார்கள். இவர்களின் ஒழுங்கின்மையைக்கண்ட கப்பல் தலைவர் படியண்டையில் சென்று கைத்துப்பாக்கியை நீட்டிப்பிடித்து உரத்த குரலாய், "நில்லுங்கள், முதலில் விருத்தர்கள் இறங்கவேண்டும். எவனொருவன் அவர்களுக்கு முந்துகிறானோ அவன் தாக்ஷண்யமின்றி சுட்டு வீழ்த்தப்படுவான்" என்று கூவினார். இதனைக்கேட்ட வாலிபர்கள் யாவரும் நின்றார்கள். ஒருவர் ஒருவராய் விருத்தர்கள் படகுகளில் இறங்கினார்கள்.

கருங்குயில் குன்றத்தரசர் வரேந்திரனை விட்டுப் போக மனமில்லாதவராக இராஜகிரி மன்னனின் பின்னே நின்றார். அப்போது கப்பல் தலைவர் அவரைப்பார்த்து "பிரபு, நான் உமக்கு முன்னமே கூறவில்லையா? பொதுவிதிக்குக் கட்டுப்படவேண்டும். என்ன செய்வது, நீர் இறங்கும், பிறகு படகு இருக்

தால் உம்முடைய மருமகனும் அவனுடைய தோழர் களும் இறங்குவார்கள். படகில்லாமற்போனால் அவர்களுக்கும் மற்ற வாலிபர்களுக்குக் கொடுக்கப் படுவதுபோல தண்ணீரில் மூழ்காமல் காக்கக்கூடிய ஒருவித தக்கை கொடுக்கப்படும். பிரபு, நான் மறு முறைகூற இடங்கொடாமல் இறங்கிவிடும்" என்றார். இவர் மொழிகளைக் கேட்ட மாமார்த்தாண்டப்பிரபு என்ன செய்யக்கூடும்? இப்போது அவர் எதைப் பற்றி வருந்துவார்? விவாகமான மாலையிலேயே தன் மகள் உக்கிரமசிங்கனால் கொண்டுபோகப்பட்டதற்கு வருந்துவாரா? மகள் காணமற்போன செய்திகேட்டு பித்துக்கொண்ட மனைவியை எண்ணி வருந்துவாரா? மகன்மீதுள்ள ஆவலால் அவளைக் காப்பாற்றவெண்ணி நா[illegible]கர், அரசு எல்லாம் விட்டுக் கப்பலை யடைந்த [illegible]வருந்துவாரா? கப்பலில் நேர்ந்த ஆபத்திற்கு வருந்துவாரா? அல்லது இப்போது தன் மருமகனை யும் அவன் தோழர்களையும் பிரிந்து செல்வதற்கு வருந்துவாரா? பின் எதையெண்ணித்தான் வருந்து வார்?

கருங்குயில் குன்றத்தரசர் அப்படியே அசை வற்று சிலைபோல் நின்றார். கடல் நீரும் அவர்கள் கால்களில் பாய்ந்தது. கப்பலின் தலைவர் கோபங் கொண்டவராக அரசரைப் பிடித்திழுத்து ஒரு ஆள் வசம் கொடுத்துப் படகில் சேர்ப்பிக்கும்படியாக ஆக் ஞாபித்தார். விருத்தர்கள் இறங்கிய பிறகு நான்கு படகுகள் மட்டிலும் எஞ்சியிருந்தன. உடனே தலை வர் கூவி, "முன் [illegible]ரிசையிலுள்ள வாலிபர்களில் 32-பேர்கள் இ[illegible]" என்றார். உடனே இராஜ

கிரி மன்னனும் அவன் தோழர்களிருவரும் இறங்கி னர்கள். அப்போது கப்பலில் பிணிக்கப்பட்டிருந்த படகுகளின் கயிறுகள் யாவும் அறுத்துவிடப் பட்டன.

படகுகள் எல்லாம் அறநெறிக்கும் கட்டுப்படாத மாந்தர்கள்போலத் திசைக்குத்திசை சென்றன. கப்பலின் மாலுமிகளுக்கும் படகுகள் இல்லாது எஞ்சி நின்ற பால்யர்களுக்கும் கடலில் மிதக்கச் [illegible] தக்கைகள் வழங்கப்பட்டன. கமடத்தின் தலைவர் ஒழிய யாவரும் கடலில் குதித்தார்கள். அப்போது கமடத்தின் மேல்பாப்பு மட்டிலும் தண்ணீருக்கு மேலே தெரிந்தது. சற்று நேரத்திற்கெல்லாம் கமடம் எனனும் கப்பலின் உருவம் தண்ணீருள் மூழ்கியது. பிறகு கடல் நீரொழிய வேறு ஒன்றும் காணப் படவில்லை. பித்தர்கள் மனம்போல் படகுகள் [illegible] காற்றில் உழன்றுகொண்டிருந்தன. காற்றின் வலிமையால் அலைகளில் பல, கொந்தளிக்கும் கடலுக்கு இறையாயின. கடலில் மூழ்கி இறக்கும் ஆடவர் கடல் ஒலிக்குமாறாக பேரொலியாய்க் கூவினார்கள். என்ன செய்வது? யாது கூவியும் அவர்களைக் காக்க வகையில்லாது போயிற்று.

சுழன்று வீசும் காற்று இராஜகிரி மன்னனும் அவன் தோழர்களும் ஏறியிருந்த படகைக் கவிழ்த்தது. மரகதத்தின் காதலன் கடலில் மூழ்கினன்

# 9-வது அத்தியாயம்.

---

## சிங்கள மலைக்குகை.

உக்கிரம சிங்கன் முன்னும் மரகதவல்லி பின்னுமாக சற்றுதூரம் நடந்தார்கள். அவர்களுக்குப் பின் கண்டகனும் தேனவேசரியும் நடந்து வந்தார்கள். அப்போது கண்டகன் தேனவேசரி விஷயமாக யோசித்துக்கொண்டே நடந்தான். சற்றுநேரம் செல்ல கண்டகன "தலைவரே," என்று கூப்பிட்டு "தேனவேசரி" என்று மெல்ல மொழிந்தான் உக்கிரமசிங்கன் திரும்பிப்பார்த்து, "தேனவேசரி, இனி நாங்கள் போகும் மார்க்கம் இரகசியமானது."

தேனவேசரி.—ஐயனே, நான் தங்கள் கூட்டத்தவரில் சேர்ந்து கொள்வதாக வாக்களித்திருக்கிறேனே. இப்போது வேண்டுமானாலும் உம்முடைய முறையின்படி என்னை அங்கீகரிக்கலாம்.

கண்.—"தலைவரே, நமது கூட்டத்தில் அன்னியர்களைச் சேர்த்துக்கொள்வது ஆபத்தாய் முடியும். அவர்கள் நம்மைக் காட்டிக்கொடுப்பார்கள். நமது கூட்டத்தில் ஒரு அன்னியன் இருப்பது நமக்கு நெருப்பு மடியில் இருப்பதுபோலாகும்" என்று கூறக்கேட்ட தேனவேசரி கண்டகனை விரைக்கப் பார்த்தான்.

பிறகு கள்வர் தலைவனை நோக்கி, "ஐயா, தங்களுடைய சிப்பந்தி சொல்வதுபோல முன் நீங்கள் இருவரும் இந்திய தேசத்தில் என்னைச் சந்தித்தபோது

அப்படிக் கூறவில்லையே. நான் வேண்டிய காரியம் யாவும் செய்வதாக வாக்களித்தீர்களே இப்போது உங்கள் காரியம் முடிந்துவிட்டது என்று எண்ணி இப்படிப் பேசுவது முறையாகுமோ?"

உக்.—தேனவேசரி, நீ எனக்கு செய்த உபகாரத்திற்கு நான் உனக்கு நன்றி பாராட்ட வேண்டியவனே. ஆனால் நீ கூறுவதுபோல என் கூட்டத்தவர்களில் ஒருவனாய்ச் சேர்த்துக்கொள்வதாக வாக்களிக்கவில்லை. அதுபற்றி நான் இப்போது கண்டகன் அவ்வாறு சொல்லநேர்ந்தது. ஆனாலும் என்னால் நான் உனக்குச் செய்யக்கூடிய உதவி செய்வேன்

கண்.—தலைவரே, தேனவேசரி என்னமோ 'முன் இருவரும் அவனைச் சந்திக்கும்போது இருந்தபடி இப்போது இருக்கவில்லையே' என்று கூறினனே அதற்கு என்ன காரியம்? மந்த காரியத்தை என்னமோ இவனை யிருந்து முடித்தவன்போல் அல்லவோ கூறுகிறான். அது கிடக்கட்டும். தேனவேசரி, (முன்னிருவரும் உன்னைச் சந்தித்தபோது) என்றாயே அதுவென்ன? உன்னை அந்த இக்கட்டு வேளையில் காப்பாற்றியது பற்றியா?

தேன.—கண்டகா, உன்னை நான் கேட்கவில்லை. தலைவரைக் கேட்கும் விஷயத்தில் நீ தலையிட வேண்டியதில்லை.

கண்.—ஓகோ! தேனவேசரி, நன்றாயிருக்கிறது. நீ முதலில் தலைவரிடம் தான் உன் குறைகளைத் தெரிவித்துக்கொண்டாயோ?

தேன.—அதுபற்றி இப்போது வாதம் வேண்டியதில்லை, தலைவரே,......

கண்.—தலைவரே, பின் எதைப்பற்றிய வாதம்? தேனவேசரி, பித்தத்திலா? அல்லது சிலேஷ்மத்திலா?

தேன.—தலைவரே, நான் உண்மைக்கேட்கிறேன்.

கண்.—தேனவேசரி, நான் உனக்குத்தான் சொல்லுகிறேன்.

உக்.—ஏன் உங்களுக்குள் இவ்வளவு சச்சரவு தேனவேசரி, நான் உனக்கு உதவிசெய்வதாக வாக்களித்தேன்.........

கண்.—அப்படியே உனக்கு உதவி செய்தாகிவிட்டது.

உக்.—கண்டகா, நீ பேசாமலிரு. தேனவேசரி, நான் முன் உனக்கு என கூட்டத்தில் சேர்த்துக்கொள்வதாய்க் கூறியதல்லையல்லவா?

தேன.—ஆம் தலைவரே நானே அதுபற்றி உம்மிடம் கேட்டுக்கொண்டேன்.

கண்.—ஆ! ஆஹா அப்படியா? நீயே கேட்டுக்கொண்டதா? ஏன் உன்னைச் சிங்கள தேசத்திற்கு அரசனாய் நியமிக்கும்படி கேட்டுக்கொள்கிறதுதானே?

உக்.—"தேனவேசரி, நீ எனக்கு உதவி செய்தாய். நானும் உனக்கு உதவி செய்திருக்கிறேன்" என்று சொல்லித் தன் ஆடையிலிருந்து சில பொற்காசுகளை கையிலெடுத்து அவனிடம் கொடுத்து "தேனவேசரி, நீ இந்திய தேசத்தில் துர்ப்பாக்கியனாய் ஜீவித்தாய். இப்போது இங்கு ஊரையடைந்து ஏதேனும் ஒரு தொழில் செய்து பிழைக்கும் வழியைப்பார். நீ எனக்குச் செய்த உதவிக்காக இதனை இனாமாகக் கொடுத்தேன்

சண். — தலைவரே, அவன் நமக்குச் செய்த காரியத்தை உத்தேசியாமல் ஏராளமான பொன்னை வாரிக் கொடுத்துவிட்டீர்

உக் — கண்டகா, அவன் எனது விலை மதிக்ககூடாத மரகதத்தைக் கொடுத்தான். அவனுக்கு நான் என்ன கொடுத்தபோதிலும் தகுதியானதே. தேனவேசரி, உன் இஷ்டப்படி என கூட்டத்தில் சேர்த்துக் கொள்ளாமல் போனதுபற்றி வருந்துகிறேன். அது என்றால் கூடாத காரியம். இனி நீ இந்த மலைச்சாலையின் வழியை எட்டிப்பாராதே. கொழும்பிலேயே ஏதேனும் தொழில் பார்த்துக் கொள். இனி எங்களைப் பின்பற்றவேண்டாம். இதோ இதுதான் கொழும்பிற்குப் போகும் பாதை அவ்வழியாகச் செல் என்று கையை நீட்டி பின்புறமாகக் காட்டினான்.

தேனவேசரி உக்கிரமசிங்கன் காட்டியவழியில் நடந்துகொண்டே பின்னால் திரும்பிப்பார்த்தான். கண்டகன் அவனைப் பொறாமையோடு தன் கண்களை விழித்துப்பார்த்தான். இவர்கள் இருவரும் பார்த்துக்கொள்வது எப்படி இருந்ததென்றால் எச்சில் இலைக்கு காத்திருக்கும் நாய்கள் பற்களை இளித்து வாலை யொடுக்கி ஒன்றை யொன்று கொஞ்சும் நோக்கத்திற்குச் சமானமாயிருந்தது.

இவர்கள் பேசுவதை எல்லாம் கண்களால் பாராது காதினால் கேட்டுக்கொண்டே நடக்கும் மரகதவல்லி இவர்களை எந்தவகுப்பில் சேர்ப்பது என்று அறியாதவளாக [illegible]சனையுடன் நடக்கலானாள். சற்றுதூரம் [illegible]கிரமசிங்கன்

"மாதே, இனி போகும பாதை காடு முரடுகளா யிருக்கும் மேலும் ஒழுங்கற்றதாயிருக்கும் உன் மிருதுவான பாதங்களை இவ்வித கரடுபாதையில் நடக்கச செய்வதில் எனக்குப் பிரியமில்லை.

மரகதவல்லி.—உக்கிரமா, உன் மனம் இளகியதா யிருக்குமானல் போகுமானாலு காடு முரடான பாதையில் நடப்பதற்கு நான் தயங்குவதில்லை

உக்.—மாதே, சற்று நில். நான் முன் நடக்கிறேன் என் கைத்தடியைப்பற்றி நீ பின்னே வரலாம்

மா—வேண்டாம். பின்னே நடந்துவருகிறேன்

உக்—என்ன அம்மா, என் கைத்தடியைப் பிடித்து வரப் பயப்படுகிறயா?

மா.—இல்லை, பயப்படவில்லை. ஆனல் அருவருகிறேன, உக்கிரமா, . . . . . .

உக்.—அவைகளை எல்லாம பின் பேசலாம இப்போது உன் மனதுக்கு விரோதமாகச செய்ய நான் விரும்பவில்லை. மாதே, இந்த ஆடையைப் பிடித்து என்னைத் தொடர்ந்துவா. இனி தொலைதூரம் நடக்க வேண்டியதில்லை, என்றான்.

மரகதவல்லி மீண்டும் பேச மனங் கொள்ளவில்லை. நடப்பது நடக்கட்டும். ஈசன் நமது பக்கத்திலிருப்பார். என்று எண்ணி சற்று திடங்கொண்டவளாக அவனைத் தொடர்ந்து சென்றாள். சற்று தூரம் செல்ல இரண்டு மூன்று படிகளிறங்கினார்கள். பிறகு ஒரு குகைக்குள் போவதுபோ லிருந்தது. பிறகுமுன்போலவே பரவெளியா யிருப்பதைக் காட்ட காற்று வீசிக்கொண் டிருந்தது. தரையும் மணல்

நான் எவ்வளவு காரியம் செய்திருக்கிறேன் என்பதை அறியாயாளுல்.

மரகதவல்லி — உக்கிரமா, எனக்காக நீ செய்த காரியம் மெச்சத்தக்கது. என்னை இந்த கொண்டு வந்து அடைக்கும் வேலை

உக்.—உன்னை நான் இந்த ஒரு கைதி போல அடைத்து வைக்க எண்ணவில்லை அம்மு, நீ ஒரு வார்த்தை மட்டிலும் கூறுவாயானல் உன்னை இவ்விடத்திற்கு இராக்கினி போல நடத்துவேன் உன் சுதந்திரத்தைப் பறிக்க எனக்கு என்ன பயித்தியமா? மாதே, என்னை விவாகம் செய்து கொள்ளுவதாய் ஒரு வார்த்தை மட்டிலும் கூறுவாயானல் போதுமானது. நீ இந்த சகல உரிமையுடன் யாவருக்கும் யஜமானுன எனக்கும் எஜமானியாக விருக்கலாம் அம்மா, நான் உன்னைக் கேட்பது ஒரு வார்த்தை மட்டிலுமே.

மரகதவல்லி. "உக்கிரமா, நான் உனக்கு ஒரு வார்த்தையில் என் இஷ்டத்தைக் கூற விரும்புகிறேன் ஆயானுல் கேள். நான் உன்னை அருவருக்கிறேன்" என்று திட்டமாயும் கம்பீரமாயும் மொழிந்தாள் இதனைக் கேட்ட சிங்களத்தலைவன் முகம் மாறியது கோபத்தால் கண்களில் நெருப்புச் சுவாலை வீசியது உரத்த சத்தமாக சிங்கம் உறுமுவது போல "அடி, உனக்கு என்ன தைரியமடி, இப்படி என்னிடம் கூற உனக்கு என்ன. . .

மரகத.—" உனக்கு நான் பயந்திருப்பதில்லை. நான் யாவற்றிற்கும் துணிந்திருக்கிறேன் உக்கிரமா, என் இஷ்டத்தை முன்னமே கூறினேன். இப்

போதே கேள் உனக்கு மதியும் சொல்லுகிறேன். நான் இப்போது ஒருவருக்கு பத்னியா யிருக்கிறேன். என்னைக் கோருவது உனக்கு முறையாக மாட்டாது. மேலும் நான் உன்னை ஒரு அன்னைபோல் காப்பாற்றியிருக்கிறேன். உக்கிரமா, நீ ஒரு ஆதாரவும் அற்றவனாக காயம்பட்டுக் குழந்தைபோல் பலவீனவனாகக் கிடக்கையில் நான் உனக்கு ஆதரவு அளித்தேன். வேங்கை வரிப்புலிகளுக்குச் செய்த உபகாரிகள் அவைகளுக்கு ஆகாரமாவதே சம்பாவனையாகப் பெறுவதுபோல எனக்கு நீ சம்பாவனை யளித்தாய். உக்கிரமா," என்று பின்னும் ஆரம்பிக்கும்போது கள்வர் தலைவன் முகம் வாடியது. யாது பதில் கூறுவதென்று தோன்றாதவனாக அசைவற்று நின்றான். அப்போது கோகிலம் என்னும் பேரிளம் பெண் அங்கு வந்தாள். அவளைக் கண்டவுடன் சிங்களக் கள்வன் ஒருவாறு சமாளித்துக் கொண்டு, 'கோகிலம் இவள்தான் உன் எஜமானி நான் கூறியது யாவும ஞாபகத்திருக்கட்டும" என்று அவளிடம் கூறி வெளியே போனான்

கோகிலம் மரகதவல்லியின் முன்னே வந்தாள். கருங்குயில் குன்றத்தரசி அவளை அலட்சியமாய்ப் பார்த்து ஒன்றும் பேசாமலே அங்கு போடப்பட்டிருக்கும் ஆஸனத்திலிருந்தாள். அவள் மன[illegible] வழிழந்து வந்த கணவனை நாடிச் சென்றது.

# 10-வது அத்தியாயம்.

## அவள் கொண்ட கடைசி எண்ணமும் பாழாகியது.

கோகிலம் மரகதவல்லியின் கால்மாட்டில் வந்து உட்கார்ந்து அனுதாபத்துடன் அவளைப் பார்த்தாள். மரகதவல்லியோ அவளைக் கவனிக்கவில்லை. அவள் எண்ணமெல்லாம் அவள் அன்பைக் கவர்ந்தவர்பால் சென்றிருந்தது. தன்னை அன்பாய்க் காதலித்த தனது கணவர் இப்போது எப்படி இருக்கிறாரோ வென்று எண்ணினாள். தன் அரிய பிதா தன்னைப் பிரிந்து ஆற்றாது என்ன செய்கிறாரோ வென்று எண்ணினாள். தன்னை ஒரு தோழி என்று எண்ணியபோதே பிரிந்திருக்கச் சகியாதவள் இப்போது எப்படிச் சகிப்பாள்? என்று எண்ணும்போது அவள் கண்களில் நீர் பெருகியது. தனக்கு உரியவர்கள் யாவரையும் பிரிந்து இப்படி வருந்துவதற்கு உக்கிரமசிங்கனே காரணமாயிருந்தானென்று எண்ணும்போது அவள் அவனை வெறுத்தாள். மரகதவல்லியின் முகம் மாறும் தோற்றத்தைப் பார்த்திருந்த கோகிலம் அவளைப் பார்த்து, "தேவி, நீங்கள் வருந்துவதாகக் காண்கிறது. இவ்விடம் தங்களுக்குப் பிடிக்கவில்லையோ?" என்று தயவுடன் கேட்டாள். கருங்குயில் குன்றத் தரசி விசனத்துக்குரிய தன் யோசனையில் அவள் கேட்பதைக் கவனிக்கவில்லை. வேலைக்காரி மறுபடியும், "தேவி, உங்களைக் காண வருந்த வேண்டியிருக்கிறது" என்றாள். இதனைக் கேட்டவுடன் மரகதம்

கூறினால் அவள் உடன்படக் கூடுமென்று எண்ணினாள். அதே சமயத்தில் கதவு திறக்கும் சப்தம் கேட்டது. உக்கிரம சிங்கன் உள்ளே வந்தான்.

அவனைக் காணவும் மரகதவல்லி திடுக்கிட்டாள். ஒருகால் தான் பேசிக்கொண்டிருந்த யாவும் ஒற்றுக் கேட்டுக் கொண்டிருந்து இப்படி வந்தானோ என்று எண்ணினாள். கள்வர் தலைவன் அவளைப்பார்த்து 'மாதே, நானிப்போது வந்தது உனக்குப் பிடிக்கவில்லை போலிருக்கிறது. என்ன செய்வேன்? என்னை மன்னிக்கவேண்டும். ஒரு விசேஷ காரியத்தை முன மறந்து போனேன். அதுபற்றிதான் இப்போது இங்கு வந்தேன்.

மா. என்ன காரியம்? சீக்கிரமாக உனது காரியத்தைச் சொல்லிப் போகலாம்

உ. — என்ன என்னைத் துரத்துகிறாயா? அழகு, ஏன் இவ்வளவு கடுமையாகப் பேசுகிறாய்?

மா.—அதுபற்றி இப்போது விவரமாய்ப் பேச வேண்டிய அவசியமில்லை.

உக்.—இல்லை. சற்று பேசியே யாக வேண்டும்.

மா.—"இதுதான் உனது காரியமானால் உன காரியம் முடிந்தது. நீ வெளியே போகலாம். உனனுடன் பேச எனக்குப் பிரியமில்லை" என்று சொல்லி மறுபக்கமாகத் திரும்பினாள்.

உக்கிரமசிங்கன் முகம் மாறியது. எத்தனை காலம் இவள் இப்படி நம்மைக் குரூரமாய் நடத்தப் போகிறாள். பார்ப்போம் என்று தனக்குள் தானே எண்ணிக்கொண்டு, "அழகு, நீ அணிந்திருக்கும் ஆபரணங்கள் எல்[illegible]ாகளைத் தந்திரம் செய்

பக்கடும். உன்னைக் காக்க நான் அவ்வாபரணங்களைக் கொள்ள வேண்டியவனாயிருக்கிறேன். அதுபற்றியே இப்போது உன்னிடம் வந்தேன். உன் அணிகள் யாவையும் என்னிடம் கொடுத்துவிட வேண்டும்.

மா.—என் ஆபரணங்களைப் பறித்துப்போக வந்ததே முன் உன் காரியமென்றாயோ? நல்லது. . .

உக—மாதே, உன் ஆபரணங்களின் மேல் ஆசைவைத்து அதனைக் கொள்ள வரவில்லை. நான் முன் கூறியதுபோல் ஒரு வார்த்தை கூறுவாயானால் இதுபோன்ற அணிகள் பல உனக்குக் கொடுக்கச் சித்தமாயிருக்கிறேன்.

மா.—உன் கலன்கள் எனக்கு வேண்டாம். என்னுடையதே எனக்குப் போதுமானது.

உக்—உன்னுடையவை என்னுடையவை என்கிற பேதம் நமக்குள் வேண்டியதில்லை. நான் முன் கூறியதுபோல் என்னை விவாகம் செய்துகொள்ள சம்மதிக்கிறாயா? அல்லது உன் ஆபரணங்களைக் கழற்றி என்னிடம் கொடுக்கிறாயா?" என்று கூறியவுடன் மரகதவல்லி கோபங்கொண்டவளாக பதில் பேசாமலே நகைகள் யாவையும் கழற்றி அவனிடம் கொடுத்துவிட்டாள். உக்கிரமசிங்கன் கைநீட்டித் தோய் அவைகளை வாங்கினான். பிறகு மெதுவாய் "உன்னிடத்தில் வேறு நகைகள் இருப்பதில்லையா?" என்று கேட்டான்.

மா.—இல்லை,

உக்—"உன் வார்த்தையில் எனக்கு நம்பிக்கையுண்டு. மாதே, இக்[illegible]ங்கள் யாவும் உனக்கு

வெறும் சுமைகளாகவே யிருந்தன. ஒருவித அணியு
மில்லாமலே நீ அணங்கு போலிருந்தாய். அழகு
செய்வது வீணேயாகும். இதனை அறியாது உன்னை
வீணில் இந்த நகைகளைச் சுமக்கச் செய்தார்கள் ''
என்று சொல்லிக்கொண்டு மாகதவல்லியை உருக்க
மாகப்பார்த்தான். கருங்குயில் குன்றத்தரசி அவ
னைப் பார்க்க வெறுப்புள்ளவளாக கம்பீரத்துடன்
மறுபக்கமாகத் திரும்பினாள். ஆ! என்ன வனப்பு!
என்ன பெருமை! என்று தனக்குள் சொல்லிக்
கொண்டே அவளைப் பார்த்து ' [illegible], உன் நகை
கள் எனக்குவேண்டாம். அவைகள் உன்னிடமே
இருக்கட்டும். உன் அழகைக் குறைப்பது என்
நோக்கமல்ல. ஆனால் அன்பு, எனக்கு ஒருவார்த்தை
கூறுவாயானால்,'' . . . . .

மா —'' உன் காரியம் முடிந்தது இனிப்போகலாம்''
என்று திரும்பிப் பாராமலே பதிலுரைத்தாள். கள்
வர் தலைவன் தேகம் குன்றியது. வாலை இடையில்
ஒடுக்கி விரைவில் ஓடும் நாய்போல் திரும்பிப
போனான். அறையின் நிலையைத்தாண்டிச் சென்றவன்
மறுமுறையும் ஒருமுறை அவள் முகத்தைக்கண்டு
போகலாகாதா என்று திரும்பினான். மாகதவல்லி
திரும்பிப் பாராமலே அகன் ஆசனத்தில் போய்
உட்கார்ந்தாள். ஆகட்டும் பார்த்துக்கொள்வோம்
அவள் நம்மைவிட்டு எங்கே போய்விட்டாள் என்று
தனக்குள் எண்ணியவனாகத் தன் வழியே திரும்பிப்
போனான்.

கருங்குயில்குன்றத்தரசி தான்கொண்ட கடைசி
எண்ணமும் பாழாகியதைக்கண்டு துக்கத்தோடு

கரத்தை முகத்தில் ஊன்றி யோசிக்கலானாள். அப்போது கோகிலம் அவளருகில்வந்து "தேவி, உங்கள் ஆடை நனைந்திருக்கிறதே அதனை உலர்த்துகிறேன். இதோ இந்த உடையை அணிந்துகொள்ளுங்கள்" என்று சொல்லி ஒரு சேலையைக்கொண்டுவந்து காட்டினாள். மரகதவல்லி அவள் முகத்தைப்பார்த்து பிறகு பாராமலே பூமியைப் பார்த்துக்கொண்டிருந்தாள். அவள் இரக்கமுள்ளவளாய்த்தான் காணப்படுகிறாள். அவளைச்சற்று நமக்கு உதவிபுரியும்படியாகக் கேட்கவும் இப்போது நம்மால் ஆகாமல் போயிற்றே. அவள் நமக்கு செய்யும் உதவிக்கு ஏதேனும் பரிசு கொடுப்பதாக வாக்களித்தால் ஒருகால் செய்யக்கூடும். இப்போது அவளுக்குக் கொடுக்கக்கூடிய பொருளும் நம்மிடத்தில் இல்லையே என்ன செய்வது? எல்லாம் அந்த கொடியன் கொண்டுபோனானே என்று தனக்குள் தானே யோசித்துக்கொண்டிருந்தாள். கோகிலம் தன் கேள்வியை இரண்டாமுறை கேட்க, "ஆயி, உன்னுடைய உபசாரணைக்கு நான் நன்றி பாராட்டுகிறேன். ஆனால் நீ கொண்டுவரும் உடையோ அவளுடையது. யான் அதனைத் தீண்டமாட்டேன். என் உடையே எனக்குப் போதுமானது. கூடுமானால் நீ இங்கு சற்று அக்கினி குண்டத்தில் தீ மூட்டு. நானே என் ஆடைகளை உலரவைத்துக்கொள்ளுகிறேன்" என்று சாந்தமாய்க் கூறினாள். கோகிலம் உடனே அக்கினி குண்டத்தில் தீ மூட்ட மரகதவல்லி எழுந்து நெருப்பண்டையில் சென்று குளிர்த்த தேகத்தையும் நனைந்த ஆடையையும் உலரவைத்துக்கொண்டிருந்தாள். கோகிலம் அவளண்டையில் வந்து, "தேவி,

தாங்கள் களைப்புள்ளவர்களாயிருக்கிறீர்கள்; போஜனம் தயாராயிருக்கிறது; அவைகளை இங்கு கொண்டு வரட்டுமா? அல்லது .... ..

மா.—ஆயி, எனக்குப் பசியில்லை. இப்போது எனக்கு ஒன்றும் வேண்டாம்

கோகி.—என்ன ஆச்சரியம்! உங்களுக்கு பசியில்லையென்றால் யார் புசிப்பார்கள்? தேவி தாங்கள் பகல்கூட புசித்தவர்களாகக் காணப்படவில்லையே.

மா.—"ஆம். நான் காட்டில் சில வாழைப்பழங்களையே தின்றேன். ஆனால் இப்போது உண்பதற்கு எனக்கு மனதில்லை" என்று சொல்லி அவளைக் குறிப்பாய்ப் பார்த்தாள்.

கோகி.—தேவி, நீங்கள் கூறுவதைப் பார்த்தால் உக்கிரமசிங்கனின் உணவைப் புசிப்பதில்லை என்னும் வைராக்கியம் கொண்டவர்களைப்போலிருக்கிறதே?

மா.—ஆயி, நீ யூகித்தது உண்மையே. அவன் என் உணவை உண்டு எனக்குத் துரோகம் செய்தான். ஆதலால் நான் அவன் உணவைப் புசிக்கப் போகிறதில்லை.

கோகி.—பின்... ..எப்படி .........

மா.—எப்படியென்றால் அப்படித்தான் ஆயி. நீ வயது அடைந்தவளாயிருக்கிறாய். எனக்கு விரோதமாயிருக்கமாட்டாய் என்றும் நம்புகிறேன்.

கோகி.—உங்களுக்கு உதவி புரிய என்னால் ஆனதைச் செய்வேன். ஆனால் தேவி, தாங்கள் உண்ணாது எப்படி ஜீவிக்கக்கூடும்?

மா.—ஜீவிப்ப... ?

கோகி.—என்ன தேவி, தாங்கள் கூறுவது புதுமையாயிருக்கிறதே.

ப.—புதுமையென்ன ஆயி, இவ்வுலக நிலையே அநித்தியமானது. எவரும் ஒரு நாளைக்கு இறக்கவேண்டியவர்கள். பலர் எத்தனை காலம் சென்றாலும் ஒரு காலத்தில் மாளவேண்டிய மாயவுடல் இன்று போனாலென்ன? நாளை போனாலென்ன? ஆயி, பிறவா வரந்தந்து வாழ்வளித்துப் பார்க்கினும் சாதச் துணிவது உண்மையானது.

கோகி.—"தேவி, நீங்கள் கூறுவது உண்மைதான். காலன் வாய்ப்பட்டு மீளுபவர்கள் இவ்வுலகத்திலில்லை" என்று சொல்லி பெருமூச்சு விட்டாள். இவள் பெருமூச்சு விடுவதைக்கண்டு பாகதவல்லி சற்றுலோசித்து இவள் வருந்தக்கூடிய காரியம் ஏதோ இருக்கிறது. இவள் பழைய ஒழுக்கத்தை எண்ணி இப்போது வருந்துகிறாள். இவளை இந்த விஷயத்திலேயே நம் காரியத்தை ஒக்கப்படுத்த வேண்டும். இவளோடு அனுதாபமாகப் பேசுவது இவளுக்கு ஆறுதலாகும். அதுவே நமது காரியத்துக்கு அனுகூலமாகும் என்று தனக்குள் யோசித்துக்கொண்டு, "ஆயி, நீ உண்மையில் நல்லவளாயிருக்கிறாய். நீ வருந்துவதைப் பார்த்தால் உன் ஜீவியத்தில் உனக்கு வருத்தம் செய்யக்கூடிய காரியம் ஏதோ நடந்திருக்கிறதுபோல் தோன்றுகிறது. ஆயி, எனக்கு அவைகளைக்கூறுவாயானால் ஒருகால் உனக்கு என்னால் உதவி செய்யக்கூடும்.

கோகி.—அம்மா, என் துயரம் ஆற்றக்கூடியதல்ல. அதற்கு உதவியும் [illegible]வதில்லை.

மா.—இப்படியா என்னுகிருய்? நான் உனக்கு ஆறுதல் அளிக்கப் பிரயாசைப்படுவேன். ஆயி, உன காரியத்தை அறியவேண்டுமென்கிற எண்ணம் என்னிடத்தில் இல்லை. ஆனால் உனக்கு உதவி செய்யக் கூடுமோவென்றுதான் கேட்டேன்.

கோகி.—தாயே, உன்னுடைய நற்குணம் எனக்கு ஆறுதலளிக்கிறது. மனமாரத்தான். ஆனால் தேவி, இன்று நேரமாகிவிட்டது. பசிக்கும் அருந்தி உறங்கினால் நாளை பார்த்துக்கொள்ளுவோம்.

மா.—உன்னிஷ்டப்படியாகட்டும். ஆனால் நான் புசிக்கவிரும்பவில்லையென்பதைப் பன்முறை கூறியது உனக்கு ஞாபகமில்லையா?

கோ.—ஆம் ஆனால் தேவி அப்படிச் செய்வது உத்தமமாயிராது என்னுகிறேன்.

மா.—“ஆயி, உன்னைச் சந்தோஷப்படுத்துவதற்காகவும் இரண்டொரு வாழைப்பழங்கள் சாப்பிடுகிறேன். சிறிது பாலும் கொண்டுவா” என்றவுடன் கோகிலம் எழுந்து அவள் வேண்டியவைகளைக் கொண்டுவந்து கொடுத்தாள். கருங்குயில்குன்றத்தரசி பிறகு ஒன்றும் பேசாமலே தன் ஆலோசனையில் அவள் கொண்டுவந்தவைகளைக் கண்கொண்டு பாராமலே சிறிது புசித்துத் தன் படுக்கைக்குச்சென்றாள். கோகிலம் தன் வேலையாவும் முடித்துக் கொண்டு மரகதவல்லிக்கு அருகே போடப்பட்டிருந்த ஒரு தாழம்பாயில் படுத்துக்கொண்டாள்.

## 11-வது அத்தியாயம்.

### ஐயோ! அவன் வந்து விட்டான் !!

இரவு நடுச்சாம வேளையாகியும் மாகதவல்லி உறங்கவில்லை. கவலையுள்ளவர்கள் தூங்குவது முண்டோ? செல்வவந்தர்கள் தினம் சிவராத்திரி கொண்டாடுவதும் இது காரணம் பற்றியன்றோ?

கருங்குயில்குன்றத்தரசி உக்கிரமசிங்கன் குகையி லிருந்து எவ்வாறு தப்புவது என்று எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணினாள். அவள் அருகில் படுத்திருந்த கோகிலம் நன்றாய் நித்திரை செய் தாள். கோழியும் இரண்டாமுறை கூவியது. மாகத வல்லி படுக்கையை விட்டு எழுந்து ஒரு நாற்காலியில் உட்கார்ந்தாள். இரவு ஆலோசனை தருமென்பார்கள். ஆனால் வரேந்திரன் மனைவிக்கோ துக்கத்தையும் அவநம்பிக்கையுமே கொடுத்தது. தனக்கு காவ லாளியாகவும், வேலைக்காரியாகவும் நியமிக்கப்பட்ட கோகிலத்தைப் பற்றி எண்ணினாள். கேவலம் அவ ளால் தனக்கு என்ன உதவி செய்யக்கூடும் என்று மதித்தவளாக அவள் அயர்ந்து தூங்குவதைக் கூர்ந்து பார்த்தாள். அப்போதுதான் புரண்டு படுக் கப்போன கோகிலம தன்னருகில் கள்வர் தலைவனின் கைதி இல்லாதது கண்டு திடுக்கிட்டு எழுந்தாள். அவள் கலங்குவதைக் கண்ட அரசி "ஆயி, சந்தே கிக்கவேண்டாம். இன்னமும் நேரமிருக்கிறது. நீ கவலையில்லாது உறங்கலாம்." என்று சாந்தமாய்ச்

சொன்னாள். இவள் இனிய சொல்லைக்கேட்ட கோகிலம் திரும்பி "தேவி, தாங்கள் என்னைவிட்டுச் செல்நீர்களென்பதாக நான சந்தேகிக்கவில்லை. ஆனால இவ்விடத்தை விட்டு வெளியே செல்லத் துணிந்தும் பயனில்லாது அவஸ்தைப் படுவீர்களே என்று தான பயந்தேன். அவசரப்பட்டு நீங்கள் அப்படிச செய்தால அது எனக்கும் தங்களுக்கும் நன்மையாக மாட்டாதே."

மர.—நீ கூறுவதைப் பார்த்தால் நான் வெளியே செல்லும் நோக்கமுடையவள் என்பதாக நீ எண்ணியிருக்கிறாய் போலும்.

கோகி.—"அப்படியில்லையென்பதாக உங்களால சொல்லசகூடுமோ?" என்று கேட்கவும் மரகதவல்லி பதில சொல்லவில்லை. சற்று நேரம் யோசித்துப் பிறகு "ஆயி, அது இருக்கட்டும். இரவு தாங்கள் ஏதோ வருந்தியவர்களாக இருந்தீர்களே. அதன் காரணம் என்ன? நான உலக வாழ்வு அனித்தியமானது என்று கூறினேன்.......

கோகி.—ஆம், ஆம். எனக்கு ஞாபகம் இருக்கிறது. அப்போது என் செல்வமகளின் ஞாபகம் வந்தது என்று சொல்லி பெருமூச்சுவிட்டு, "தேவி, அவள் உயிருடன் இருந்தால் தங்களுடைய வயதுடையவளாயிருப்பாள். பாவி நான கொடுத்து வைக்கவில்லை. அவள் இறந்துபோனாள் பாழும் எமன் என்னைக் கொண்டுபோகவில்லை.

மர.—அவள் இறந்து வெகுகால மாகிறதோ? உன கணவர்........

கோகி.—அவள் இறந்து இன்னும் மூன்று மாதம் ஆகவில்லை. தேவி, நான் ஒரு தனவந்தன் குமரியல்ல. அதுபோலவே ஒரு விவசாயிக்கு வாழ்க்கைப்பட்டேன். என் கணவர் எனக்கு மணமான 5-வருடத்திற்கெல்லாம் பரலோக மடைந்தார். என்னைப் பெற்றோர்களும் என் பதிக்கு முன்னமே பாத்தை யடைந்துவிட்டார்கள். என் வாழ்க்கைக்கு ஆதரவும் ஜீவிப்பதற்கு ஆறுதலுமான என் மகள் மரகதம் என்பவள் ஒருவளே எனக்கு இருந்தாள். தேவி அவள் உங்களைப்போல அழகுடையவள் அல்லவென்றாலும் உங்களுடைய சுருண்ட கூந்தல் அவளுக்கும் இருந்தது. அவள் சுரிகுழலுக்கு ஆசைவைத்தே ஒரு தனவந்தன் அவளை மணம் செய்துகொள்ள சம்மதித்திருந்தான். அவள் திடீரென்று மலப்பிணியால் இறந்துபோனாள். அவளோடு என் ஜீவியம் முறிந்து போய்விட்டது. இவ்வுலகத்தில் ஆதரவற்றுத் தனியாக விடப்பட்ட நான் ஜீவன நிமித்தமாக என்னிடமிருந்த நகை, நாணயம், மாடு, வீடு முதலியவைகளை விற்றுத்தின்றேன். கடைசியாக வகையில்லாது வருந்தும்போது உக்கிரமசிங்கன் என்னை இவ்விடம் அழைத்துவந்தான். நான் இங்கு வந்த நாளையோடு ஒருவருடமாகிறது.

மர.—அப்படியா? உன் ஜீவியம் வருந்தத்தக்கதாகவே யிருக்கிறது. ஆயி, உன் மகள் மரகதமா? என் பேர் கொண்டவளா?

கோ.—ஆம் தேவி மரகதம்தான். உங்களுடைய பேரும் மரகதமா? என்ன விநோதம்! உங்களைப் பார்க்க என் அரிய மகளின் ஞாபகம் வருகிறது.

மர.—உன்னுடைய மகளுக்கு என்ன வயதிருக்கும்? ஆயி, அவள் மிக்க நல்லவளாயிருந்திருக்க வேண்டும்.

கோ.—"தேவி, அவளுக்கு வயது 15-தான். ஆ! என்ன வளர்ச்சி வளர்ந்தனள். நமன்வாயில் சிக்கவே அவள் சீக்கிரமாக வளர்ந்துவந்தாள் போலிருக்கிறது" என்று சொல்லிக்கொண்டே கண்ணீர் சொறிந்தாள். அவள் கோலத்தைக் கண்ட மரகதவல்லி ஒன்றும் பேசவில்லை. மகளைப் பிரிந்து அழும் இவளைக்காணவே தன்னைக்காணாது தன்தாய் என்ன துன்பம் அனுபவிக்கிறாளோ என்று எண்ணினாள். அவள் கண்களில் நீர் ஆறாய்ப்பெருகியது. வெகு நேரம் அழுதுகொண்டே இருந்தவள் தலை நிமிர்ந்து கோகிலத்தைப் பார்த்தாள். அவளும் அழுத கண்களோடு மரகதவல்லியைப்பார்த்து, "தேவி, தாங்கள் ஏன் அழுகிறீர்கள்? என்னுடைய வார்த்தைகள் தங்களை வருத்தியிருக்கக் கூடுமானால் என்னை மன்னிக்கவேண்டும். தங்களை வருத்துவதற்காக என் காரியத்தை தங்களுக்குச் சொல்லவில்லை" என்று அனுதாபத்துடன் சொன்னாள்.

மர.—ஆ! என்விதி என்னை வருத்துகிறது. அதற்காக நீ வருத்தப்படாதே. மகளைத்துறந்த நீ எவ்வாறு வருந்துகிறாயோ அதுபோலவே என்னைத் துறந்து என் அன்னையும் வருந்துவாளே என்று எண்ணியபோது என்னால் அழாமலிருக்கக்கூடவில்லை. அவள் வருந்துவாளே என்கிற எண்ணம் என்னைத் துன்பப்படச் செய்தது.

கோ.—தேவி, உங்களுக்கு அன்னை இருக்கிறார்

களோ ? அவர்களைத் தனியாக வருந்தவிட்டுவிட்டா இவ்விடம் வந்துவிட்டீர்கள் ?

மா.—நான் வந்துவிட்டேனா ? என்ன ஆயி, உளறுகிறாயே. நான் என் இஷ்டத்திற்கு விரோதமாய்க் கள்வர் தலைவனால் களவாடப்பட்டு இங்கு கொண்டுவரப்பட்டிருக்கிறேனென்பதை நீ அறியவில்லையா ?

கோ.—அப்படியா? உங்களுக்குள் ஏதோ ஒப்பந்தமிருக்கிறதாகவும அவ்வித ஒபபந்தத்திற்கு ஏதோ தகரார் ஏற்பட்டதாகவும் அந்த விவகாரம் தீர்ந்தவுடன் உங்களை அவன் மணம் செய்துகொள்ளப் போவதாகவும் தெரிவித்தானே.

மா.—ஒப்பந்தம் என்ன ? விவகாரம் என்ன ? அவைகளெல்லாம் ஒன்றுமில்லை. இது பற்றி உனக்கு யார் சொல்லியது ?

கோ.—யார் ? உக்கிரம சிங்கன்தான்.

மா.– அவனா ? என்ன கிருத்திரமம ? அந்தச் சண்டாளனையா ?...அவனை நமன் கொண்டுபோக மாட்டானா!

கோ.—தேவி, சப்தம் போடவேண்டாம். பொழுது விடிந்துவிட்டது. தாங்கள் வெளியே சென்று உலாவி வர மனமுள்ளவர்களா யிருப்பீர்களானால்.........

மா.—என்னை வெளியே அழைத்துப்போக அனுமதி யுண்டோ ?

கோ.—உண்டு. என்னுடன் வரலாம்.

மா.—"அப்படியானல் செல்லுவோம். வெளியில் வீசும் சுதந்தர காற்றானது எனக்கு ஆறுதல் அளிக்கக்

கூடும்" என்று சொல்லி எழுந்தாள்.

கோகிலம் எழுந்து தன் கையிலுள்ள சாவியால் அறையின் கதவைத் திறந்தாள். இருவரும் வெளியே சென்றார்கள். குளிர்ந்த காற்று பட்டவுடன் மரகதவல்லிக்கு உற்சாகம் பிறந்தது. தன்னை அடைத்து வைத்திருக்கும் அறைக்கு வெளியில் ஒரு சிறு தோட்டமிருந்தது. மரகதவல்லிக்குப் பூக்கள் மீதிலும் அதன் செடிகளின் மேலும் பிரியமதிகம் என்பதை உணர்ந்தவனான கள்வர் தலைவன் தூரதேசமிருந்து அரிய செடிகளைக் கொண்டுவந்து அங்கு பயிராக்கி வைத்திருந்தான். சுபாவத்திலேயே பூக்களை விரும்பும் மரகதவல்லி இடம்பார்த்து அங்குள்ளவைகளைக் கவனிக்கவில்லை. ஆரத்திலுள்ள மலைகளையும் பாறைகளையும் அதற்கடுத்த காடுகளையும் காணுவது அவளுக்குச் சற்று ஆறுதலாயிருந்தது. தன்னை அடைத்து வைத்திருந்த அறையைத் திரும்பிப்பார்த்தாள் அதன் பயங்கரம் அவளுக்கு அருவருப்பாயிருந்தது. இந்த அறையில் மறுபடியும் தான் வைக்கப்பட்டிருக்கச் செய்தனை புரிவானானல் என்று எண்ணிக்கொண்டே கோகிலத்தைப் பார்த்தாள். அவள் இனிய பார்வை மரகதவல்லிக்குச் சற்று உற்சாகமளித்தது. உடனே, "ஆயி, என்மட்டில் நீ அன்புள்ளவளா யிருப்பாயானால் சற்றுதூரம் சென்றுவரத் தயை செய்யவேண்டும்" என்று சொல்லி மரங்களையும் மலைகளையும் காண்பித்து, "அங்கு செல்வோமானால் என்மனம் சற்று ஆறுதலடையும் என்று எண்ணுகிறேன் உனக்கு அதில் பிரியமிருக்குமானால்"....

கோகிலம்.—"தேவி, அப்படியே செல்லுவோம்.

உங்களுக்குச் சந்தோஷமாகக் கூடியகாரியம் எது செய்தபோதிலும் உக்கிரம சிங்கன் கோபிக்கமாட்டான்" என்று சொல்லிக்கொண்டே இருவரும் படிகளைவிட்டு கீழிறங்கி தாழ்வாரங்களின் புறமாக நடந்தார்கள். மரகதவல்லி எங்கும் நிறைந்த தேவன் நம்மைக் கைவிடமாட்டார் என்று உறுதிகொண்டவளாக கோகிலத்தைப் பின்பற்றி நடந்தாள். பாறைகளின் வழியாக கிழக்கு நோக்கிச் சற்றுதூரம் நடந்தார்கள்.

பசும்பொற் கிரணங்களைப் பரப்பிக் கதிரவன் எழுந்தான். அவன் செழிய கிரணங்கள் மரகதவல்லியின் மேனியில் படவும் கருத்தயில் தளர்த்தசி முகம் மரகதம்போல் பிரகாசித்தது. தான் உக்கிரம சிங்கன் வசம் சிறைப்பட்டு நடப்பதைக்கூட மறந்தவளாக பழைய அனந்தரான பகல் பாறைகளைக் கண்டு குதித்தோடியதுபோல இப்போதும் மரகதவல்லி உற்சாகத்தோடு பாறைகளைக் கடந்து நடந்தாள். அவள் தன்மையை நன்றாய் அறிந்தவளாகிய கோகிலம், "தேவி, இனி தூரமாக செல்லவேண்டாம்" என்று சொல்லும்போது மரகதவல்லி திடுக்கிட்டாள். அப்போதுதான் அவள் நிலை அவளுக்கு விளங்கியது. தன் கண்களைச் சுற்றும் சுற்றிலும் பார்த்தாள். பெண் மானுக்கு ஒப்பான அவள் மருண்ட பார்வைக்கு அறிமுகமான சிலவிடமும் விளங்குவதுபோல் இருந்தது. ஒரு புறமாகப்பார்த்து இந்தக் கொடிவழியே செல்லுவோமானால் நமது பழைய ஏகாந்த வாசத்திற்குப் போய்ச்சேரலாம் என்று எண்ணினாள்.

கோகிலம் தன் எஜமானி மருண்ட பார்வை

யுடன் நாற்றிசையும் நோக்குவதைக் கண்டு, "தேவி, நேரமாகிவிட்டது திரும்புவோம்" என்றாள்.

இவள் கூறுவதொன்றும் உணராதவளாகிய அலமு நாம் இவ்வழியே செல்லுவோமானால் ஊரை யடைந்துவிடலாம் ஊரில் வந்து உக்கிரம சிங்கன் பிடிக்கப்போவதில்லை. ஆ! சுதந்தரம்! என்று தன் வாய்க்குள்ளே சொல்லிக்கொண்டு, கோகிலம் கூறிய வைகளுக்குப் பதிலாக, "திரும்பிப்போவதா? ஒரு போதும் இல்லை. நான் முன்வைத்த காலை பின் வைக்கப் போகிறதில்லை" என்று தன்னையும் அறியா யாமலே உரக்கக் கூவினாள்.

இதனைக்கேட்ட கோகிலம் திடுக்கிட்டாள். சற்று நிதானித்து, "தேவி, என்ன கூறினீர்கள்" என்று கேட்டாள்.

உடனே கருங்குயில் குன்றத்தரசி தான்செய்த பிழையை அறிந்துகொண்டவளாக என்ன! இவ் வாறு கூறிவிட்டோமே? அவள் என்ன எண்ணு வாள்? என்று யோசித்து, "ஆயி, என்மீதில் இரக்கம் வைக்கவேண்டும். உன்னுடைய மகள் ஞாபகமாக எனக்கு உதவி செய்யவேண்டும்.

கோ.—உதவியா? என்ன உதவி?

மர.—என்ன, என்னை இவ்வழியாகப் போகவிட்டு விடவேண்டும்.

கோ.—உங்களை விட்டுவிடுவதா? என்ன? . . .

மர.—ஆம் விட்டுவிடவேண்டும். ஆயி, நான் உன்மகள்போலிருப்பதாகக் கூறவில்லையா? நீ உனது மகள் கேட்டதை மறுத்ததுண்டோ? ஆயி, என் மீதில் இரக்கமில்லை. என்னை இவ்வழியாக போக

விட்டுவிடு. உன் மகள் மரகதம் கேட்டதாக என்!

கோ.—அது என்னாலாகாது . . . ஆகாது . . . . . குழந்தாய், நீ இன்னமும் உன் காரியத்தை யறியவில்லை. நான் உன்னைப் போகவிட்டு விட்டால் உனக்கும் எனக்கும் ஆபத்தாய் முடியும். முதலில் நான் உன்னைப்போக விட்டுவிடுவேனானால் என்னைத் தொலைத்துவிடுவார்கள். நீயோ வெகு தூரம் செல்லமாட்டாய். ஏனென்றால் சற்று தூரத்தில் உக்கிரமசிங்களின் காவலாட்கள் இருந்து வருகிறார்கள். அவர்கள் உன்னைப் பிடித்துவிடுவார்கள். அதன் காரணத்தினாலேயே நாம் இனி வெகுதூரம் செல்லாது திரும்பிவிட வேண்டுமென்று முன்னமேயே உனக்குக் கூறினேன். குழந்தாய், இப்போது பார்த்தாயா? உன்னைப்போக விட்டுவிட முடியாததின் காரணத்தை.

மா.—ஆம் அறிந்துகொண்டேன், என்று கூறி மேலே சொல்ல நாவெழாதவளாக மௌனமாயிருந்தாள். தன்னுடைய எண்ணமெல்லாம் ஆகாயத்தில் கட்டிய பொன்கோட்டைக்குச் சமானமாயிருந்தது என்று எண்ணி துக்கசாகரத்தில் மூழ்கலானாள். இனி என்ன செய்வது என்று தோன்றாதவளாக அரிய பரந்தாமனை மனத்திலெண்ணி நாற்புறமும் நோக்கினாள். பாறைகளில் பாம்பு ஊருவது போல ஒரு மனிதன் நகர்ந்து வருவதைக் காணவே "ஆ! ஈசன் அருள்! அப்பா!!" என்று கூவினாள். இவள் கூச்சலைக்கேட்ட கோகிலம் இவளுக்கென்ன பித்து கொண்டுவிட்டதோ? ஏன் இப்படி அலறுகிறாள்? என்று எண்ணினாள். மறுக்கணமே அந்த

மனிதன் ஓடிவந்து மரகதத்தைக் கட்டிப் பிடித்துக் கொண்டான்.

அம் மனிதன் மாரமார்த்தாண்டப்பிரபுதான் என்று நாம் கூறவேண்டியதில்லை. இவர்கள் அக்களிப்பில் மரகதவல்லி தனக்கு காவலாளியான கோகிலத்தை மறந்து போனாள். கருங்குயில் குன்றத்தரசனும் மகளைக்கண்ட ஆனந்தத்தில் அவளுக்குத் துணையாக வந்திருப்பவளைப்பார்க்கவில்லை. சற்றுநேரத்திற்குப் பிறகு, "அப்பா, நீங்கள் எப்படி இங்கு வந்தீர்கள்?" என்றாள் மரகதவல்லி

மார—"மரகதவல்லி என் செல்வக்குழந்தாய்! அவைகளைப்பற்றி பேசுவதற்கு இதுசமயமல்ல. துரிதமாய் நட. செல்லுவோம். பிறகு யாவும் கூறுகிறேன்" என்று சொல்லிக்கொண்டே முன் நடந்தார். மரகதவல்லி அவர் பின்னே ஓடி "அப்பா, என் நாதர் உங்களோடு வரவில்லையா" என்று கேட்டவுடன் அரசன் முகம் சவம்போல வெளுத்தது. இதனைக் கண்ட அரசி திடுக்கிட்டு, "ஐயோ! அவர் இறந்தாரோ? அவன் கொன்றுவிட்டானோ? பாறைகளிலிருந்து கீழே தள்ளப்பட்டவர் எழுந்திருக்கவில்லையா? அப்பா!" என்று கூறி கருங்குயில் குன்றத்தரசன் தோளகளில் சாய்ந்தாள்.

அதேசமயத்தில் இவர்களுக்குப் பின் ஒரு சப்தம் கேட்டது. உடனே அரசன் திரும்பிப் பார்த்தான். கோகிலம் ஐயோ! அவன்! கண்டகன்! வந்து விட்டான்! என்று கூவினாள்.

——

உறங்குவது நல்ல குறியாம் என்று கூறியது உனக்குத் தெரியாதா? நீ அந்த மருந்தை அவனுக்கு முறைப்படி கொடுத்துவரவில்லையா? பிணியாளியாகிய நானே இரவில் நன்றாய் உறங்குகிறேனென்றால் கற்பகவல்லி மருந்து குடித்தும் நன்றாய் நித்திரை செய்யவில்லையென்றால் அந்த மருந்தை என்னவென்று மதிப்பது? அவர் கொடுத்த மருந்தை எப்போது கொடுத்தாய்?

மாணி.—வைத்தியர் கூறியதுபோல முறைதப்பாது வேளைக்குவேளை கொடுத்துக்கொண்டுதான் வருகிறேன்.

அஞ்.—அந்த மருந்தை இப்படிக்கொண்டுவா பார்ப்போம் என்று கேட்க அவள் ஓடி புட்டியிலிருந்து இருந்த மருந்தைக் கொண்டுவந்து அஞ்சனுவதியிடம் கொடுதாள். அவள் அதனைக் குலுக்கிப் பார்த்து "இதுவென்ன வெறும் தண்ணீர்போலிருக்கிறது இதில் என்ன சத்து இருக்கப்போகிறது. மாணிக்கவல்லி, இந்த வைத்தியன் சுத்த முட்டாள் குப்பத்தின் பரிகாரியாகிலும் இலேகிய முறையில் தக்க ஔஷதம் கொடுப்பான். ஊமத்தை அல்லது பூரணாதிமுதலிய இலேகியங்கள் தக்க பரிகாரம் செய்யக்கூடும்."

மாணி.—தேவி, தாங்கள் ஔஷத முறையில் பண்பட்டவர்கள்தான். நீங்கள் அருந்தாத மருந்தில்லை. ஆனால் உங்கள் வியாதிவேறு. அரசியின் வியாதிவேறு என்று எண்ணுகிறேன்.

அஞ்.—நீ மோசம்போகிறாய் மாணிக்கவல்லி . .

மாணி.—என் தேவி. தாங்களே பலமுறை கூறக்

கேட்டிருக்கிறேன். குப்பத்து பரிகாரி உங்களுக்குக் கொடுக்கும் மருந்து குணம்செய்யவில்லையென்று தாங்கள் பலமுறையிலும் கூறியதில்லையா ?

அஞ். —ஆம் அது உண்மைதான். ஆனால் அவன் மருந்து இந்தத் தண்ணீரைவிட குணம் செய்யும் என்பதே என் எண்ணம். அஃதிருக்கட்டும் வைத்தியர் கடைசியாக எப்போது வந்தார் ?

மாணி.—இரவு 9-மணிக்கு வந்தார். இப்போதும் வரும் நேரமாகிவிட்டது. என்று பேசிக்கொண்டிருக்கும்போது மருத்துவர் உள்ளே நுழைந்தார். அவரைக் கண்டவுடன் மாணிக்கவல்லி ஆசனம் கொடுத்து உபசரித்தாள். பண்டிதர் அரசியின் நாடி முதலியவைகளை சோதித்து தன் ஆசனத்தில் வந்துட்கார்ந்தார். சற்றுநேரம பேசாமலே இருந்தார். அதற்குள் அஞ்சனாவதி "பண்டிதரே, கற்பகவல்லியின் தேகம் இப்போது எப்படியிருக்கிறது? எப்பொழுது குணப்படும் என்று எண்ணுகிறீர்கள் ?" என்று கேட்டாள்.

மருத்துவர் ஆலோசித்துக்கொண்டே மாணிக்கவல்லியைப் பார்த்து, "அரசி இரவு நன்றாய்த் தூங்கவில்லையா ?" என்று கேட்டார். மாணிக்கவல்லி இல்லையெனவே சலிப்போடு நாக்கைத் தட்டிக்கொண்டார். அஞ்சனாவதி தனது கேள்வியை இரண்டாமுறை கேட்கவும் "தேவி, அரசி அயர்ந்து நித்திரை கொள்ளும்வரையில் நல்ல குறியாகமாட்டாது. அது பரியந்தம் என்னால் திட்டமாய் கூற முடியாது . . . . இன்று வர்த்தமான பத்திரிகையைப் பார்த்தீர்களா ?"

அஞ்.—இல்லை. என் நோய் தொந்தரையிலும் கற்பகவல்லியை உபசரிப்பதிலுமே எனக்கு நேரம் சென்றுவிடுகின்றது அவைகளைப் பார்க்க எனக்கு அவகாசமிருப்பதில்லை ஏன்? என்ன விசேஷம்?

வைத்தியர்.—விசேஷமா? என்ன சொல்லுவது? மின்னலுக்குப்பின் இடிதான். அதில் காணப்படும் விஷயங்களை என்னால் சொல்ல முடியாது. நீங்களே வாசித்துப் பாருங்கள்.

அஞ்.—என்ன நீ சொல்லுவது ஆச்சரியமாயிருக்கிறது. மின்னலும் இடியுமா! அவைகளெல்லாம் எப்போது?

வைத்தியர்.—பேப்பரா? பத்திரிகை எங்கே?

அஞ்.—வாசக சாலையிலிருந்து யாரும் எடுக்கவில்லை என்று சொல்லிக்கொண்டே ஒரு மணி யடித்தாள். உடனே ஒரு வேலைக்காரி ஓடிவர "புஸ்தக சாலையில் புகுந்து வர்த்தமான பத்திரிகையை கொண்டுவா" என்று சொன்னாள். உடனே அவள் ஓடிப் பத்திரிகையைக் கொண்டுவந்து அஞ்சனவதியிடம் கொடுத்துப் போனாள். அவள் அதனைப் புரட்டிப் புரட்டிப் பார்த்து "என்ன நூதனம் ஒன்றுமில்லையே" என்றாள்.

வைத்தியர் அதனை வாங்கி 5-வது பக்கத்தைத் திருப்பிக் காட்டி "இதனைப் பாருங்கள்" என்றார். அதன் தலைப்பில் புயல்காற்று என்று எழுதியிருந்தது. அஞ்சனவதி அதனைப் பின் வருமாறு வாசித்தாள் :—

புயல்காற்று.

"நேற்று மாலைமுதல் காற்று பலமாயிருந்தது.

கடல் கொந்தளிப்பா யிருந்ததால் இந்தியாவிலிருந்து இலங்கைக்குப் பிரயாணம் செய்துகொண்டிருந்த கமடம் என்னும் கப்பல் சமுத்திரத்தில் மூழ்கிப் போனது. பிரயாணிகளுடையவும், பொருள்களுடையவும் சேதம் சரிவர இவ்வளவென்று தெரியவில்லை. அதிகமாக இருக்கவேண்டுமெனவே கருதவேண்டியிருக்கிறது. அருகிலிருந்த துறைமுகங்கள் அந்தக் கப்பலுக்கு உடனே உதவி செய்யாமல் போனது வருந்தக்கூடியதா யிருக்கிறது. தாமதமாக உதவி கிடைத்ததால் பொருள் ஒன்றும் காப்பாற்றப்படவில்லை. பிரயாணிகளில் சிலரே காப்பாற்றப்பட்டார்கள். இப்போது கடல் சற்று அமைதியாயிருக்கிறதாகத் தெரியவருகிறது.''

என்று வாசித்தவுடனே அனுசனுவதியின் முகம் வெளுத்தது. கரங்கள் விடவிடக்கப் பத்திரிகை பொத்தென்று தரையில் விழுந்தது. அவள் அப்படியே தன் ஆசனத்தில் சாய்ந்தாள். இவள் வாசிப்பதைக் கேட்டுக் கொண்டிருந்த மாணிக்கவல்லி ஐயோ! என்று கூச்சலிட்டாள். மாளிகையின் வேலைக்காரர்கள் அங்கு ஏதோ ஆபத்து என்று எண்ணியவர்களாக அங்கு வந்து திரளாகக் கூடினார்கள். வைத்தியர் மெதுவாயெழுந்து அறையை விட்டு வெளியே வந்தார். அவர் போவதைப் பார்த்திருந்த மாணிக்கவல்லி அவரைத் தொடர்ந்து வந்து ''பண்டிதரே, இன்று அரசிக்கேதேனும் புதிய மருந்து கொடுக்கவில்லையோ?'' என்று கேட்டாள்

வைத்தியர்.—இல்லை முன் கொடுத்த மருந்தையே இன்னமும் கொடுத்து வாருங்கள். ஆனால்

அரசி எப்போழுதும் படுக்கையிலிருப்பதைவிட சற்றெழுந்து நடமாடினால் உத்தமமாயிருக்கும். ஆதலால் இன்று மாலை அவர்களை அரண்மனையைச் சுற்றி உலாவ அழைத்துக் கொண்டுபோக பிரயாசைப் படுங்கள். அவர்கள் வியாதிக்கு மருந்துகளை விட அனுசரணையால் குணப்படுத்துவதே நன்மையாயிருக்கும் நான் கூறியதுபோல் செய்யுங்கள். நம்மாலானதைப் பார்ப்போம். பிறகு ஈசனிருக்கிறார்.

மாணி.—ஐயோ! பண்டிதரே, என்ன துக்ககரமான செய்தி! அரசி நல்ல ஸ்திதியில் இருப்பார்களானால் இந்தச்செய்தி அவர்களை என்ன செய்யத்தூண்டாது? நமது அரசரும் மரகதவல்லியின் புருஷரும் காப்பாற்றப்பட்டனரோ? என்னவோ தெரியவில்லையே

வைத்தியர்.—“என்ன செய்வது? நாம் வருந்துவதில் பயனில்லை எல்லாம் தெய்வச்செயல். நடக்க நடக்கத் தெரியும். அவர்கள் சுகமாய் மாளிகை வந்து சேரவேண்டுமென்பதே நமது கோரிக்கை. பிறகு ஈசன் அருள் எப்படியிருக்கிறதோ? அவர் சித்தம் நமக்குத் தெளிவாய்த் தோன்றுகிறதில்லை. அரசி அறையில் என்னவோ சந்தடி கேட்கிறது போய்ப் பாருங்கள். யான் மாலை 4-மணிக்கு வருகிறேன்” என்றுசொல்லி பண்டிதர் மாளிகையைவிட்டுச் சென்றார். மாணிக்கவல்லி அறைக்குள் நுழைந்தாள். கப்பல் மூழ்கிய செய்தி வேலைக்காரர்கள் ஒவ்வொருவருக்கும் தெரியவே பரிதாபத்துடன் பிரலாபிக்கலானார்கள். அப்போது படுக்கையில் புரளும் கற்பகவல்லி “ஆ! என்ன கனவு! கனவு! மாணிக்க

வல்லி" என்று கூவினான். மாணிக்கவல்லி அவளருகே சென்று அவள் முகத்தை உற்றுப் பார்த்தாள். முகம் வெளுத்திருந்தது.

கற்பகவல்லியின் தேகஸ்திதியையும் களவாடப்பட்ட மரகதவல்லியைத் தேடச்சென்ற மன்னர்களின் செய்தியையும் கண்டு கேட்டிருந்த யார் தான் வருந்தார்கள்? கருங்குயில் குன்றத்து அரச வம்சத்தை மண்டிவரும் துன்பத்திற்கு மேல் துன்பத்தைக் காண யாவரும் கலக்கமடைந்திருந்தார்கள்.

கற்பகவல்லிக்கு அருகேயிருந்த அஞ்சனாவதி ஆ! என்று பெருமூச்சு விட்டாள். மாணிக்கவல்லி அவளருகே செல்லும்போது "என்ன பரிதாபமான சம்பவம்! பட்ட காலிலே படும், கெட்ட குடியே கெடும் என்பது சரியாயிருக்கிறது" என்று பெருமூச்சுடன் சொன்னாள்.

மாணி.—ஆம் தேவி: என்ன செய்வது? கருங்குயில் குன்றத்தரச வம்சத்துக்கு அழிவு காலம் வந்துவிட்டதோ? என்னவோ தெரியவில்லையே நல்லவர்களை வருத்துவது என்ன அநீதம்!

அஞ்.—நீ கூறுவது உண்மைதான். மாணிக்கவல்லி, அவர்கள் குடும்பம் அறவே போய் விட்டது. கற்பகவல்லியும் புத்தி சுவாதீனத்துடன் இருப்பாளானால் இச்செய்தி கேட்டவுடன் உயிர்விட்டிருப்பாள். அவள் இந்த சமாசாரம் கேட்பதற்கு முன்னமே அறிவு இழந்தவளாகி விட்டது நன்மையாய்த் தான் முடிந்தது.

மாணி.—என்ன தேவி, அவர்கள் புத்தி ஸ்வா

தீனம் இழந்து போனது உங்களுக்கு நன்மையாகவா தோனறுகிறது ?

அஞ்.—இல்லை மாணிக்கவல்லி, அப்படி இருக்கவேண்டு மென்பது என் நோக்கமல்ல. ஆனல் அவள் அப்படியாகி யிருப்பதே அனுகூலமாயிருக்கிறது என்பது தான் என் எண்ணம். உயிரையிழப்பதை விட சிறிது காலம் அறிவை யிழந்திருப்பது மேலல்லவா.? அறிவு இழந்தால் குணப்பட வழியுண்டு. உயிரிழந்தால் ஏது குணம்?

மாணி.—அரசி கூடிய சீக்கிரம் குணபடுவார்களானல் சந்தோஷமா யிருக்கும்.

அஞ்.—அதுவே என் எண்ணமும். மாணிக்கவல்லி, எனக்கு நேரமாகி விட்டது. எனக்கு தலை நோய் வந்து விட்டது. என் அறைக்குப் போகிறேன். நீ அரசியைக கவனித்துக் கொண்டிரு என்று எழுந்தாள். அபபோது கற்பகவல்லி கனவு கனவு என்று கூவி திரும்பிப்படுத்தாள். மாணிக்கவல்லி கவலையோடு அவளருகில் சென்று அவளுக்கு உபசாரம் செய்யலானள். அஞ்சனவதி மனம் தாளாதவளாக கண்ணீர் வடித்துக் கொண்டே தன் அறையையடைந்தாள்.



# 13-வது அத்தியாயம்.

## கனவின் தோற்றம்

இருங்குயில் குன்றத்து மாளிகை அலங்கிருத தோற்றம் உடையதானாலும் இப்போது துக்க சாயலைக் கொண்டிருந்தது. புருஷன் இல்லாத பூவையும் அரசன் இல்லாத மாளிகையும் பாழா யிருப்பது ஆச்சர்யமாகுமோ? பகல் போஜன முடிந்த பிறகு மாணிக்கவல்லி அரசியின் அறையில் புகுந்தாள்.

அப்போது கற்பகவல்லி எழுந்து உட்கார்ந் திருந்தாள். அவள் பார்வை யாதொரு வஸ்துவை யும் நோக்க மனமில்லாதது போல ஒன்றையும் குறிப்பாய் பாராது அறையிலுள்ளவைகளை நிதான மாய்ப் பார்த்துக் கொண்டிருந்தது. அவள் அழ கிய கூந்தல் சேர்ந்து அவள் அங்கத்தை மூடிக் கொண்டிருந்தது. அவளுடைய மேல் தோற்றமே துன்பத்தினால மனதைப் பிளக்கக்கூடிய தன்மையை உடைத்தா யிருந்தது. கற்பகவல்லியை அந்த நிலை யில் கண்ட ஒவ்வொருவரும துன்ப நிலை காண வைத்தொரு சிலை இதுவே என்று சொல்ல ஆயா சப்படார்.

மாணிக்கவல்லி அறைக்குள் நுழைவதைப் பார்த்திருந்தும் அவள் அவளைக் காணாதவள் போலவே யிருந்தாள். அவள் அரசியின் அருகே சென்று "கற்பகவல்லி, எழுந்து என்னுடன் வரு கிறாயா? சற்று மாளிகையைச் சுற்றி வருவோம்"

என்று பணிவுடன் கேட்டாள். அரசி அவள் கூறியதைக் கேளாதவள் போல் அவளைப் பாராமலே மௌனமாயிருந்தாள் மாணிக்கவல்லி அரசியின் கரத்தை மெல்ல தன் கையால பிடித்துத் தூக்கி நிற்கவைத்து தன் கேள்வியை மறுபடியும் கேட்டாள். இயந்திரம் மின்சாரத்தில் நடததபபடுவது போல கற்பகவல்லி, மாணிக்கவல்லியின் துணையால் எழுந்து அவளுடன் நடக்கலானாள். அவளுடைய பார்வை சூனியத்தையே நோக்கிக கொண்டிருந்தது. மாணிக்கவல்லி அவளை ஒரு பிள்ளைபோல் நடத்திக்கொண்டு காற்று உலாவும் தோட்டங்களைக கடந்து கோவிலின் பக்கமாகச சென்றாள்.

கோவில் திறந்திருநதது. கற்பகவல்லி தன் கரத்தை மெல்ல தன் தோழியினின்று மீட்டுக கொண்டாள். அவள் பார்வை கோவிலின் உட்புறம் சென்றது. அரசியின் நோக்கத்தைக் கண்ட அவள் தோழி அவளைக் கோவிலுக்குள் அழைத்துப் போனாள். மரகதவல்லியின் விவாகத்துக்கு அலங்கரிக்கப்பட்டிருந்ததெல்லாம இன்னமும் எடுக்கப் படாமலே இருந்தது. இருவரும் கோவிலுக்குள் செல்லவே கற்பகவல்லி உபன்னியாச பீடத்து அண்டையில் சென்றாள். அவள் நோக்கம் அதன் உட்புறத்தில் பாய்ந்தது. அங்கு ஒன்று மிருந்த தில்லை அவள் சுத்த சூனியத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள். ஆனால் அவள் கண்களோ அங்கு எதையோ, காண்பதுபோலிருந்தது. அவள் நோக்கத்தைக் கண்ட அவள் தோழி வருத்தத் தோடு அரசியைப் பார்த்து, "தேவி, நாம்

போவோம் திராட்சை, மாதுளை முதலிய தோட்டங்களில் சென்றாலும் சற்று குளிர்ந்த காற்று வீச உங்களுக்கு ஆறுதலாயிருக்கும், இங்கு உங்களுக்கு என்ன இருக்கிறது? நாம் வெளியே போவோம்," என்று சொல்லி அவள் கரத்தைப் பற்றினாள். கற்பகவல்லி அவள் கரத்தைத் தடுத்த பெருமையோடும் கம்பீரத்தோடும் அவள் தோழியைப் பார்த்தாள். அந்தப் பார்வையானது கொல்ல வரும் கொடிய புலியையும் சாந்தப்படுத்தக் கூடியதாயிருந்தது. அவள் நோக்கமோ மகத்துவம் பொருந்திய மாமாத்தாண்டப் பிரபுவின் பத்தினிக்குடையது என்று எவராலும் சந்தேகிக்க முடியாததாயிருந்தது. இதனைக் கண்ட மாணிக்கவல்லி தன் அரசி குணமடைந்தாள் என்று எண்ணினாள். மறுகணமே அவள் பார்வை மங்கியது. கால் ஓய்ந்தவள்போல் நடக்கலானாள். அந்த நடை குழந்தையின் தளர் நடைக்குச் சமானமாயிருந்தது. அப்போது நடக்கக் கண்டவர்கள் பெருமையுடன் அன்னம்போல் நடக்கும் கற்பகவல்லி இவள்தான் என்று கூற ஒருவரும் துணியமாட்டார்கள். மாணிக்கவல்லி அரசியைப் பின்பற்றி நடக்கலானாள்.

கற்பகவல்லி மற்றப் பக்கமாகத் திரும்பி நடந்து சமாதியைக் குறுகினாள். அது பூர்வ காலத்திலிருந்து அரச வம்சத்தின் சமாதியாய் இருந்து வந்தது. அதன் பக்கமாய்ச் சென்ற அரசி ஓரிடத்தில் போய் திடுக்கிட்டு நின்றாள். அவள் கரங்கள் உதறின. சுற்றிலும் திரும்பித் திரும்பிப் பார்த்தாள். அரசியின் நோக்கத்தைக் கண்ட மாணிக்கவல்லி

கலக்கமுற்றாள். "இதுவென்ன ஆச்சரியம்; என்ன கனவு. ... .. என்ன கனவு! மாணிக்கவல்லி. இங்கு என் மகள் சயனித்திருந்தாளே! அது எங்கே?

மாணி.—தேவி, அவைகளைப் பற்றி யோசிக்க வேண்டாம் நாம் வேறு புறமாகச் செல்லுவோம். இந்த இடம் உங்களுக்கு ஆறுதலான இடமாகாது.

கற்ப.—இல்லை இங்குதானிருப்பேன். என் மகள் எங்கே? என் கனவில் அவளைப்பார்த்தேன். என்ன வனப்புடன் விளங்கினாள் எனக்கு அதிக அன்பு காட்டினாள் 16-வயதுடைய யுவதியாய் விளங்கினாள் அவள் எனக்கு உதவி புரிந்தாள். என்ன உதவி? என மனம் நாடிய உதவி என் புருஷன் மாசின்மையை வெளிப்படுத்தினாள். அவள் எனக்கு ஒரு தோழிபோல் வந்து வானதூதனை போல் உதவி செய்தாள். அவள் என்னை என் நாதரோடு கூட்டிவைத்தாள். என் மனதுக்கு ஆறுதல் அளித்தாள் .....எல்லாம் முடிந்தது! என்ன கனவு! எல்லாம் முடிந்தது! ஒரு நாடகம். ஒரு கற்பிதக் கதை முடிந்தது! சீ இவ்வளவு தானோ என் கனவு? பொய்யாய்ப் பழங் கதையாய் மெல்லப்போயினவே இவ்வளவு தானோ உலக வாழ்க்கை? என்று உரக்கக் கூவி மொழிந்து மருண்ட பார்வையுடன் சுற்றுமுற்றும் பார்த்தாள் அவளையே பார்த்திருந்த மாணிக்கவல்லியின் மனம் அனலிலிட்ட மெழுகுபோல உருகியது மகத்துவம் பொருந்திய கற்பகவல்லி இக்கதியிலிருப்பதைக்கண்டு யார் சகிப்பார்? அவள் தோழி அழுத கண்களைத் துடைத்துக்கொண்டு தன் ஆசிரியை நெருங்கி அவள் கரத்தைப் பிடித்

தாள். அப்போது கருங்குயில் குன்றத்தரசி கோபங் கொண்ட சிங்கம்போல அவளை வெருட்டிப் பார்த்து "சீ என்னை விடு. என் மகளை நீ துன்பப்படுத்தினாய். அவளை நீ ஒரு விரியன் பாம்புக்குட்டி என்று சொன்னாயல்லவா ?" என்று கூறி மறுபக்கம் திரும்பினாள்.

அவள் பார்வை முன் காலத்தில பிஞ்சகன் மாணிக்கக கற்களையும் வைரக் கற்களையும் மறைத்து வைத்திருந்த சிலையை நோக்கின மாணிக்கவல்லியின் முகம் வெளுத்தது. மனம சோர்ந்தது. தான அலமுவின் விஷயமாகக் கூறிய கொடு மொழிகள் ஒவ்வொன்றும அவள் மனதில் தோன்றத தலைப்பட்டன. ஐயோ ! நான அறியாது செய்த பிழைகளுக்கு மாறாக அவளுக்கு என்னால் செய்யககூடிய ஊழியம் யாவும் குறைவின்றியில் செய்து அவளை மேன்மைப்படுத்த எண்ணி யிருந்தேன் ! இப்போது என் எண்ணமெல்லாம விழலுக் கிறைத்த நீர்போலானதே ! ஐயோ அலமு ! நான உனக்குச செய்த துன்பங்களுக்கு உபகாரமாக உன தாய் தந்தையர்களை எனக்காக மன்றாடினையே ! அலமு, இபபோது எங்கே யிருக்கிறாய் ? நான் உனக்குச் செய்த தீமைகளை எண்ணி வருந்துகிறாயோ ? ஐயோ ? மாதவல்லி, கருங்குயில் குன்றத்தரசி, இப்போது நீ என்ன பாடுபடுகிறாயோ ? என்று தனக்குள் எண்ணி கண்களால் நீரை வடித்தாள். அப்போது கற்பகவல்லி கூவிப் பேசுவதைக் கண்டு அகளைக் கவனிக்கலானாள்.

கற்பகவல்லி மாணிக்கங்களை மறைத்திருந்த

சிலையைப் பார்த்துக்கொண் டிருந்தாளென்று முன்னமே கூறியபடியால் இப்போது அவள் அதனைப்பார்த்து சொல்லிய வார்த்தைகளை இங்கு குறிப்பிடுவோம். "ஆ மரகதம்! என் பிரிய குழந்தாய்! நீ எனனிடம் எவ்வளவு விஷயங்கள் கூறினாய். என் கனவில் உன்னோடு எவ்வளவு காலம் வார்த்தையாடிக் கொண்டிருந்தேனோ? ஆ என் செல்வமகளே, உனனை நான கண்டது உண்மையோ? கானுதது உண்மையோ? எது உண்மை என்று என்னால் உணரக்கூடவில்லையே. என் கனவில் நீ கூறிய யாவும் எனக்கு ஞாபகமிருக்கிறது. உன பெரியப்பனைக் கொன்றவன பிஞ்சகன் என்றும் அவன அவரிடத்தில் பறித்த மாணிக்கங்களையும இரத்தினங்களையும் இந்தச் சிலைக்குள் மறைத்து வைத்திருந்தான் என்றும் எனபித்தாயல்லவா? ஆ என்ன கனவு! நான் எவ்வளவு காலம் தூங்கியிருப்பேனா? ஐயோ மகளே! நான் அப்படியே இன்னும் தூங்கிக்கொண் டிருப்பேனானால் உன்னைக காணாதிருக்க மாட்டேனே. என அரிய செல்வமே! உன்னைக் காணாத என் கண்களும் கண்களாகுமோ? உன் பிரிய மொழிகளைக் கேளாத என் செவிகளும் செவிகளாமோ? என் அரும்பாவாய்! நீ என்னை மறந்தனையோ? அல்லது என் கண்ணுள் கரந்தனையோ? விண்ணுள் பறந்தனையோ? செல்வக் குழந்தாய்? இப்போது நீ எங்கே? நான் எங்கே?" என்று சொல்லி ஓடி சிலையைக் கீழே தள்ளினாள். முன் பிஞ்சகனுடைய பூஜித பொருள்களைக் காத்திருந்த சிலை இப்போது பூஜ்யத்தைக் காத்துக் கொண்டிருந்

தது! இதுவென்ன வெறுமையா யிருக்கிறதே! என்று சொல்லி அசைவற்று நின்றாள். பிறகு யோசித்து ஆம் அவைகளை இராஜாங்கத்தார் பார்வையிட்டு ஆதீனத்தில் சேர்த்து விட்டார்கள் என்று என் கணவர் எனக்குக் கூறியதாக ஞாபகம் இருக்கிறது. ஆ என்ன கனவு! ஒரு ஆச்சர்யமான கனவு என் மகளின் வல்லமையால் என் நாதர் அபவாதம் நீங்கி ஆசை அடைந்ததாகவும் கனவு கண்டேன். என்ன விநோதம்! என் பதி என்னை யடைந்தார். என் புருஷன், என் காதலன், என் பிரியன், என் பிரபு என்னை யடைந்தார். என்ன கனவு! ஆ! கனவு! கனவு!! என்று கடைசி வாக்கியங்களைக் கூறிய கூச்சலில் அருகில் நின்றிருந்த மாணிக்கவல்லி பயந்து போனாள். எதிரொலியும் கனவு—கனவு—கனவு— என்று சப்தித்தது.

அப்போது அஞ்சனாவதியும் வைத்தியரும் அங்கு வந்தார்கள். பணைத்தா அரசியைப் பார்ப்பதற்காக அவள் அறையில் சென்று பார்த்தார். அந்த அறை பூட்டப்பட்டிருந்தது. மறுபக்கமாக சென்று அஞ்சனாவதி அறையை நாடினார். அப்போது தான் தூங்கி விழித்தவளாகிய அஞ்சனாவதி எழுந்து வந்து வைத்தியரை உபசரித்தாள் அப்போது அரசியும் மாணிக்கவல்லியும் வெளியே சென்றிருக்கும் செய்தி கேட்டு இருவரும் தோட்டத்திற்கு வந்தார்கள். தோட்டத்தில் அவர்களைக் காணாததால் வேறு பக்கமாகத் திரும்பினார்கள். அப்போது கோவிலுள் கேட்கப்படும் கற்பகவல்லியின் குரல் ஒலியும் அதற்கு மாறொலியான எதிரொலி

யின் சப்தத்தையும் கேட்டு அவ்விடம் வந்தார்கள். கற்பகவல்லி இருக்கும் கோலத்தையும் அவள் அருகே நின்ற மாணிக்கவல்லியின் விகார தோற்றத்தை யும் கண்ட இருவரும் பயந்து போனார்கள். அஞ் சனாவதி பூசமலெனுக்க, "பயமாகவோ இதுவென்ன?" என்றாள்.

வைத்தியர் கற்பகவல்லியிடம் சென்று, "தேவி, நாம் இங்கு வந்த காரியம் முடிந்து விட்டது. வெளியே போகலாம்," என்று தெளிவாகவும் கண் டிப்பாகவும் கூறவே அரசி சாதுவாக்கப்பட்ட யானை போலப் பணிந்து நடக்கலானாள். நால்வரும் மாளி கையை நோக்கி நடக்கலானார்கள்.

## 14-வது அத்தியாயம்.

### காப்பாற்றப்பட்டான்

இராஜகிரி மன்னனும் அவன் தோழர்களும் ஏறியிருந்த படகு கடலில் மூழ்கியது என்று நாம் முன்னமே கூறியிருக்கிறோம். கநகவல்லியின் கணவன் என்னவானான் என்பதை இப்போது கவனிப்போம். வசந்தன் விஷயமாக நடந்த யாவும் சில வார்த்தைகளில் கூறக் கூடுமானாலும் வாசகர்கள் நடந்தவை நடந்தவாறு கூறக் கேட்க விரும்புவார்கள் ஆனதால் அவ்வாறே சொல்லத் துணிந்தேன்.

வங்காளக் குடாக்கடல் ஓரமாக வேழபுரம் என்னும் ஊருக்கு அருகே மீகாமியன்பட்டி என்று ஒரு நூறு குடிசைகள் அடங்கிய சிறு கிராமம் இருந்தது. அது கடற்கரை ஓரமாக இருந்து வந்தபடியால் அந்தப் பட்டியில் கடலில் வலை வீசி மீன் பிடித்து வேழபுரத்தில் விற்று ஜீவனம் செய்யும்படியான செம்படவர்களே குடியிருந்து வந்தார்கள்.

கமடம் என்னும் கப்பல் கடலுள் மூழ்கிய ஏழு நாழிகைக்கெல்லாம் கடல் அமைதியாகி விட்டது. மீகாமியன்பட்டிச் செம்படவர்கள் கட்டு மரங்களில் ஏறி வலைவீசப் புறப்பட்டார்கள். இந்த வலைஞர்களுக்குள் பல ஆசார வழக்கங்கள் இருந்து வந்தன. அவைகள் பெரும்பாலும் நியாய சம்பந்தமு உண்டு பண்ணப்பட்டவைகளே யொழிய வேறு

அவர்களுக்குள் இருந்த ஜாதிகட்டுப்பாடு மிகவும் பாராட்டத்தக்கது. அவர்கள் ஒத்து உழைப்பது போல நமது தேசத்தவர்கள் அனைவரும் கூட்டுற வாய் இருப்பார்களானால் எத்தனை பெரும் காரியத்தையும் எளிதில் சாதித்து விடலாம். பொதுவாய்க் கூறுமிடத்தில் அந்தச் செம்படவர்கள் நெருங்கிய பந்தத்துவமுடையவர்களாயிருந்தார்கள் கடலில் மீன் பிடிக்க தகப்பன் பிள்ளை, மைத்துனன் அல்லது மாமன் மருமகனுகவே செல்லுவது அவர்கள் வழக்கம். செம்படவர்கள் பலரும் தங்கள் வலைகளோடு தெப்பத்தில் ஏறி கடலை நோக்கச் சென்றுகொண டிருந்தார்கள். அவர்களுக்குள் குரளன், சேழியன் என்னும இருவா ஒரு தனித்தெப்பத்தில் சென்று கொண்டிருந்தார்கள். சேழியன என்பவன் விருத்தன். குரளன் அவன் மருமகன. இருவரும் அகண்ட சமுத்திரத்தில் ஒரு வழியாகச சென்றார் கள். மற்றுமுள்ளவர்களும் வெவ்வேறு திக்கில சென்றார்கள்.

குரளன் அதிர்ஷ்ட தேவதையை மனதிலெண்ணி காற்று வாட்டமாக ஒரு சேலையைக் கட்டினன். தெப்பம் காற்றுவாடையில் வேகமாகச சென்றது. இருவரும் வலைகளை வீசி மச்சங்களைப் பிடிக்க ஆரம்பித்தனர். அவர்கள் துரதிஷ்டம் நல்ல மீன்கள் அகப்படவில்லை. ஆனாலும அவாகள் அதைரியப்படவில்லை. வெகு தூரம் செல்லவும் துணிந்திருந்தார்ள். ஏனெனில் கடலில் மச்சங்களில்லாது போகவில்லை என்பதையும் அவைகள் முயற்சி செய்வோர்களுக்குக் கிடைக்கின்றன என்ப

தையும் அவர்கள் தெளிவாய் அறிந்திருந்தார்கள். தூரம் செல்லச் செல்ல சில சிறிய மீன்களே அகப் பட்டன.

சூளன் சற்று ஆத்தரமுடையவனாக இனி எவ் வழிச் செல்லலாம் என்று யோசித்து தெப்பத்தில் நின்று நாற்புறமும் சுற்றிப்பார்த்தான். கடல் நீரும், அதற்குள் இருக்கும் மச்சங்களும் அவனுடன் பேசும் என்று எண்ணியவன் போலக் கவனமாய்ப் பார்த்தான். சற்று நேரத்திற் கெல்லாம் திடுக்கிட் டவனாக மாமா, வென்று கூவினான். உடனே சேழி யன் சந்தேகப்பட்டவனாக என்னாவென்றான்.

சூளன் —மாமா, இரவு முன்நேரத்தில் வீசிய புயல் காற்றில் ஒரு கப்பல் முழுகி யிருக்கிறதாகத் தெரிகிறது. என்ன பரிதாபம்!

சேழியன்.—நீ எப்படி அதனை அறிந்தாய்?

சூ —அதோ சற்று தூரத்தில் கடல்நீர் எப் படி இருக்கிறதென்று பாரும் எண்ணெய் படர்ந் திருக்கிறது உங்களுக்குத் தெரியவில்லையா?

சே.—ஆம் பாவம். அங்கு போவோம். நமக்கு என்னமோ நல்லவேட்டைதான். கப்பல் முழுகிய விடத்தில் மச்சங்கள் ஏராளமாய்க் கிடைக்கும். அது வென்ன எண்ணெய்க் கப்பலா?

சூ.— எந்தக் கப்பலானாலும் நமக்கென்ன? அது நமக்குக் கிடைக்கப் போகிறதா?

சே.—“இல்லை. மணிலாக்கொட்டை கொண்டு போகும் கப்பலாயிருந்தால் நமக்கு ஏராளமான மீன்கள் அகப்படும், பாவம்! அதிலிருந்த ஜனங் கள் காப்பாற்றப்பட்டார்களோ என்னவோ” என்று

இருவரும் பேசிக்கொண்டே அங்கு சென்று தெப்பத்தை நாற்புறமும் திருப்பித்திருப்பி வலை வீசிக் கொண்டிருந்தார்கள். சேழியன் திடீரென்று வலை வீசுவதை நிறுத்தி அதுவென்ன! என்று ஆச்சர்யத்தோடு கூவினான்.

குளன் அவன் பார்க்கும் திசையை நோக்கினான். ஒருசிறு மரத்துண்டம் மிதப்பதுபோலிருந்தது. "அது மூழ்கிய கப்பலின் ஒரு துண்டாயிருக்கலாம்" என்றான் சேழியன். "இல்லை நெருங்கிப்பார்ப்போம்" என்று சொல்லி குளன் தனது கட்டுமரத்தை அந்த விடத்திற்குச் செலுத்தினான். சேழியன் குனிந்து அங்கு மிதப்பதைத் தன் வசமாக இழுக்கவே திடீரென்று "இதுவென்ன ஒருபிணம்" என்று கூவினான். குளன் உற்றுப் பார்த்து "நமக்கு அதிர்ஷ்டகாலம்" என்று கூறினான்.

சே.—இச்சவம் உயர்ந்த ஆடைகளை அணிந்திருக்கிறது. அதற்கேற்ப ஆபரணங்களும் அணிந்திருத்தல் வேண்டும்.

குள.—ஆம். ஆம். இது ஒரு புருஷன் உடல். இவன் சீமானாயிருந்திருக்க வேண்டும். பாவம்! இந்தப் பாழுங் கப்பலில் ஏறிவந்து மாய்ந்தான்.

சே.—அவன் காலம் இவ்வளவு தான் போலிருக்கிறது, பாவம்! கடலில் மூழ்கியபோது இந்த மரத்துண்டம் அவனுக்குக் கிடைத்திருக்கிறது. அதனைக் கெட்டியாகப் பிடித்திருக்கிறான். இந்தக் கட்டை மிதக்கவே அவனும் மிதந்து விட்டான். சுறாக்கள் அவனைப் பிடுங்கித் தின்னாமல் போனதும் ஆச்சர்யமே.

சூ.—மாமா, இவன் சிறியவனாகவும் அழகுள்ளவனாகவும் இருக்கிறான். இவன் சாகவே இப்பாழும் கடலில் ஏறி யிருக்கிறான்போ லிருக்கிறது.

சே.—“விதி யாரைவிட்டது? இவன் சும்மாவிருந்தபோதிலும் இவனைக் கொல்ல வந்த நமன் கப்பல் உருவாக வந்து இவனை ஏமாற்றிக் கொண்டு வந்து உடலை இங்கு போட்டுவிட்டது போலிருக்கிறது” என்று இருவரும் பேசிக்கொண்டே இராஜகிரிமன்னன் பிடித்திருந்த கட்டையை விலக்கி அவனைத் தங்கள் மிதப்பையில் வளர்த்தினார்கள். வரேந்திரன் உடல் சிலிர்த்திருந்தது என்று நாம் கூறவும் வேண்டுமோ? முகம் வெளுத்துப் பிணக் கோலம் பூண்டிருந்தது.

சே.—இந்தச் சவத்தைச் சுமப்பதில் நமக்கு என்ன நன்மை கிடைக்கப்போகிறது? இவன் அணிந்திருக்கும் ஆபரணங்களைக் கழற்றிக்கொண்டு இதனை இங்கேயே போட்டுவிட்டுப் போவோம்.

சூ.—என்ன மாமா, இவன் ஆபரணங்களைக் கொள்ளும் கூலிக்காகவாகிலும் இவனை நாம் தகனம் செய்யவேண்டியதில்லையா? இப்படிச் சமுத்திரத்தில் விட்டுப்போவது தருமமாகமாட்டாது.

சே.—“தருமமாவது அதர்மமாவது. அதர்மம் தான் இவ்வுலகத்தில் செல்லுகிறது, நமக்கு என்ன கவலை. தர்மமாக இவனைக் கரைசேர்ப்போமானால் இவனிடத்தி லெடுக்கும் ஆபரணங்களை யெல்லாம் இராஜாங்கத்தாரிடம் கொடுத்துவிட வேண்டும் மேலும் நாமும் சிலகாலம் கோர்ட்டில் அலையுமா யிருக்கவேண்டும்.” எனக்கு ஏன் இந்த வம்புகளெல்

லாம். நமது காரியத்தைப் பார்த்துப் போவோம்" என்றுசொல்லி கிழவன் அவசரமாக ஆபரணங்களைக் கழற்றினான். வரேந்திரன் மார்பில் போட்டிருந்த பொன் கடியாரத்தை எடுக்க அவன் மார்பில் கையை ஊன்றியவுடன் சேழியன் திடுக்கிட்டான். "சிறிது நெஞ்சம் துடித்துக் கொண்டிருக்கிறது. இவன் ஆயுள பலமானது. இன்னமும சாகவில்லை என்றான். உடனே குரளன் குனிந்து தொட்டுப பார்த்து, "ஆமாம். இவன் சாகவில்லை. என்ன செய்வது? சற்று சூடு பிறப்பித்தால் பிழைப்பான் என்று எண்ணுகிறேன்."

சே.—"ஆம். உடனே கரையை நாடுவோம். நமக்குப போதுமான மச்சங்களும் கிடைத்திருக்கின்றன. நம்போன்ற ஒரு மனிதனுடைய உயிர் யாவற்றினும் பிரதானமானதே" என்று சொல்லவும குரளன் கட்டுமரத்தைத்திருப்பி கரைபக்கமாக செலுத்தினான்.

படகு மீகாமியன்பட்டியை நோக்கிச் செல்லவே சேழியன் தன் மருமகனைப்பார்த்து, "என்னவென்றாலும் இவனுக்கு நாம் உதவிசெய்யக்கூடும் என்று எண்ணுகிறாய்? மேலும் இவன் செல்வவந்தனாய் விளங்குகிறான். நம்முடைய ஏழை முறைகள் இவனைக் குணப்படுத்தக் கூடுமோ? இவன் பிழைப்பது அரிதென்றே எண்ணுகிறேன்" என்றான். குரளன் பதில்கூறாமலே யோசித்துக்கொண்டிருந்தவன் திடீரென்று ஒரு எண்ணம் பிறக்க, "மாமா, ஒரு காரியம் செய்யலாம் என்று எண்ணுகிறேன். இப்போது வேழபுரத்தில் நாகேந்திரப் பிரபுவின் மனை

யில் இந்த மனிதனைக் கொண்டுபோனால் தக்கவித மாகக் கவனிக்கப்படுவான் என்பதில் சந்தேகமில்லை. அந்த மகாப்பிரபுவின் இல்லமே துன்பப்படுவோர் களுக்கு ஆதாரவான இடம்" என்றான்.

சே.—ஆம். நீ கூறுவது உண்மைதான். அந்தப் பிரபுவின் குடும்பமே தர்மசிந்தை யுடையது என்பதில் சந்தேகமில்லை. ஆனால் இப்போது அந்த வீட்டில் யார் இருக்கிறார்கள்? நாகேந்திரப் பிரபு இறந்து ஒரு வருடத்திற்கு மேலாகிவிட்டது.

குரளன்.—உண்மைதான். அந்தப் புண்யசீலன் இறந்துபோனது வருந்தத்தக்கதே. இரப்போர் களுக்கு இல்லையென்னாது கொடுக்கப்பட்டவர். இப் போதும் என்ன? அவர்கள் குடும்பம மேன்மையாக கவே யிருக்கிறது.

சே —ஆம். ஆனால் இப்போது அந்த மாளிகை க்கு எஜமானன் சுகுமாரப்பிரபு அல்லவோ? அந்த மனிதன் சற்று நெறிதவறி நடப்பவர் என்று கேள்வி.

கு.— அது என்னவோ தெரியவில்லை. ஆனால் நாகேந்திரப்பிரபுவின் மகளை அவர் தான் விவாகம் செய்துகொள்ளப் போவதாகச் சொல்லுகிறார்கள்:

சேழி.—அவர்கள் எப்படியாவது நடந்து கொள்ளுகிறார்கள். நீ கூறுவதுபோல் இந்த மனி தனை அந்த வீட்டிற்கே கொண்டுபோவோம்.

குரளன்.—"ஆம் மாமா, அந்த வீட்டிற்கே கொண்டுபோவோம். நாகேந்திரப்பிரபுவின் மகள் அம்பாலிகை மிகவும் நல்லவள் என்பது கேள்வி" என்று இருவரும் பேசிக்கொண்டே கரையடைந் தார்கள். குரளன் கட்டுமரத்தண்டையில் நிற்க

சேழியன் மச்சங்களையும் வலைகளையும் எடுத்துக் கொண்டுபோய் குடிசைக்குள் வைத்தான். குளளன் இராஜகிரி மன்னனைத் தூக்கி மணலில் கிடத்திக் கட்டு மரத்தைப்பிரித்து சீர்படுத்தினான். சிறிது நேரத்திற் கெல்லாம் கிழவனும் அங்கு வந்துசேர இருவரும் வரேந்திரனை சுமந்து கொண்டுபோய் மாட்டுவண்டி யில் கிடத்தினார்கள்.

அந்த மாட்டுவண்டியில்தான் சேழியன் மச்சங் களைச் சுமந்துகொண்டுபோய் வேழபுரத்தின் கடை வீதியில் விற்றுவருவான். இப்போது வரேந்திரனை வேழபுரம் கொண்டுபோகவேண்டியிருந்ததால் மச் சங்களை வீட்டில் நிறுத்திவிட்டான். முதலில் அவனை நாகேந்திரப்பிரபுவின் மாளிகையில் விட்டுவிட்டு பிறகு வந்து மச்சங்களைக் கொண்டுபோகலாம் என்று தனக்குள் தீர்மானித்துக் கொண்டிருந்தான்.

மாட்டுவண்டி இராஜகிரி மன்னனைச் சுமந்து போகிவாசத்தை நாடிச் சென்றது.



# 15-வது அத்தியாயம்.

## போகிவாசம்.

போகி வாசமென்பது வேப்பூரத்திலிருக்கும் ஒரு அழகிய மாளிகை. இந்த வாசத்திற்கு சொந்தக்காரரான நாகேந்திரப்பிரபு ஒரு வருடத்திற்கு முன் இறந்துபோனார். அவர் மனைவி அம்பாளிகை என்பவளோ என்றோ முன்னரும்நாளே, பரலோகம் சென்று விட்டாள். அவளுக்குப்பிறகு பிரபு மறு விவாகம் செய்துகொள்ளவேயில்லை. அவர் குணாதிசயங்களை பற்றி ஊரார் கூறுவதுபோல கூறுமிடத்தில் அம்மனி தனைச் சித்தன பித்தன் என்றே சொல்லவேண்டும். ஏனெனில் நாகேந்திரபிரபு தனது சொந்த காரியங்களையும் குடும்ப விவகாரங்களையும் கவனிப்பதே கிடையாது. சில வேளையில் காரியமில்லாமலே ஊர் ஊராய்த்திரிவார். சில வேளையில் வீட்டிலேயே தன் அறையில் உட்கார்ந்தபடி அன்ன ஆகாரமில்லாது அநேக நாட்கள் ஆலோசனையிலிருப்பார். பொது வாய்க் கூறுமிடத்தில் நாகேந்திரப்பிரபுவை ஒரு விநோதமனிதன என்றுதான் சொல்லவேண்டும். இறந்துபோனவரைப்பற்றி அதிகம் கூறுவானேன்? அவரைப்பற்றி யார் எவ்வாறு கூறினும் அம்மனிதன் பரோபகாரியாயும் ஜனங்கள்மட்டில் வாஞ்சையுள்ளவருமாகவே இருந்தார். அவரைப்பற்றி குறைகூறும் அவர் சுற்றத்தார்களும் அவரை உத்தமர் என்றே வாழ்த்தினார்கள்.

நாகேந்திரப்பிரபு தன் மனைவியை இழந்த பிறகு குடும்ப சம்ரக்ஷணைக்காக அவர் தமக்கை காளிந்தியைத் தன் வீட்டில் கொண்டுவந்து வைத்திருந்தார். காளிந்தி அம்மாள் இளம்பிராயத்திலேயே விதவையானவள். அவளுக்கு ஒரு மகனிருந்தான். அவன் பெயர்தான் சுகுமாரன். இன்னவனைப்பற்றி பின் வரும் விஷயங்களால் தெளிவாய் அறியலாம். இவன் இளம்பிராயமுதல் போகிவாசத்திலேயே வளர்ந்து வந்தவன். இவனும அம்பாளிகையும் சிறுவயது முதல் ஒன்றாய்ப பழகியவர்கள். அம்பாளிகைக்குச் சுகுமாரனிடத்தில் வெறுப்புகிடையாது. ஆனால் அவனை மணம செய்து கொள்ளுவதா? இல்லையா? என்னும் கேள்விக்கு அவளே இன்னமும் ஒரு தீர்மானத்திற்கு வரவில்லை என்றால் அதுபற்றி நம்மால் என்னக்கூறக்கிடக்கிறது?

நாகேந்திரபபிரபு உயிருடன் இருந்தகாலத்தில் தன் குடும்பத்தைக் கவனியாதவராய் இருந்துவந்தார் என்பது உண்மையானலும் அவர் மகள் அம்பாளிகை மட்டில் கொண்டிருந்த அன்பிற்கு அளவுகிடையாது. பிரபு இறக்கும் தருவாயில் அம்பாளிகையின் விவாக விஷயத்தைப்பற்றி அவரது அபிப்பிராயத்தைக் கூறுவாரென்று அவர் தமக்கை காளிந்தி எண்ணியிருந்த . ஆனல் அவர் அது விஷயமாக ஒருவருக்கும் ஒன்றுமே சொல்லவில்லை. தன் மகள் எப்படி இஷ்டப்படுகிறளோ அப்படியே நடந்துகொள்ளட்டும் என்பது அவர் தீர்மானமாயிருந்தது. அவர் மரண சாஸனத்தில் சகலமும் தன் மகள் இஷ்டப்படியே செய்யவேண்டுமென்று குறிப்பிட்டிருந்தார். தன் தமக்கை

காளிந்தியின் விஷயத்திலும் அவள் மகன் விஷயத்திலும் அன்னவஸ்திரத்திற்குப் போதுமானது எழுதி வைத்திருந்தார்.

சுகுமாரனுக்கு அம்பாலிகையை விவாகம்செய்து வைக்க வேண்டுமென்று காளிந்தி அம்மாள் தீராத கவலை கொண்டிருந்தாள் என்பதை நாம் சொல்லவும் வேண்டுமோ? போகி வாஸத்தில் உள்ளவர்களைப் பற்றி முக்கியமாய் முற்கூற வேண்டியவைகள் கூறி விட்டோம். இப்போது இராஜகிரி மன்னனைப்பற்றி கவனிப்போம்.

கடலிலிருந்து செம்படவர்களால் காப்பாற்றப் பட்ட வீரேந்திரன் போகிவாஸத்தின் ஒரு அறையில் பஞ்சணையின்பேரில் படுத்திருந்தான். அவன் படுத் திருந்தான் என்று கூறியது தவறு. அவன் கிடத் தப்பட்டிருந்தான் என்றே சொல்லவேண்டும். ஏனெனில் வீரேந்திரன் இன்னமும் கண் திறக்க வில்லை. வைத்தியரும் வந்திருந்தார். யௌவன ஜமீன்தாருக்குச் செய்யவேண்டிய உதவி யாவும் குறைவின்றி செய்யப்பட்டு வந்தது. அவருக்கு முறைப்படி மருந்தும் கொடுக்கப்பட்டுவந்தது.

இப்போது நாம் இராஜகிரி மன்னனைக் காணச் செல்லும் வேளை அவன் படுக்கையின் தலைமாட்டில் அம்பாலிகை நின்றுகொண்டிருந்தாள். அவள் சுமார் பதினைந்து வயதுடைய நங்கையென்று யாவராலும் புகழ்ந்துகூறக்கூடியவளாய் விளங்கினாள். முகத்தின் வனப்புகண்டு வியந்துகூறும் ஒருபுலவன் அவளைக் காண்பானானால் அவள் மெய், வாய், கண், மூக்கு முதலிய அவயவங்களைப்பற்றி ஒரு பெரிய பாசுரம்

போன்ற நூல் வரைந்திருப்பான் நாமோ அவள் அங்கத்தைப்புகழ்ந்து கூறக்கூடிய காலத்தில் அவள குணத்தைபபற்றிக் கூறுவோம.

அம்பாலிகையின் குணத்தைபபற்றி வாயால் கூறுவதைவிட அவள் செய்கைகளால் வாசகர்கள் உணரக்கூடுமானதால அதனையும கூறாது அவள் செய்கைகளைக் கவனிக்கத் தொடங்குவோம

குணத்திற் கேற்ப நடக்கையல்லது நடக்கைக்கு ஏற்ப குணம் இருக்கப்போகிறதில்லை நாம சென்று அவளைக் காணும்வேளை அமபாலிகை வரேந்திரனை அனுதாபத்துடன பார்த்துக்கொண்டிருந்தாள. அவளுக்கு எதிரே அதாவது இராஜகிரி மன்னனின கால் மாட்டில் ஒரு ஆசனத்தில் காளிந்தி அம்மாள வீற்றிருந்தாள். அவள் சுமார் 40-வயதுடையவள். அதிக அழகு உடையவளல்ல. ஆனாலும அவளைக் குரூபி என்றும் கூறலாகாது அவள் இராஜகிரி மன்னனைத தன் வீட்டில் வைததுக்கொள்ள விரும்பவில்லை. ஆனால் அம்பாலிகையின வற்புறுத்தலின் பேரிலும் நாகேந்திரப் பிரபுவின் கண்ணியத்திற்குத் தாழ்வு செய்யக்கூடாதவளுமாக இருந்ததாலும் வரேந்திரனைப் போலிவாசத்தில் இருத்திக்கொள்ள சம்மதித்திருந்தாள்

வரேந்திரனுக்குச் சிகிச்சை செய்யும வைத்தியர் ஏதோ மருந்து கொண்டுவருவதாக வெளியே சென்று இருந்தவர் நாம் காணும்வேளை அறைக்குள் நுழைந்தார். அம்பாலிகை அவரை ஆவலோடு நோக்கினள். பண்டிதர் பிணியாளன் விஷயத்தில் அவள் கொண்டிருக்கும் அனுதாபத்தை அறிந்தவ

ராகையால் அவள் பார்வையைக் கேள்வியாகக் கொண்டு "நம்மாலானதைப் பார்ப்போம். பிறகு ஈசனிருக்கிறார்" என்று சொல்லிக்கொண்டே ஒரு வித தைலம்கொண்டு வரேந்திரன் தேகத்தில் சூடு பாகக தேய்க்கலானார். உக்கிரமசிங்கனின் குளிர்ந்த குறையில் அடைபட்டிருந்ததிருலேயே வியாதி யடைந்த ஜமீன்தார் இப்போது கடலிலேயே முழுகி எழுந்தவராயிருகக எவ்வளவு சிகிச்சைக் குட்பட வேண்டியவராய் இருக்கக்கூடும் என்பதை வாசகர் களே உணரவேண்டும்.

வைத்தியரின் பலனற்ற முயற்சியையும் அம் பாலிகையின் கவலையையும் கண்ட காளிந்தி சலிப் படைந்தவளாக, "அம்பா, வைத்தியர் இங்கிருந்து ஆகவேண்டியதைப் பாாக்கட்டும், நாம் வெளியே போவோம்" என்று தன் மருமகளிடம் கூறினள். இதனைக் கேட்ட அம்பாலிகை பண்டிதரைப் பார்த் தாள்.

பண.—"ஆம். அம்மாள் சொல்லுவதுபோலவே நீங்கள் போகலாம். நான் ஆகவேண்டியதைக் கவனிக்கிறேன். இம்மனிதனுக்கு ஸமரணை வந்த வுடன் தெரிவிக்கிறேன். அப்போது வந்து பார்க்க லாம்" என்றார்.

இவ்வளவு சொல்லியதே போதுமென்று காளிந்தி எழுந்து வெளியேபோனுள். அம்பாலிகை அவளைப் பின்தொடர்ந்தா ளாயினும் அவள் மனம வரேந்திரன்மட்டிலேயே நிலைத்திருந்தது. அறையின் வாசற்படியைத் தாண்டும்போதும் திரும்பிப்பார்த் தாள். தன் அத்தைசெல்லும் அவசரத்தில் அவளைப்

பின்பற்ற முடியாதவள்போல மெல்ல நின்றாள். காளிந்தி திரும்பிப்பார்த்து, "அம்பா, ஏன் நிற்கிறாய்? நான் இன்று உன்னுடன் பல விஷயங்களைப் பேச எண்ணியிருந்தேன். காலையிலேயே அந்தச் செம்படவர்கள் வந்து நமக்கு இந்த பலமான சுமையை நமது கழுத்தில் கட்டிப்போய் விட்டார்கள். நான் அப்போதே அந்த வலைஞர்களை வெருட்டி விட்டிருப்பேன்.........

அம்பாலிகை.—ஆபத்திலுள்ளவர்களுக்கு உதவி செய்வதில் நமக்கு என்ன சுமையிருக்கிறது? அத்தை, துன்பப்படுவோர்களை ஆதரிப்பதிலேயே நமது குலம் மேலானது என்று யாவரும் புகழ்ந்து கூறுகிறார்கள் என்பதை மறந்துவிட்டீர்களா? இந்த ஏழை மனிதனை நமது வீட்டில் கொண்டுவந்ததற்காக அந்த வலைஞர்களுக்குச் சம்பாவனை கொடாமல் போனேனே என்று நான் வருந்துகிறேன்.

காளிந்தி.—நீ சொல்லியது தவறு. அம்பா, நாம் வருந்துவோர்களை ஆதரிக்க வேண்டுமென்பது, உண்மைதான். ஆனால் இந்த மனிதன் என்ன பிழைக்கப்போகிறானா?

அம்.—அது நமக்கு அவசியமில்லை. அவர் இறப்பதும் இருப்பதும பற்றி நாம் ஆலோசிக்க வேண்டியதில்லை. துன்பப்படுவோர்களுக்கு ஆறுதல் அளிப்பதுதான் நமது வேலை. அத்தை, நான் உங்களுடைய அபிப்பிராயத்துக்கு விரோதம் பேசுவதாக உங்களுக்கு ஏற்படுமானால் என்னை மன்னிக்க வேண்டும், நான் உங்களிஷ்டத்திற்கு விரோதமாகச்

செய்ய மனங்கொள்ளவில்லை. ஆனால் நியாயத்தைக் கூறினேன்.

காளி.—நான் நியாய அனியாயத்தைப்பற்றிப் பேசவில்லை. அம்பா, இந்த மனிதனின் எதிரி அச்சத்திற் குரியதா யிருக்கிறது என்று கூறினேனே அல்லது வேறல்ல. அது கிடக்கட்டும். அம்பா, நம்முடைய காரியத்தைப்பற்றிச் சற்று கவனிப்போம்.

அம்.—நம்முடைய காரியமா? அத்தை, எந்தக் காரியத்தைப்பற்றிக் கூறுகிறீர்கள்?

காளி.—இல்லை அம்பா, நான் என்னவோ எண்ணிக்கொண்டு என்னவோ கூறினேன் போகட்டும் நாம் இப்படி நின்று பேசுவது தகுதியாகாது. கூடத்தில் போய் உட்காருவோம். பிறகு எல்லாம் சாவதானமாய்ப் பேசலாம்.

அம்.—'அத்தை, உங்களுடைய பிரியம் எப்படியோ அப்படியே செய்யுங்கள்'' என்று சொல்லி பேசாமலிருந்துவிட்டாள். காளிந்தி யோசனையுடன் குறித்த விடத்தை நோக்கி நடக்கலானாள். அம்பாவிகை அவளைப் பின்பற்றி நடந்து தனக்குள் தானே யோசிக்கலானாள். என்ன எல்லாம் விநோதமாயிருக்கிறது. முதலில் நமது காரியம் என்று மிகவும் உருக்கமாய்க் கூறி பிறகு எல்லாம் சாவதானமாய்ப் பேசலாமென்றார்கள். நேற்றிரவு அத்தான் நம்மிடம் கேட்ட விஷயமே இப்போது இவர்கள் எண்ணினார்கள் போலிருக்கிறது. இருக்கட்டும் சகலமும்வாய்திறப்பின் அறிந்து கொள்ளலாம் என்று எண்ணிக்கொண்டே கூடத்தை யடைந்தாள்.

அது ஒரு விசாலமான இடம். விலையுயர்ந்த சாமான்கள் அங்கு அலங்கிருதமாய்ப் பரப்பப்பட்டிருந்தன. காளிந்தி சென்று ஒரு சோபாவில் அமர்ந்து நம் பாலிகையைக் கிருபையுடன் பார்த்து "அம்பா, என் அருகே இங்கு உட்காரு" என்று தன் ஆசனத்தின் மறுபக்கத்தைக் காட்டினாள். அவளும் அதிலுட்கார இருவரும் சிறிது நேரம் மௌனமாயிருந்தார்கள். பிறகு காளிந்தி கனைத்துக்கொண்டு மெல்லிய குரலாய் பக்ஷத்துடன் பேசத்தொடங்கினாள். "அம்பா, நான் கூறப்போகும் காரியம் இன்னதென்று நீ அறிவாயென்றே எண்ணுகிறேன்."

அம்.—இல்லை அத்தை, நீங்கள் கூறினால் நான் அறிந்து கொள்ளுவேன் என்று எண்ணுகிறேன்.

காளி.—என்ன நீ சொல்லுவது ஆச்சரியமாயிருக்கிறது. நேற்றிரவு என் மகன் உன்னிடத்தில் வெகு நேரம் பேசிக்கொண்டிருந்தானே. அவன் உனக்குக் கூறவில்லையா?

அம்.—என்ன கூறுவது? அவர் பேசிக்கொண்டிருந்தார் என்பது உண்மைதான். அவர் என்னை என்னவோ கேட்டார். நானும் ஏதேதோ பதில் சொன்னேன். அவைகளைப்பற்றி இப்போது ஞாபகமில்லை.

காளி.—அம்பா, இவ்வளவு அலட்சியமாய்ப் பேசுகிறாயே, சுகுமாரன் நேற்று உன்னிடத்தில் விவாக விஷயமாய்ப் பேசவில்லையா?

அம்.—விவாகமா? . . . ஆம் . . . ஆனால். . . .

காளி.—என்ன இவ்வளவு தாமதம்? நீ என்ன பதில் கூறினாய்.

அம்.—பதிலா? . . நான் அவருக்குப பதில் கூறினது ஞாபகமிருக்கிறது. ஆனால் அது பற்றி இப்போதென்ன? அவர் உங்களிடம் என்ன கூறினார்?

காளி.—அவன் கூறியதிருக்கட்டும். நீ என்ன கூறினாய்?

அம்.—நான் அந்த விஷயத்தைபபற்றி ஆலோசிக்கவில்லை என்றேன்.

காளி.—பிறகு?

அம.—அவருக்கு அவசரமானால் அவர் விவாகம் செய்துகொள்ளுவதை நான தடுக்கவில்லை யென்றும் சொன்னேன்.

காளி—அம்பா, உன் காரியததை நீ நன்றாய் உணரவில்லை நீ இன்னமும சிறுமியல்ல. உன் எதிர்கால ஜீவியத்தை நீ சற்று ஆலோசிக்கவேண்டும். உனக்கு வயது 15 ஆகிறது. நீ இன்னமும் விவாகம் செய்து கொள்ளாம விருப்பது பிறர் யோசனைக்கு இடமான காரியம. நீ உடனே ஓர் தீர்மானததுக்கு வரவேண்டும. நீ இது விஷயத்தில் சிறு பிள்ளைபோலிருக்கிறாய்

அம்.— ஆம அத்தை, நான் சிறுபிள்ளையாகவே இருக்கிறேன். அது பறறித்தான் அப்படிக் கூறினேன். சிறுபிள்ளையாகிய எனக்கு விவாகம் என்னும் பெரும் விஷயம் எப்படி விளங்கப் போகிறது.

காளி.—திருமணம் என்பது பெரிய விஷயமுமல்ல சிறிய விஷயமுமல்ல எல்லாம் அனுபவத்தில் உணரவேண்டிய காரியம். குழந்தை பிறக்கும் போதே இவ்வுலகத்தில் ஜீவிக்கும் முறையைக்கற்றுக்

கொண்டு வரவில்லை. சகலமும் நாளடைவில் ஏற்படுகிறது. மேலும் அம்பா, நீ ஒன்றும் அறியாதவளல்ல. என்னைவிட நீ சகலமும் அறிந்தவள் என்றே எண்ண வேண்டும். ஏனெனில் நான் உலகத்தில் அநுபவித்த விஷயங்களை மட்டிலும அறிந்திருக்கிறேன். உன்னைப்போல் கல்வி கற்றவளல்ல. உன் தகப்பனார் உன் கல்வி விஷயத்தில் கொண்டிருந்த பிரயாசைக்கு தக்க படிப்பு உன்னிடம் உள்ளதாகவே அவர் அடிக்கடி சொல்லிக்கொண்டிருந்தார்.

அம்.—அத்தை, அவைகளெல்லாம் இப்போது எதற்கு?

காளி.—இல்லை அவைகளைப்பற்றி நீ ஆராய வேண்டும். நான் உன் விஷயத்தில் கவனம் செலுத்த பாத்தியதை யுடையவள். உன்னை உன் தாய் விட்டுப் பிரிந்த காலமுதல் நானே உனக்கு அன்னைபோல் இருந்துவருகிறேன்.

அம்.—நானும் அதை அறியாதவளல்ல. ஆனால் அத்தை, . . .

காளி.—ஏன் வளர்த்திப் பேசவேண்டும். நீ என் மகனை விவாகம் செய்துகொள்ளும் விஷயத்தில் உனக்கு இஷ்டமென்ன?

அம்.—நான் முன்னமே கூறவில்லையா? அத்தை, நான் அதுபற்றி ஆலோசிக்கவில்லை.

காளி.—"பின் எப்போது ஆலோசிக்க இருக்கிறாய்? சீக்கிரத்தில் ஓர் முடிவுக்கு வரவேண்டும். வீண் காலதாமதம் செய்வதில் என்ன பிரயோசனம்?" என்று இருவரும் பேசிக்கொண்டிருக்கும்போது பண்டிதர் அங்கு வந்தார். அவர் முகத்தில் சந்தோஷ

குறி காணப்பட்டது. அவரைக்காணவும் அம்பாலிகை எழுந்து "அவர் எப்படி யிருக்கிறார்?" என்று ஆவலோடு கேட்டாள்.

பண்.—"இப்போது ஸமாதானம் வந்திருக்கிறது. தேகத்தில் சூடு எழும்பியிருக்கிறது நல்ல சகுனமாகும். இனி சுரம் வராதிருந்தால் சீக்கிரம் குணமாகும். இப்போது நீங்கள் வந்து பார்க்கலாம்" என்றார். உடனே அம்பாலிகை யாவருக்கு முன் பிணியாளன் அறையை நோக்கி நடக்கலானாள். காளிந்தியும் பண்டிதரும் அவள் பின்னே சென்றார்கள்.



# 16-வது அத்தியாயம்

## அம்பாலிகை.

மூவரும் இராஜகிரி மன்னன் அறைக்குள் நுழையும் போது அங்கு வைக்கப்பட்டிருந்த கடியாரம் ஒன்பது அடித்தது. அம்பாலிகையின் மனம் பெண் டுலத்தின் ஓசைபோல படபடவென்று அடித்துக் கொண்டிருந்தது. அவள் மனோவேதனைப் பட வேண்டிய காரணம் என்ன? வரேந்திரனுக்கும் அம் பாலிகைக்கும் என்ன சம்பந்தம் இருந்தது? இவர்க ளிருவரும் ஒருவரை யொருவர் சந்தித்தும் இருக்க மாட்டார்களே. அப்படிக்கிருந்தும் அவள் அவன் விஷயமாகக் கொண்டிருந்த பொருப்பின் காரணம் என்ன? சுபாவமாய் ஆண் பெண்களுக்குள்ள வசீகர சக்திதானோ? நாமறியோம்.

பண்டிதர் பிணியாளன் அருகில் சென்று அவன் மேற் போர்வையை விலக்கினார். வெளுத்த பிணம் போன்ற இவன் முகம் செவ்விதாய் விளங்கியது. அந்தஸ்திதியிலும் இராஜகிரி மன்னனுடைய வனப்பு குன்றவில்லை. அவன் கண்கள் மெல்ல திறந்து நாற் புறமும் நோக்கின.

வரேந்திரன் தன்னைச் சூழ்ந்துள்ளவர்களை நோக் கவே அவன் கரிய கண்கள் செவ்வரி படர்ந்த அம்பா லிகையின் பார்வையைக் காணவும் கலக்கமடைந்தன. அப்படி கலவரமடையவேண்டிய காரணம் என்ன வென்று நமது வாசகர்கள் ஆச்சர்யம் கொள்ளலாம்.

அவனுடைய பார்வை தான் இழந்த காதலி மாகத வல்லியின் நினைவை ஊட்டியதினாலோ அல்லது ஆண் பெண் என்னும் பிறவிக் குணத்தினாலோ நாம் அறியோம். பிறவிக்குணம் நாம் அறிந்திருக்கிறோம். பூசுரர்களும் வேசையர்களும் நாய்களும் ஒருவரையொருவர் பகைத்தலை நம்மில் எவரும் கண்டிருக்கலாம். இதற்குக் காரணமும் தேவையோ? அவர்கள் பிறவிக்குணமல்லது வேறல்ல. அது போலவே ஒரு ஆடவன் ஒரு பெண்ணைக்கண்ட மாத்திரத்தில் சித்தம் தடுமாறுகிறான். இதுவும் பிறவிக் குணமல்லாது வேறல்ல.

இராகிரி மன்னன் அம்பாலிகையைக் கண்டவுடன் கண்களை மூடிக்கொண்டான், அவன் விவாக முதல் பிறகு நடந்தேறிய காரியம் ஒவ்வொன்றும் எண்ணப் புகுந்தான். காதலியைப் பறிகொடுத்து அவளை மீட்கச்சென்ற வேளை கப்பல் மூழ்கிப் பரிதவித்ததும் பிறகு இங்கிருப்பதும் அவனுக்கு ஒரு கனவுபோலிருந்தது. தான் முன்னொரு காலத்தில் சிங்கள தோட்டக்காரனை அனந்தரன வீட்டில் வியாதியாயிருந்தபோது தன வியாதிக்கு அமுது அளிப்பவள்போல தனது பார்வையால் ஆரோக்கியமளித்த அலமுவின் ஞாபகம் அவனைவிட்டுப் போகவில்லை. பிறகு அந்தச் சிங்கள மாது இந்திய அரச வம்சமாகி தனக்கு மனைவியாகியதையும் எண்ணினான். இப்போது அவள் தன்னைவிட்டுப் பிரிந்துக்கொண்டு போகப்பட தனக்கு அருகில் நிற்கும் அம்பாலிகையின் பார்வை அவனுக்கு அவன் அழகிய அலமுவின் ஞாபகத்தை மூட்டியது. தன் காதலியின் ஞாபகத்

தை மூட்டும் கருவியான கன்னிகையை எண்ணவே மெல்ல கண்திறந்து இரண்டாமுறையாக அம்பாலிகையைப் பார்க்கலானான். அவள்போன்ற அழகுடையவள் இவள் என்பதில் சந்தேகமில்லை என்று தனக்குள் எண்ணினான்.

அது சமயத்தில் அம்பாலிகை அவனருகில் சென்று, "பிரபு, நீர் அஞ்சவேண்டாம். உம்முடைய வியாதியிலிருந்து சீக்கிரத்தில் குணப்படுவீர். இதோ வைத்தியரும் அப்படிதான் கூறினார். எங்கள் கோரிக்கையும் அவ்வாறே இருக்கிறது" என்று மணியோசைபோல இனிமையான குரலில் சொல்லினாள். இவள் பனிமொழியே வியாதிக்காரனை சொஸ்தப்படுத்தக் கூடியதாய் இருந்தது. அவள் அன்புள்ள பார்வை வஜ்ரேந்திரனுக்கு ஆறுதலளித்தது. நன்றிசெலுத்தும் குறியாக அன்பாய்ப்பார்த்து மெல்ல தலையை அசைத்துக்கொண்டான் எதோ பேச வாய்திறந்தான், ஆனால் சப்தம் புறப்படவில்லை. பிறகு மறுபடியும் தலையை அசைத்துக் கொண்டு கருணையோடு அவளைப் பார்த்திருந்தான். அவள் அழகு அவன் புண்பட்ட மனதிற்கு ஆறுதலளித்தது துன்பப்படும் தன் தேகத்திற்கும் ஆரோக்கியம் அளிக்கும் என்று எண்ணினான். அவள் செவ்வரிபடர்ந்த கண்கள் இமைக்காது அவனையே பார்த்துக்கொண்டிருந்தன. அதே சமயத்தில் ஒருக்களித்திருந்த அறையின் கதவு திறந்தது. சுகுமாரன் உள்ளே வந்தான்.

அவன் காளிந்தியின் புத்திரன் என்று முன்னமே கூறியிருக்கிறோம். குமார் 25 வயதுடைய

வாலிபன். சற்று உயர்ந்த மனிதன். தேக அமைப்பில் வல்லவனாகவே விளங்கினான். ஆனால் அதிக அழகுள்ளவனல்ல. இருந்தாலும் அங்கத்தில் குறைவுபடாதவன். அவன் நெற்றி சிறியதாகவும் இடையில் பள்ளமுடையதாகவும் இருந்தது. அவ்விதக் குறி அவனை மந்தன், மூடபுத்தியுடையவன், என்பதைத் தெளிவாய் விளக்கியது. சுகுமாரன் கொடியவனல்ல. ஆனால் துர்ப்பழக்க முள்ளவன்.

அவன் உள்ளே நுழையவும் காளிந்தி திரும்பிப் பார்த்த "ஆ! வந்துவிட்டாயா?" என்று ஆவலோடு கேட்டாள் அம்பாலிகை அவனை ஒரு முறைப் பார்த்து பிறகு பாராதவள்போல மறு பக்கமாய்த் திரும்பிக் கொண்டாள். சுகுமாரன் காளிந்தி அருகில்வந்து, "அம்பாலிகைக்குச் செலுத்தவேண்டிய பழைய பாக்கிக்காரர்களைக் கண்டு அவரவர்கள் செலுத்தவேண்டியதை அட்டியில்லாது செலுத்தும்படியாகத் தெரிவித்து வந்தேன். எல்லாம அம்பாலிகையின் நன்மையை உத்தேசித்து அப்படிச் செய்ய நேரிட்டது" என்று கூறி அவளை ஜாடையாகப் பார்த்தான். அம்பாலிகை இவன் கூறியதில் செவி சாய்க்கவேயில்லை. சுகுமாரனும் சுயபுத்தியுடன் மேற்கூறியவைகளைச் சொல்லியவனல்ல. அவன் கூறியதுபோல ஒருவித காரியமும் அவன் செய்து வரவில்லை. சகலமும் காளிந்தியின் கற்பனையேயல்லது வேறல்ல. தான் அம்பாலிகையுடன் பேசிக்கொண்டிருக்கும்போது அவ்விதமாக அவன் காதுகளுக்கு எட்டும்படி கூற அவள் அவனுக்குக் கற்பித்திருந்தாள்.

காளிந்தி தன் மருமகள் ஒன்றும் கவனியாத தைக்கண்டு அவளருகில் சென்று, "உன் அத்தான் உனக்காக செய்யும் காரியங்களைப் பார்த்தாயா ?" என்றாள். அம்பாலிகை அசட்டையாக "ஆம் ஆம்," என்று தலையசைத்துக்கொண்டாள். சுகுமாரன் பஞ்சணையில் படுத்திருக்கும் வரேந்திரனைப் பார்த்தான். இவன் யார் ? இவன் இங்கு கொண்டுவைப்பட்டதின் காரணமென்ன ? என்று தனக்குள் எண்ணியவனாக தன் அன்னையைப் பார்த்தான்.

காளி.—" இம்மனிதன் காட்டில் வீழ்ந்துகிடந்தவனும் சோமியன்பாடி செம்படவர்கள் இவனை இங்கு கொண்டுவந்து சேர்த்தார்கள். அம்பாலிகை தனது குலப்பெருமையைக் காப்பாற்ற அவனை ஆதரிக்க உடன்பட்டாள்" என்றாள். இதனைக்கேட்ட சுகுமாரன் காரியத்தை உணர்ந்து கொண்டான். இராஜகிரி மன்னனது அழகிய முகத்தை மறுமுறை பார்க்க அவனுக்குப் பிடிக்கவில்லை. அவன் மாசற்ற முகம் இவன் முகத்தை விகாரப்படுத்தியது. சுகுமாரனுக்கு வரேந்திரனைத் தன்வீட்டில் காணப் பிடிக்கவில்லை. ஓர்சேவலை மற்றொரு சேவல்காண மனங்கொள்ளுவதில்லை. அதுபோன்ற மனிதர்களும் உண்டு என்பதற்கு சுகுமாரனே சாக்ஷியாக விருந்தான். தனது தோற்றத்தை அம்பாலிகை எங்கே பார்த்துவிடப்போகிறாளோ என்று பயந்தவனாக சுகுமாரன் தன் தாய்க்குப்பின் மறைவாய் நின்றான். பெண்டிர்க்குப் பயப்படும் பேதையும் உள்ளான் என்பதை சுகுமாரன் விளக்கினான். அறிவில்லாதவர்களும், கோழைகளும், கபடசிந்தை யுடையவர்களும், தீயர்

கமரும் பிறருக்குப் பயப்படுவது இதுவே காரணம் போலும்.

காளிந்தி தன மகனுக்குச சிலவிஷயங்கள் கூற எண்ணியவளாக தன் வேலையை முடித்துக்கொண்டு அப்புறம் செல்ல யோசித்து, "பண்டிதரே, இனி இந்த மனிதனுக்கு என்ன செய்யலாம்? இவன் இப் போது உறங்குவானுனல் நலமாயிருக்கும் என்று எண்ணுகிறேன்" என்றாள்.

பண்.—ஆம் அம்மா, இம்மனிதனுக்கு உறக் கம் அவசியமானது. ஆனல் அல்லும் பகலும் இவ னுடனிருந்து வேண்டியதை செய்ய ஒரு தகுந்த பெயர்வழிவேண்டும். என் மருந்தில் யாதொரு குறைமுமில்லை. எல்லாம் அனுசரிப்பவர்களுடைய வும் ஆதரிப்பவர்களுடையவும் தயவினலேயே இம் மனிதன் பிழைக்க வேண்டும். கவனம் அவசிய மானது.

காளி—ஆமா கவனிக்காமலா? அதற்கென்ன எங்கள் ஆட்கள் . . .

அம்.—பண்டிதரே, அத்தை சொல்லுவது போல வேலையாட்கள் தகுதியானவர்களல்ல. அது விஷயத்தில் நானே கவனிப்பேன். எனக்குச் சிகிச்சை செய்யவேண்டிய முறைகளில் சில கூறுவீ ராஞல் போதுமானது என்றாள். இதனைக்கேட்ட பண்டிதர் அவள் அனுதாப குணத்தைக்கண்டு வியப் படைந்தார். காளிந்தியோ வெறுப்படைந்தவளாக மருமகளைப்பார்த்து, "அம்பா, வீணில் நீ சிரமப் படவேண்டியதில்லை, என் தம்பி......உன் தந்தை யின் வேலைக்காரன் சந்திரசலன் என்பவன் பொறுப்

பாய்ப் பார்த்துக்கொள்ளுவான்" என்றான்

அம்.—அத்தை, எனக்குச் சிரமம் ஏற்படாது. இவரைக் கவனிக்க எனக்கு உத்திரவு அளிக்கவேண்டும். வயோதிகனான தாஸன் இவரை உபசரிக்கப் போதுமான சக்தி யுடையவனல்ல. என் தந்தை நோயாய் இருக்கும்போதே அவன் தூங்கிவிடுவதைப் பல முறைகளில் பார்த்திருக்கிறேன்.

காளி.—என்ன அம்பா, இந்த அந்நிய மனிதனுக்காவா நீ தூங்காது கண்விழித்து உபசரிக்கப் போகிறாய்? என்ன விபரீதமான எண்ணம்? உன் தேகசவுக்கியத்தை நீ கவனிக்கவேண்டும்

அம்.—இல்லை அத்தை, நான் கஷ்டப்படப் போகிறதில்லை. மேலும் நீங்கள் கூறுவதுபோல அவர் அந்நியரா கையால்தான் நாம் அவரை உன்னிப்பாய்க் கவனிக்கவேண்டும.

காளி.—நீ சொல்லுவது சுத்த பிசகு. மேலும் நமது குலப் பெருமையைக் கவனிக்கவேண்டும். இவன் யார்? இவனுக்கு நாம் ........ ..அதாவது நீ பணிவிடை செய்வது சங்கைக் குறைவாகும் அம்பா, இவனை தாஸன் அனுசரணையில் விட்டுவிடு.

அம். அத்தை, இவர் யார் என்று நாம் அறியாமலிருக்கிறோ மென்பது உண்மைதான். ஆனால் இவர் இழிகுலத்தவர் என்று எவரும் கூறத்துணியார் என்பது என் துணிபு. மேலும் பிறப்பு ஒரு மனிதனுக்கு உயர்வு தாழ்வை ஏற்படுத்தமாட்டாது என் பிதா என் தீர்மானம். பொய், சூது, வஞ்சனை முதலிய குணங்கள் நிறைந்த நியவர்களே இழிகுலத் தவர்கள். அன்புடன் உலககாரியத்திற்குப் பகிர

உத்தேசியாது தன்னை அர்ப்பணம் செய்பவர்களே மேற்குலத்தவராவார்கள்.

காளி,—நமக்கு ஏன் வீண் விவகாரம்? அம்பா, என் சொல்லைக் கேள். தாஸனைக் கூப்பிடு அவன் இவனைக் கவனிப்பான். நீ கவனிப்பது நம்குலத்துக்குத் தகாது.

அம்.—இல்லை அத்தை, நானே இம்மனிதனைப் பாதுகாக்க சம்மதிக்கிறேன் நமது குலத்திற்கு தகாது என்றீர்களே அதன் காரணம் என்ன? நாம் செல்வமுடையவர்களாயிருப்பதால் நாம் உயர்ந்தவர்களாகி விடமாட்டோம் அத்தை, செல்வம் நம்மை மேன்மைப்படுத்த மாட்டாது. ஏழைகளுக்குக் கொடுத்து இரக்ஷிப்பதற்கே நம்மிடம் பணம் கொடுத்து வைக்கப்பட்டிருக்கிறது. தேவசன்னிதானத்தில் பிச்சைக்காரனும் பணக்காரனும் சமானமானவர்களே.

காளி.—அம்பா, இன்றுதான் என்னோடு நீ தர்க்கம்செய்யத் துணிந்ததைக் காண்கிறேன். நான் சொல்லிய யாவும் உன் நன்மைக்கே அல்லது வேறல்ல. நான் சொல்லவேண்டியதைச் சொன்னேன் பிறகு உன்னிஷ்டப்படி செய்யலாம்.

அம்.—அத்தை, என்னை மன்னிக்கவேண்டும். நான் உங்களுடைய மனதிற்கு விரோதமாக செய்யப் பிரியப்படவில்லை. ஆனால் உண்மையைக் கூறத் துணிந்தேன்.

காளி.—அப்படியானால் உன்னிஷ்டமென்ன

அம்.—நான் முன்னமே கூறினேனே.

உண்மையில் இம்மனிதனைக் கவனிக்க எனக்குப் பிரியமுண்டு.

காளி.—“அப்படியானால் உன்னிஷ்டத்திற்கு நான் தடைசெய்யவில்லை. ஆனால் உன் காரியத்தை நீ கவனிக்கவேண்டும்” என்று சொல்லி மறுபக்கமாகத் திரும்பினாள்.

இவர்களிருவரும் பேசிக்கொண்டிருந்ததைக் கேட்டுக்கொண்டிருந்த பண்டிதர் அம்பாலிகையின் பெருந்தன்மையையும் புத்தி சாதுர்யத்தையும் மெச்சியவராக காளிந்தி அம்மாளைப்பார்த்து, “அம்மா, உங்கள் மருமகள் கூறுவதுண்மையே அப்படி நீங்கள் அவளிஷ்டப்படி விடுவதுதான் உத்தமம்” என்று சொல்லி அம்மாலிகைக்கு வேண்டிய சிகிச்சை முறைகளைக் கூறி விடைபெற்றுக்கொண்டு வெளியே சென்றார்.

இவர்கள் பேசிய யாவும் கேட்டும் கேளாதவனை சுகுமாரன் தன் வழியில் ஏதோ எண்ணிக் கொண்டிருந்தான். காளிந்தி அவன் கரத்தைப் பிடித்து இழுத்துக் கொண்டே வைத்தியருடன் வெளியே போனாள்.

பேச நாவெழாத இராஜகிரி மன்னன் இவர்கள் பேசிய யாவும் கேட்டுக் கொண்டிருந்தான். கடைசியாகப் பெருமூச்சு விட்டு தன் அருகில் நிற்பவளை நோக்கினான். அம்பாலிகை அசைவற்று அவனருகில் நின்றிருந்தாள். அவள் செவ்வரி படர்ந்த கண்கள் அவன் பால் சென்றிருந்தன.

## 17-வது அத்தியாயம்.

### இவன் நமக்கு இகலனாக வந்தானோ ?

அறைக்கு வெளியே சென்றவுடன் சுகுமாரன் தன் அன்னையை நோக்கி, "அம்மா, இந்த மனிதனை நீ ஏன இங்கு சேர்த்துக்கொண்டாய்?" என்று ஊடும் பெண்போல கேட்டான்.

காளி.—குழந்தாய், நான் அப்படி செய்ய வில்லை. எல்லாம அமபாளிகையால் நேர்ந்ததே. என்ன இருந்தாலும் அவள்மனதுக்கு விரோதமாகச செய்ய நமக்கு என்ன நீதி இருக்கிறது ?

சுகுமாரன்—அவள் ஏன் அவனைக் காப்பாற்ற உடன்படவேண்டும் ? அவன எக்கேடு கெட்டாலும் நமக்கென்ன ?

காளி.—என்னவோ மனிதத்தன்மையாம். கிடக் கட்டும் சுகுமாரா, சகலமும் அவள் இஷ்டத்தின் படியே நடக்கவிடுவோம். இன்னமும் எத்தனை காலம் தான் இப்படி நடக்கபபோகிறாள் என்று பார்த்துக் கொள்ளுவோம் அவள் உன்னை மணந்துகொள்ளும் வரையிலும் நாம அவள் வழிக்கு இடையூறு செய் யக்கூடாது. நமது காரியம முடிந்துவிடுமானால் அவள் நமக்கு அடங்கி நடக்க முந்துவாள். எல் லாம் நாளடைவில்தான் ஏற்படவேண்டும்.

சுகு. நான் இரவு பேசிக்கொண்டிருந்த விஷய மாக உங்களிடம் கூறினேனே, அது விஷயமாக அவளைக் கேட்டீர்களா ? அவள் என்ன சொன்னாள்?

காளி.—சொல்லுவது என்ன ? எப்போதும்

போல அலட்சியமாகவே பதில் உரைத்தாள். என்னைக் கேட்பாயானால் மகனே, சகலமும் உன் குறை என்றுதான் சொல்வேன். அவளை மயக்கிப்பேச நீ இன்னமும் கற்றுக்கொள்ளவில்லை. ஒரு பெண் பிள்ளையுடன் பேசும்வகை உனக்குத் தெரியவில்லை. உன்னைப்போல மற்றொருவனுக்கு அவளுடன் இதமாய்ப் பேசும் சந்தர்ப்பம் கிடைக்குமானால் அவன் அவசியம் அவள் மனதைக் கவர்ந்திருப்பான்

சுகு.—அப்படித்தான் இன்ப நிலயத்தில் ஒரு மனிதன் கூறினான்.

காளி.—என்ன கூறினான்?

சுகு.—ஸ்திரீகளிடத்தில் அன்பைப் பெறுவது பழக்கத்தினாலல்லது வேறல்ல. ஒருவன் ஒருவளைக் காதலிப்பது கண்டபிறகானதால் ஒருவரையொருவர் சந்தித்தல் அவசியமாகிறது. ஆனால் அன்பு சிலரிடத்தில் தாமதமாகவும் சிலரிடத்தில் துரிதமாகவும் வேறு சிலரிடத்தில் கண்டமாத்திரத்திலும் உண்டாகிறது. இது எப்படியென்றால் ஒரு குறித்தவிடத்திற்குச் செல்லத்துணிந்தவர்களில் சிலர் கால்நடையாகவும் சிலர் குதிரைவண்டியிலும் சிலர் மோட்டார்வண்டியிலும் செல்லுவார்களானால் அவர்களில் முந்தியவர்கள் கடையாகவும் இடையவர்கள் இடையாகவும் கடையவர்கள் முதன்மையாகவும் செல்லுவதுபோலவே ஆகிறது. இதில் குறித்தவிடத்திற்கு மேற்குறித்த எல்லோருமேபோய்ச் சேருகிறார்கள் என்பது கவனிக்கத்தக்கது. அதுபோலவே மனிதர்கள் ஒவ்வொருவரும் காதலிக்கப்படுகிறார்கள் என்பது முடிவான காரியம். ஆனால் அதன்

காலம் வித்தியாசப்படுவது அவரவர்கள் தன்மையை பொருத்ததா யிருக்கிறது என்று கூறினான்.

காளி.—ஆம். அவன் புலவன். அவன் கூறியது யாவும் உண்மைதான். அவன் உலக அனுபவமறிந்த மேதாவியா யிருக்கவேண்டும்

சுகு.—நானும் அப்படியே எண்ணினேன். அவன் ஒரு சிறந்த நூலும் இயற்றியுள்ளானும். ஸ்திரீகளின் மனதைக் கவரும் இரகசியம் என்பது அதன் பெயர்.

காளி.—அதனை நீ வாங்கினாயோ?

சுகு.—ஆம்.

காளி.—நான் உன்னை இன்ப நிலயத்திற்குப் போகவேண்டா மென்று கூறினேனே. நீ ஏன் அங்கு சென்றாய்?

சுகு.—நானா?.. ...அங்கா? ..... அம்மா, அங்கு போகாவிட்டால் இந்தப் புத்தகம் எனக்குக் கிடைத்திருக்குமோ? அந்த மனிதன் சொல்லிய விஷயங்களைக் கேட்டதும் அவன் சொல்லின் உண்மையை பரீக்ஷிக்க முயன்றேன்.

காளி.—பரீக்ஷயா?.... ..அது எப்படி முடிந்தது? உன் புத்தியைக் காட்டிவிட்டாயோ?

சுகு.—அவசரப்படவேண்டாம். அம்மா, அந்த மகாத்மா கூறியதை மனதில் எண்ணி மேற்கு வீதியே போனேன். அங்கு ஒரு வேசி சிகை உலர்த்திக்கொண்டே உப்பரிக்கையில் உலாவினாள். அவளைக் கண்டவுடன் எனக்கு அந்த மகானுபாவர் கூறிய விஷயம் ஞாபகத்திற்குவந்தது. உடனே அவள் வீட்டின் புறத்தே நின்றேன். அவளும் என்னை நோக்கி.

வந்தாள். ஆடவனுகிய என்னைக் காணவும் அவள் ஆடையும் சற்று நெகிழ்ந்தது. இழுத்துப் போர்த்துக்கொண்டே என் முன்வந்து அன்புடன் வார்த்தையாடினுள். நான் அவளது இனிய வார்த்தையால் அவள்மனதைக் கவர்ந்தேன் என்று எண்ணி உல்லாசமாய்ப் பேசினேன்: அவள் நீர் இப்போது எங்கிருந்துவருகிறீர் என்று விசுவாசத்துடன் கேட்டாள். நான் இன்பநிலையத்திலிருந்து வருகிறேன் என்றேன். அந்நேரிழையாள் இன்பநிலையத்தை அறிந்தவள் போல அங்கு இன்று உமக்கு ஜயமோ என்றுள் நான் ஆச்சரியங்கொண்டவனுக இன்பநிலயம் சூதாடும் இடம் என்று நீ அறிவாயோ என்றேன், அதற்கு அவள் அதுபோகட்டும் இப்போது உம்மிடம்...என்று வாயை எடுக்கும்போது நான் இன்று தோற்றுப்போனேனை துரதிஷ்டம் என்னை விடவில்லை என்று வருத்தத்துடன் சொன்னேன். அவள் என் கவலையைப்பார்க்க மனம் சகியாதவள் போல முகத்தைத் திருப்பிக்கொண்டு எனக்கு முதுகு காட்டி நடந்தாள். நான் எளிதில் சம்பாதித்த அவள் அரிய நேசத்தை இழக்க மனமில்லாதவனுக அங்கு நின்று அவள் செல்லும் அழகைப் பார்த்துக் கொண்டே இருந்தேன். சற்று நேரத்திற்கெல்லாம் ஒரு கிழவிவந்து என்னை வெளியேபோகும்படி கேட்டுக்கொண்டாள். நான் அவளைச் சபித்துக்கொண்டே அரிய நங்கையைப் பிரிந்து வந்தேன் ........

காளி.—போதும், போதும். முட்டாள் பயலே உன் புத்தி எவ்வளவு நுட்பமாயிருக்கிறது? இதனை என்னிடம் கூறியதுபோல மற்றவர்களிடம் கூறப

போகிறாய். கேட்டவர்கள் நகைப்பார்கள்.

சுகு.—பிறரை நகைக்கச் செய்வது என்ன, சாமானிய காரியமா?

காளி.—போதும் உன புத்தியைக் காட்ட வேண்டாம். உன் மட்டி புத்திக்கு யாரை நோவது? உன்னையும் நான் ஒரு பிள்ளையாகப் பெற்றேன். அதுவும் என் பாபமே கிடக்கட்டும். உன் அறைக்கு போ. பிறகு நான் உன்னிடம் வந்து நீ இனி செய்யவேண்டிய பணிகளைக் கூறுகிறேன் என்று சொல்லி காளிந்தி தனது அறையை நோக்கிப் போனாள்.

தனியாக விடப்பட்ட சுகுமாரன் சலிப்படைந்தவனாக கொட்டாவி விட்டு இனி என்ன செய்யலாம் என்று எண்ணிக்கொண்டே ஒரு சுருட்டை எடுத்து பற்றவைத்தான். சற்று நேரத்திற்கெல்லாம் புதிய உணர்ச்சி உண்டானவன் போல நடைக் கீழே எழுந்துவிட்டு இராஜகிரி மன்னனும் அம்பாலிகையும் இருக்கும் அறையை நோக்கி நடந்தான். மனிதர்கள் சிலவேளையில் தங்கள் சாமர்த்தியத்தை எண்ணி தங்களையே புகழ்ந்துகொள்ளுகிறார்கள். தங்களை விட உலகத்தில் மேதாவிகளே கிடையாது என்று எண்ணுகிறார்கள். அவர்கள் அறிவு அவர்களுக்கு மேன்மையாக விளங்குவதால் மற்றவர்களை இகழ்கிறார்கள். இப்படிப்பட்ட மனிதர்கள் தான் அறிஞர்களென்று பாராட்டப்படுவார்களாயின் சுகுமாரனை அவர்களுக்குள் முதன்மையானவனாகக் கருத வேண்டும்.

சுகுமாரன் தான் அம்பாலிகையிடம் பேசப் போவதை எண்ணி தன்னுள்ளத்தில் மகிழ்ச்சி

யடைந்தவனாக அவளிருக்கும் அறைக்குள் நுழைந்தான்.

அம்பாலிகை இராஜகிரி மன்னனின் தலைமாட்டில் உட்கார்ந்து அவனைப்பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் முகம் கவலையுடையதாக விருந்தது. ஏனெனில் வைத்தியர் கூறியதுபோல அவள் எவ்வளவு பக்குவமாகக் கவனித்துவந்தபோதிலும வரேந்திரனுக்கு சுரம் வராது நிற்கவில்லை. இராஜகிரி மன்னனுக்கு அகோர சுரம்வந்துவிட்டது. அக்கினி சுவாலை வீசுவது போல அவன் தேகத்திலிருந்து வெப்பம் எழும்பி நாற்புறமும் வீசியது. வரேந்திரன் தேகம அனலில் இடப்பட்ட செப்புப்பாவை போலிருந்தது

அம்பாலிகை யௌவன இராஜகிரி ஜமீன்தாரை உருக்கத்தோடு கவனித்துக்கொண்டிருந்தாள் சுகுமாரன் அங்கு வந்ததைக் கவனிக்கவில்லை. அவன் அடிமேல் அடிவைத்து நடந்துவந்து அவள் அறியாத விதமாக அம்பாலிகையின பின்புறம் நின்று அவள் செய்கையைக் கவனிக்கலானான். அம்பாலிகை மாசற்ற மனதுடையவளாக இராஜகிரி மன்னன்மீது நோக்கமாய் இருந்தாள். இந்த நோக்கம் சுகுமாரனுக்குப் பிடிக்கவில்லை. பொறாமையோடு வரேந்திரனைப் பார்த்தான். இவன் நமக்கு * இகல

* இகலன் (Rival) போட்டிக்காரன் இந்த இலக்கியத்தின் பொருள் கொண்டே முதநூலாசிரியர் கருங்குயில் குன்றத்தரசைக் கவர்ந்து கற்பகவல்லியை இரண்டாவது விவாகம் செய்துகொள்ள இருந்தவனுக்கு இகலமார்த்தாண்டன் என்னும் நாமம் சூட்டினுர் போலும்.

ளாக வந்தானோ? என்று தனக்குள் ஆலோசித்துக் கொண்டிருந்தான்.

அப்போது சுகுமாரனுக்கு அடக்கக் கூடாத தும்மல்வர அலறி தும்மினன் அம்பாலிகை திடுக்கிட்டவளாகத் திரும்பிப்பார்த்தாள். உடனே சமாளித்துக்கொண்டு, "பிரபு, நீர் எப்போது வந்தீர்? உங்களைக் கவனியாமல் இருந்ததைப்பற்றி மன்னிக்க வேண்டுகிறேன்" என்றாள் இதனைக் கேட்டவுடன் சுகுமாரன் வெட்கமடைந்தான். அவன் செய்த தப்பிதத்தைச் சுட்டிக்காட்ட இப்படி கூறினாள் என்பதை உணர்ந்து கொண்டான். ஆனாலும் அவளுக்குச் சமாதானம் கூற எண்ணியவனாக, "அம்பா, என்னை மன்னிக்கவேண்டும். உனக்கு தொந்தரை கொடுக்கக்கூடாதென்று எண்ணி இப்படி செய்தேன். உன் நோயாளி இப்போது எப்படி இருக்கிறான் என்பதை பார்த்துப் போகவே இங்கு வந்தேன்' என்றான்.

அம்.—நோய் கவலைக்கு இடமானதாயிருக்கிறது. இனி சுரம் காணுமாகில் நல்ல சகுனமாயிராது என்று பண்டிதர் சொல்லியது இப்போது என் ஞாபகத்தில் வருகிறது. இவருக்காக நான் எடுத்துக் கொள்ளும் பிரயாசை பலனற்றதாய்ப் போய்விடுமோ என்று பயப்படுகிறேன்.

சுகு.—நாம் கலங்குவதில் காரியமில்லை. யாவும் விதிப்படி நடக்கும்.

அம்.—நீர் கூறுவது உண்மைதான். ஆனால் நம்முடைய முயற்சி அவசியமானது. சகலமும் ஈசனருள்படி நடக்கிறது. [illegible]ம் நாம் அதை விஷயத்

தில் பிரயாசைப்படாது இருப்பது முறையாக மாட்டாது. முடியாத காரியமும் நம்முடைய முயற்சியால் கைகூடும். பிரபு, இந்தமனிதன் பிழைப்பது நம்முடைய கவனத்தில் தானிருக்கிறது.

சுகு.—என்ன அம்மா, நீ சொல்வது விநோதமாயிருக்கிறது. இவன் சாகவேண்டியவனாயிருந்தால் உன் முயற்சி என்ன பலனைக் கொடுக்கப் போகிறது?

அம்.—பலனா? . . . . . என் வேலைக்குக் கூலியாக இவர் பிழைத்தால் போதுமானது என்று தெளிவாகவும் அழுத்தமாகவும் கூறியதைக் கேட்கவே சுகுமாரன் பதில் சொல்லவில்லை. ஒரு அனாதியாமனிதனுக்கு இவ்வளவு அனுதாபமும் இரக்கமும் கவனமும் எதற்கு? இவள் மனம் அவன்பால் சென்றுவிட்டதா என்ன? என்று மனக்குள் யோசித்தவனாக அம்பாலிகையையும் இராஜகிரியனையும் மாறி மாறிப் பார்த்தான்.

அப்போது வயோதிகன் திரும்பிப்படுக்க எத்தனித்தான். அம்பாலிகை அவன் எண்ணத்தைக் கண்டவுடன் அவனுக்குத் திரும்பிப்படுக்க உதவி செய்தாள். இதனைப் பார்த்து நின்ற சுகுமாரனுக்கு பொறாமையேற்பட்டது. அந்த சமயத்தில் சக்திதாஸன் வந்து இருவரையும் போஜனத்துக்கு அழைத்தான். உடனே அம்பாலிகை எழுந்து நோயாளியின் போர்வையை சரிவரப்போர்த்தி வெளியேபோக எத்தனித்தாள். சுகுமாரன் அவள் பின்னே நடந்தபோதிலும் அவன் பொறாமையுள்ள கண்கள் நோயாளியைத் திரும்பிப் பார்த்தன.

இருவரும் வெளியே சென்றவுடன் அமபாலிகை அறையைப் பூட்டிச் சாவியைத் தன் கையில் எடுத்துக்கொண்டாள். இவள் எச்சரிக்கையைக்கண்ட சுகுமாரனுக்கு ஆத்திரம் பொங்கியது. இருவரும் தாஸனுடன் போஜன சாலைக்குள் நுழைந்தார்கள்.



## 18-வது அத்தியாயம்.

---

### இன்ப நிலையம்.

போகி வாசத்தின் போஜனசாலை மிகவும் விசித்திர சாமான்களால் நிறையப்பெற்றது. அழகிய படங்களும் உன்னத ஆஸனங்களும் பளிங்கு சாமான்களும் அங்கு நிறைந்திருந்தன. போகிவாசத்தில் மிகச் சிறப்புடைய பகுதி அந்த போஜனசாலையே என்று காண்போர் உணரலாம். போகி என்னும் பெயர் இந்திரனுக்கும் பாம்பிற்கும் உரியது. நாகேந்திரப் பிரபுவின் பாட்டனார் இந்தப் போகிவாசத்தைக் கட்டியபோது இந்திரபுரிக்குச் சமானமாய் இருக்கவேண்டுமென்று எண்ணி உன்னதமாய் அலங்கரித்து அதற்குப் போகிவாசம் என்னும் நாமம் சூட்டினார். பிறகு அம்பாலிகையின் தகப்பனார் காலத்தில் அது ஒரு பாம்பின் வாசத்திற்கு சமானமாயிருந்தது. நாகேந்திரப்பிரபு ஒதுக்கிடத்தில் வாழ்பவர்போல பற்றற்றவராய் வாழ்ந்துவந்த போதிலும் மூதாதைகளின் அலங்காரப் பொருள்களை எடுத்துவிடவில்லை. ஆனால் அடிக்கடி தன் மகள் அம்பாலிகைக்கு அந்தப் பொருள்களைக்காட்டி, "மகளே, இந்த விலையுயர்ந்த சிங்காரச் சாமான்கள் வாங்கிய பணத்தில் ஆயிரத்தில் ஒரு பாகம் இருக்குமானால் அந்தப் பணம் ஒரு ஏழைக் குடும்பம் தன் ஆயுள்பரியந்தம் ஜீவிப்பதற்கு போதுமானதாய் இருக்கும்" என்று கூறுவார்.

நாகேந்திரப் பிரபுவின் சொல்லைக்கேட்டு வளர்ந்துவந்த அவர் மகள் டம்பத்தையும் வீண் சிலாக்கியத்தையும் வெறுத்துவந்தாள். அம்பாலிகை இயற்கையிலேயே தர்மகுணம் உடையவள். தான் எந்த பொருளை விரும்புவாளோ அந்த பொருளைப் பிறருக்குவாங்கிகொடுத்து பிறகு தான் வாங்கிக்கொள்ளு வாள். பிறர் வருந்த சகியாள். பிறருக்குத் தான் வருந்துவதைக் கருதமாட்டாள்.

அம்பாலிகையும் காளிந்தியும் அவள் மகனும் புசிப்பதற்கு அங்கு போடப்பட்டிருந்த ஆசனத்தில் உட்கார்ந்தார்கள். வேலைக்காரர்கள் உணவு பரிமாறிக் கொண்டிருந்தார்கள். புசித்துக்கொண்டிருக்கும் போதே சுகுமாரன் பல தடவைகளில் பேச வாயெடுத்தான். ஆனால் தன் தாய் என்ன சொல்லுவாளோ என்று பயந்தவனாக சும்மாயிருந்து விட்டான். அம்பாலிகை யாதொன்றும் பேசவில்லை. வானம்பாடி ஆகாயத்தில் பறந்து கொண்டிருந்தபோதிலும் அதன் சிந்தையெல்லாம் கூண்டிலிருக்கும் தன் குஞ்சுகளின் பேரிலிருப்பது போல அவள் எண்ணமெல்லாம் அறையில் நோயாயிருக்கும் வரேந்திரன் பேரில் இருந்தது.

அப்போது காளிந்தி மெல்ல வாய்திறந்து "அம்பா, என்ன யோசிக்கிறாய்? ஏதோ ஆழ்ந்த சிந்தையிலிருப்பவள் போலிருக்கிறாயே" என்றாள். இதைக்கேட்ட அம்பாலிகை திடுக்கிட்டாள். பிறகு சமாளித்துக்கொண்டு "ஒன்றுமில்லை அத்தை" என்றாள்.

காளி.—என்ன [illegible] மில்லையா? ஆழ்ந்த

யோசனை செய்து கொண்டிருந்தாயே. உன் ஜீவிய காலத்தைப் போக்கும் விதம் இன்னதென்று உனக்குள் ஓர் ஒழுங்கு செய்கிறாய் என்றல்லவோ எண்ணியிருந்தேன்.

அம்.—என் ஜீவியத்தைப் போக்கும் விதமா? அது என்னவிதம் அத்தை? அது எனக்கு விளங்கவில்லை. உலகத்தில் எல்லோரும் எப்படி உயிர் விடுகிறார்களோ அது போலவேதான் நானும் மரிப்பேன். இதில் என்ன விசேஷம் இருக்கிறது. பணக்காரர்களுக்கு வாழ்நாள் குறைவு படுவது சகஜமானதே நான் இளமையிலேயே உயிர் துறப்பேன் என்றுதான் எண்ணுகிறேன்.

காளி.--அம்பா, நீ ஏன் இப்படி பேசுகிறாய்? நான் கேட்டது வேறு, நீ கூறுவது விபரீதமாயிருக்கிறது. உன் நன்மையைக் குறித்து கேட்டேனேயல்லது வேறல்ல நீ ஒருவனோடு கூடி வாழும் விதம் இன்னதென்றும் அவன் இத்தன்மை யுடையவனாய் இருக்க வேண்டும் என்பதையும் ஆலோசித்தாயோ என்று தான் கேட்டேன். சகலமும் உன் நன்மைக்கே யல்லது வேறல்ல, அம்பா, நீ இன்னமும் சிறுமியல்ல. பெருமையுள்ள நமது குலம் ஓங்குவதற்கு நீ ஒருவளே இருக்கிறாய் என்பதை உணர வேண்டும். என் தம்பி நாகேந்திரன் உன்னையல்லது வேறு பிள்ளைகளை விட்டுப் போகவில்லை. உன் தகப்பன் மேன்மைவிளங்க நீ ஒரு பெண்தானிருக்கிறாய். மேலும் உன் தந்தை இப்போதிருந்தால் உன்னை இப்படித் தனியாய் வைத்திருக்க மாட்டார் என்று காளிந்தி மூச்சுவிடாது பேசிக்கொண்டேயிருந்தாள்.

அம்பாலிகை பதில் பேசாமல் தனக்கு வட்டிக்கப் பட்ட உண்டியைப் புசித்து எழுந்தாள். அவளுக்கு பின் தாயும் மகனும் எழுந்தார்கள். அம்பாலிகை நேரே வரேந்திரன் அறையை நோக்கிப்போனாள். சுகுமாரனுக்கு அவள்போகும் நோக்கத்தைக் காண முகம் சிவந்தது. அவளைப் பின்பற்றிச் செல்லலாமா வென்று எண்ணினான் தனக்குப் பின்வரும் தாயைப் பார்த்தான். அவள் தன் அறைக்குச் செல்லுவதைக் கண்டு அவரவர்களும் தங்கள் தங்கள் வேலையை நாடிச் செல்லுகிறார்கள். நானும் என் • வேலையை நாடிப்போக வேண்டியது தான் என்று தீர்மானித் துக்கொண்டு தன் அறைக்குப் போனான்

அங்கு கொடியில் மாட்டியிருந்த ஆடைகளை எடுத்து உடுத்திக்கொண்டு வெளியே போக யத்த னிக்கையில் தன் சட்டைப்பைகளைச் சோதித் தான், அதில் ஒரு சல்லி முதலாய் இல்லாததுகண்டு அதிருப்தியடைந்தவனாக தன் அலமாறியைத் திறந்து பார்த்தான். அதில் பணம் வைக்குமிடம் வெறு மையாயிருந்தது. ஒன்றுமில்லை. என்ன செய்ய லாம்? என்று தனக்குள் யோசித்துக் கொண்டே அங்கு போடப்பட்டிருந்த நாற்காலியில் உட்கார்ந் தான். ஒரு தடித்த சுருட்டை எடுத்து வாயில் வைத்து பற்றவைத்துக் கொண்டு சற்று நேரம் மௌனமாயிருந்தான். பிறகு மெல்ல எழுந்து தன் அறையைச் சாத்திக்கொண்டு வெளியே புறப்பட் டான்,

இரண்டு மூன்று வீதிகளைக் கடந்து ஒரு விசால மான தெருவில் போகவே அங்கு ஒரு பெரிய மாடி

வீடு காணப்பட்டது. அந்த வீட்டின் மத்தியில் ஒரு பலகை மாட்டியிருந்தது. அதில்,

இன்ப நிலையம்.

என்று பெரிய எழுத்துகளில் வரைந்திருந்தது. அந்த வீட்டைக் கண்டவுடன் சுகுமாரன் புன்சிரிப்போடு உள்ளே நுழைந்தான். முன்கட்டில் ஒரு தடித்த மனிதன் திண்டில் சாய்ந்த வண்ணமாயிருந்தான். அவனுக்கருகே ஒருவன் பெரிய விசிறிகொண்டு அவனுக்கு விசிறிக் கொண்டிருந்தான். சுகுமாரன் அங்கு செல்லவே அந்த பெரிய மனிதன் சிரித்துக்கொண்டு, "க்ஷேமந்தானே" என்றான்.

சுகு.—கணபதி ஐயா பிள்ளை இருக்குமளவும் குறைவு என்ன இருக்கிறது? என்று சொல்லிக் கொண்டே அவன் அருகில் உட்கார்ந்தான்.

கணபதி ஐயா பிள்ளை.—என்ன ஐயா கேலிசெய்கிறீர்களா? உங்களுடைய தயவு இருந்தால் போதாதா? ஏழை நான் தங்களுக்கு என்ன செய்யக்கூடும்?

சுகு.—நல்லது பிள்ளையவாள்? நமக்குள் வீண் உபசாரங்கள் தேவையில்லை. நாமென்ன புதிய நண்பர்களா?

கணபதி.—பிரபு, ஏழையாகிய என்னைத் தங்களோடு கூட்டிச் சொல்லுவது ஆச்சரியமானதே. ஆயினும் நட்பு உயர்வு தாழ்வு கருதாதல்லவோ? அஃதிருக்கட்டும். பிரபு இங்கு வந்ததின் நோக்கம் வெறும் காலப் போக்கிற்காகவே இருக்கவேண்டும் என்று எண்ணுகிறேன்.

சுகு.—ஆம். . . . ஆனாலும், . . .

கண.—ஆனாலும் என்ன? உள்ளே போகிறது தானே. தங்களைப்போன்ற பிரபுக்கள் உங்களுடைய வருகையை அதிவினயத்துடன் எதிர் பார்த்திருக்கிறார்கள் என்பதைத் தாங்கள் அறியாத தல்லவே.

சுகு,—ஆம் பிள்ளையவாள். அதனை நான் அறியாதவனல்ல. ஆனால் இன்று பணம் கொண்டுவர மறந்து போனேன் என்றவுடன் கணபதி ஐயா பிள்ளை சிரித்துக்கொண்டு "மறந்துபோனீரா? ஏன் வெள்ளையாய்ச் சொல்லுமே?" என்றார்.

சுகு.—எல்லாம் பிள்ளையவாள் அறியாததல்ல. சொற்ப தொகை வேண்டும் என்று தான் கேட்கிறேன். என் காரியம் முடிந்துவிட்டால் சகலமும் ஒரு வழிக்கு வந்துவிடும். உங்களுக்குச் சேரவேண்டிய யாவும் குறைவின்றி சேர்ந்துவிடும்.

கண.—பிரபு கோபிக்கலாகாது. முன்னமே பழைய பாக்கிகள் . . . தங்களுக்கு சொற்பமானாலும் ஏழை எனக்குப் பெரும் தொகையே . . . மேலும் பல வருடங்களாகத் தங்கள் கணக்கு பெருகிக்கொண்டே வருகிறது. நாளது தேதி வரையில் ரூபா எழுபத்து ஆறாயிரமும் (76,000) சொச்சமும் கொடுக்கவேண்டி யிருக்கிறது.

சுகு.—ஆ! எழுபத்து ஆறாயிரமா?

கண.—ஆம். வட்டி யுடன் அப்படித்தான் இருக்குமென்று எண்ணுகிறேன். கணக்கு புஸ்தகங்களைப் பார்த்தால் திட்டமாய்த் தெரியும்.

சுகு.—அது கிடக்கட்டும். அது ஒரு பெருந் தொகை யல்ல. [redacted] அகவேண்டியதைப்

பார்ப்போம் நான் என் மாமன் மகள் அம்பாளி கையை விவாகம் செய்துகொண்ட வுடன் இந்தக் கடன்களை யெல்லாம் தீர்த்துவிடுகிறேன்.

கண.—நான் அந்த விவாகத்தை உத்தேசித்து தான் உங்களுக்கு இவ்வளவும் கொடுக்கச் சம்மதித் தேன். ஆனால் . . . . . காலம் செல்லுவதைப் பார்த்தால் . . . . . . . . .

சுகு.—காலம் சென்றால் என்ன? அவள் என்னை விட்டு வேறு விவாகம் செய்து கொள்ளுவாள் என்று பயப்படுகிறீர்களோ?

கண.—அப்படி யில்லை. ஆனால் சில சமயம். . . .

சுகு.—அப்படி ஒன்றும் நேராது. கூடிய சீக் கிரம் யாவும் இனிதாய் முடியும். பயப்பட வேண் டாம் இப்பொது வேண்டிய பணமும் அதிகமில்லை 4,000 இருந்தால் போதுமானது.

கண.—நாற்பது நூறு ரூபாய்களா?

சுகு.—ஆம். பெருந் தொகையல்ல. தகுதி யானவிடத்தில் பணத்தைப் பத்திரம் செய்ய வேண்டு மானால் என்னிடம் தாராளமாய்க் கொடுக்கலாம். நாகேந்திரப் பிரபுவின் ஆதீன சொத்துக்களை நீர் அறியாதவரல்லவே?

கண.—ஆம். சகலமும் நான் அறியாததல்ல. இப்போது நீர் வேண்டிய பணம் கொடுக்கச் சம்ம திக்கிறேன். ஆனால் நான் உங்களுக்குச் சந்தேகத் தின் பேரிலேயே கொடுக்க வேண்டு மென்பதைப் பிரபு, ஆலோசிக்க வேண்டும். நாகேந்திரப் பிரபுவின் குமன் உம்மை விவாகம் செய்து கொள்ளாமல்

போனால் என் பணம் ஆற்றில் கரைந்த புளிபோலாகி விடும்.

சுகு.—ஐயா, உமக்கு ஏன் இவ்வளவு சந்தேகம்?

கண.—சந்தேகமா? எனக்கு என்பணம் வந்து சேருவது தெய்வாதீனமானதே. என்ன செய்வது? முன் ஒரு முறை மதியீனமாய்த் தலையிட்டு விட்டேன். இப்போது பின வாங்குவது அசாத்திய மானதே.

சுகு.—பயப்பட வேண்டாம், பிள்ளையவாள், அப்படி ஒன்றும் நேராது. என்னை நம்பும். சந்தேகமும் பயமும் ஆளைக் கொன்றுவிடும் என்பதை நீர் அறியவில்லையா? நான் கோரும் பணமும் பெருந் தொகையல்ல.

கண.—எனக்கு அது ஒரு பெருந்தொகைதான். ஆனால் என்ன செய்வது? தங்கள் போன்றவர்கள் கேட்கக் கொடுக்கமாட்டேனென்று சொல்லத் துணிபு வரவில்லை.

சுகு.—துணிந்து காரியஞ் செய்யும். அதுதான் வீறத்தன்மை. எதோ பத்திரத்தை எடும். எழுதி முடிந்து விடுவோம் என்றான். கணபதி ஐயா பிள்ளை மெல்ல எழுந்து அங்கு வைத்திருக்கும் இரும்பு அலமாரியைத்திறந்து சில நோட்டுகளையும் முத்திரை கடுதாசியையும் எடுத்து வந்து சுகுமாரனிடத்தில் கொடுத்து, "பிரபு தாங்கள் முன் பத்திரத்தில் நூற்றுக்கு மாதம் ஏழு வீதம் கொடுப்பதாக வரை திருக்கிறீர்கள். இப்போது சற்று வட்டி விகிதம் உயர்த்தினால் . . . .

சுகு.—என்ன பிள்ளையவர்களுக்கு வட்டி விகிதம் முறைக்கு முறை உயர்ந்துகொண்டே போகிறது. நான் முதன்முதல் பணம் வாங்கும்போது மூன்று விகிதம் வாங்கினேன். பிறகு . . . .

கண.—பிறகு என்ன செய்வது? பிரபு, மன்னிக்கவேண்டும். நான் தெய்வாதீனத்தின் பேரில் பணத்தைக் கொடுப்பவன். எனக்குப் பணம் வந்து சேருவது ஒற்றை, இரட்டை, பிடிப்பது போல் தானே. உமது அம்மான் மகள் உம்மைக் கைவிட்டு விட்டால் என்பணம் அடியோடு கடலில் கொட்டியது போலாகும்.

சுகு.—வீணில் வளர்த்த வேண்டாம். இப்போது முடிவு என்ன சொல்லுகிறீர்?

கண.—பத்து விகிதம் போட்டுக் கொண்டால். ......

சுகு.—இல்லை முடியாது. எட்டுவிகிதம். எடும் முத்திரை கடுதாசியை.

கண.—எல்லாம் தங்களிட்டம். எனக்கு நட்டமில்லாது திட்டமாய்ப் போட்டால் போதுமானது என்று சொல்லிக்கொண்டே முத்திரை கடுதாசியை சுகுமாரனிடத்தில் கொடுத்தான். அவன் அதனை வாங்கித் துரிதமாக சில வரிகளை எழுதி அவனிடம் கொடுக்கக் கணபதி ஐயா பிள்ளை அதனை வாங்கிப் பார்த்து தன்னிடம் வைத்துக்கொண்டு நாலாயிரம் ரூபா நோட்டுகளை எண்ணி அவனிடம்கொடுத்தான். சுகுமாரன் திரும்பி அதனை எண்ணிப் பாராமலே வாங்கி பாக்கெட்டில் போட்டுக் கொண்டு வீட்டிற்குள் நுழைந்தான்.

இன்ப நிலையம் என்பது தனவந்தர்கள் கூடி இன்பமாய்க் காலங்கழிக்கும் வீடு. அது தனி பகுதியாய்க் கட்டப்பட்டு அழகிய தோற்ற முடையதாயிருந்தது. ஒருபுறம் உயர்ந்த சீர்மை சாராயக் கடையும் அதற்கு எதிரில் பலகாரக் கடையும் மாடியில் விளையாடு மிடமும் இருந்தன. மாடியில் சூதாடுவோர்களை இருவிதமாக பிரித்திருந்தது. அதில் ஒரு பகுதி பெரும் தொகை வைத்து விளையாடுவோர்களுக்கும், மறு பகுதி சிறிய பந்தயங்கள் வைத்து விளையாடுவோர்களுக்கும் குறிக்கப்பட்டிருந்தது.

இன்ப நிலையத்திற்கு வருபவர்கள் பெரும்பாலும் தனவந்தர்களாகவே இருப்பார்கள், வீண் காலப் போக்குக்கும் துர்ப்பழக்கத்திற்கும் அவர்கள் தான முதன்மையானவர்கள், ஏனெனில் ஏழைகள் தங்கள் வயிறு வளர்ப்பதற்கு உழைக்கவே போதிய சாவகாசம் உடையவர்களல்ல. வெந்ததைத்தின்று வாயில் வந்ததைப் பேசும் பிரபுக்கள் பலர் அந்த இன்ப நிலையத்தில் கூடி காலம் போக்குவார்கள்.

இது நிற்க, நாம் இதுகாறும் கவனித்துவந்த கணபதிஐயாபிள்ளையையும் அவர் இன்ப நிலையத்தையும் பற்றி இன்னமும் சிறிது கூற அவசியம் ஏற்படுகிறது.

கணபதிஐயாபிள்ளை என்பவர் அவ்வூர் பெரிய மனிதர்களில் ஒருவர். அல்லது அவ்விதம் கருதப்படுவோர்களில் ஒருவர் என்றுதான் கூறவேண்டும் ஏனெனில் அக்கிரமத்தில் பொருள் சம்பாதித்தவர்களைத்தான் உலகம் பணக்காரர்கள் என்று பாராட்டுகிறது. கணபதிஐய[illegible] சுமார் ஒருகோடி

ரூபாய்களுக்கு ஸதந்து உடையவர். என்றாலும் வெளிக்கு 'நான் ஏழை, நான் ஏழை' என்றுதான் கூறு வார். அவர் பணம் சம்பாதித்தவிதமோ அதிகமாய் மெச்சத்தக்கது. அதனை இங்குக் குறிப்பிடுவோம். இன்ப நிலயம் என்னும் உன்னத வீடு அவருடையது தான் அவருடைய ஆதரவில்தான் பணக்காரர்கள் என்னும் போக்கிரிகள் வந்துகூடி தங்கள் ஆர்ப்பாட்டத்தை நடத்துவார்கள். அங்கு சூதாடும் பிரபுக்கள் அவர்கள் சம்பாதிப்பதில் நூற்றுக்கு பத்து விதம் கணபதிஐயாபிள்ளைக்கு கொடுத்துவிடவேண்டும். அது எப்படியென்றால் ஒரு நூறு ரூபாய் ஒருவன் ஜயித்தவுடன் அங்கு வைக்கப்பட்டிருக்கும் உண்டிக்கு ஒருவன் பத்து ரூபாய்களை வாங்கிவிடுவான். பிறகு பந்தயம் இழந்தவன் அதே ரூபாய்களைப்பெற்றுக்கொண்டபோதிலும் அவன் அடைந்த ரூபாய்கள் முழுவதும ஜயம் அடைந்த ரூபாய்களாகவே கருதப்படும். அதாவது அப்போதும் அவன் பத்துரூபாய்களை உண்டியில் போட்டுவிட வேணடும். ஆகையால் ஒரு நூறு ரூபாய் பத்து முறை மாறி மாறி வருமானல் நூறு ரூபாய்களையும் கணபதிஐயாபிள்ளை அடைவார். முடிவு ஆலோசிக்குமிடத்தில் அங்கு வந்து சூதாடும் பிரபுக்கள் செல்வம் அனைத்தையும் கணபதிஐயாபிள்ளையே அடைவார். . இதனை அந்த மூடப் பிரபுக்கள் அறிவதில்லை. இன்று ஜயம் பெற்றவன் நாளை தோல்வி அடைவதை அறியாத சூதாடிகள் முடிவான விஷயத்தை எப்படி உணரப்போகிறார்கள்? மூட பணக்காரர்கள் வீண்காலப் போக்கிற்காக விளையாடப்

போக நாளடைவில் கணபதிஐயாபிள்ளை கொழுத்து விட்டார்.

இந்த உத்தம கணபதிஐயாபிள்ளையிடம் பணம் பெற்றுக்கொண்டு மாடிக்குச் சென்ற நமது சுகுமாரப் பிரபு ஓர் விசாலமான அறைக்குள் நுழைந்தார்.

## ௧௪-வது அத்தியாயம்.

---

### வரேந்திரனுக்குக் கிடைத்த ஆதரவு.

ராஜகுமாரன் தன்னை ஒத்த பூமான்களோடு சூதாடிக் கொண்டிருக்கட்டும். நாம் நமது கருங்குயில் குன்றத்தரசன் மருமகன் என்னவானான் என்பதைக் கவனிப்போம்.

போகிவாசத்தில் நாகேந்திரப் பிரபுவின் சயனக் கிரகத்தில் நோயாயிருக்கும் வரேந்திரனுக்கு சுரம் 104-டிகிரிக்குமேலே இருந்தது. பகலிலேயே எச்சரிக்கை செய்திருந்த வைத்தியர் வந்து பார்த்து வேண்டிய மருந்துகளை கொடுத்திருந்தார். அம்பாலிகை இராஜகிரி மன்னனைவிட்டுப் பிரியாமல் உடனிருந்து அவனுக்கு வேண்டிய சிகிச்சை யாவும் குறைவின்றி செய்துகொண்டிருந்தாள் வேளைக்கு வேளை மருந்து தவறாது கொடுக்கப்பட்டுவந்தபோதிலும் வரேந்திரன் நிலை கவலைக்கு இடமானதாயிருந்து வந்தது. மன்னன் வருந்தும் நிலையைக்கான மனமில்லாதவன்போல சூரியனும் மேற்குப் புறம்போய் விழுந்தான்.

நோயாளி வருந்திக்கொண்டிருக்கும் அறையில் வைக்கப்பட்டிருந்த கடியாரம் ஏழு அடித்தது. இருள் பருகும் கறுவியான விளக்குகள் போகிவாசம் எங்கும் நிறைந்திருந்தபோதிலும் இராஜகிரி மன்னனிருந்த அறையில் பிரகாசமான விளக்கு எரிந்து கொண்டிருக்கவில்லை, அந்த அறையில் விளக்குகள் குறைவாய் வைக்கப்பட்டிருந்ததனால் அல்ல. அவை

கள் ஏற்றப்படாதிருந்ததால் வெளிச்சம் இல்லாதிருந்தது. சிவப்பு மூடுபோடப்பட்ட ஒரு விளக்குமட்டிலும் நோயாளியின் தலைமாட்டில் ஏற்றப்பட்டிருந்தது. அம்பாலிகை அதன் அருகில் போடப்பட்டிருந்த ஆசனத்திலிருந்து அவனைக் கவனித்துக்கொண்டிருந்தாள்

இரவு நிச்சப்தமாயிருந்தது. நோயாளி படுக்கையில் அசைவற்று கிடந்தான். மணியும் எட்டு அடித்தது. அம்பாலிகை எழுந்து ஒரு புட்டியில் வைத்திருந்த மருந்தை கரண்டியில் ஊற்றி பிணியாளன் வாயில் கொண்டுபோனாள், குழந்தைக்கு அமுது அளிக்கும் அன்பும், நோயாளிக்கு மருந்தளிக்கும் கவனமும் அவளிடத்திலிருந்தது. மருந்து கொடுக்கும்போது பிணியாளன் சிறிது அசைந்ததனால் மருந்து சிதறி அவன் முகத்தில் பட்டது. உடனே அம்பாலிகை தனது முன்தானையால் துடைத்தாள். அப்போது உண்டாகிய பரிசத்தால் வரேந்திரன் கண்திறந்து தன் எதிரே நிற்பவளைப் பார்த்தான். அவள் அன்பும் அனுதாபமுமுடைய பார்வை இவனைத் திடுக்கிடச் செய்தது. சுற்றிலும் பார்த்தான். ஒருவருமில்லை. அம்பாலிகை தன்னந்தனியளாக அவன் அருகிலிருந்து தரும தெவதைபோல பாதுகாத்துவருகிறாள் என்பதை உணர்ந்து கொண்டான்.

தன் நிலைமையையும் அவள் ஆதரவையும் கண்ட இராஜகிரி மன்னன் அவளுக்கு நாம் என்ன கைம்மாறு செய்யப்போகிறோம் என்று எண்ணினான். உடனே தான் முன்னொருகாலத்தில் நோயாளியா

யிருக்கும்போது மரகதவல்லியால் காப்பாற்றப்பட்ட உபகா[illegible]வனுக்கு உண்டாகியது. ஆ! மரகதவல்லி! என்று தன்னையும் அறியாது கூவினான். இரவு நிசப்தமாயிருந்தபடியால் அவன் குரல் வெண்கலத்தின் ஓசைபோல் சப்தித்தது. அருகில் நின்றிருந்த அம்பாலிகை திடுக்கிட்டாள். அவள் முகம் மாறியது. சற்று பயங்கொண்டாள். அம்பாலிகை பயந்ததின் காரணம் அவளுக்கு கெடுதி சம்பவிக்குமோ என்கிற எண்ணத்தினால் அல்ல. நோயாளிக்குக் கெடுதியாய் முடியுமோ என்கிற எண்ணமே அவளைக் கலவரப்படுத்தியது. உடனே தலை குனிந்து வீரேந்திரனை அனுதாபத்துடன் பார்த்து, "பிரபு, என்னவேண்டும்?" என்று தெளிந்த குரலில் கேட்டாள். அவள் பனி மொழியையும் மழை மதர்த்த நெடுங்கண் பார்வையையும் அன்புள்ள மனதையும் ஒருங்கே கண்ட இராஜகிரி மன்னன் இவள் தானிழந்த மரகதவல்லிக்கு எள்ளளவும் குறைந்தவளல்லவென்று எண்ணினான். பிறகு வாய் திறந்து, "அன்புள்ள மாதே, உன் கவனம் எனக்குப் போதுமானது. உன் ஆதரவில் நான் எத்தனை காலம் நோயாய் இருக்க வேண்டுமானாலும் சலியாமலிருப்பேன். உன் அனுதாபம் எனக்கு குணத்தைக் கொடுக்கும். என் நன்றி உனக்கு உரியதாகும்" என்றான்.

அம்.—பிரபு, அதிகம் பேசவேண்டாம் வைத்தியர் அதனை விலக்கியிருக்கிறார். நீர் சடுதியில் குணமடைவீரானால் அதுவே நான் எடுத்துக் கொள்ளும் அற்ப சிரமத்திற்குச் சம்பாவனையாகும். என்று மணி

யோசைபோல் மொழிந்து இராஜகிரி மன்னன்மேல் போர்த்தி இருக்கும் கம்பளம் சிறிது விலகி யிருந் ததை எடுத்து சரிவரப் போர்த்தினாள். அதே சமயத்தில் சுகுமாரன் அறைக்குள் நுழைந்தான்.

கதவு திறக்கும் சப்தம் கேட்க அம்பாலிகை திரும்பிப்பார்த்தாள். சுகுமாரன் கண்கள் கோவைக் கனிகள்போல சிவந்திருந்தன. ஆனால் அவன் அம்பாலிகைக்குத் தனது உக்கிரமான முகத்தைக் காட்டப் பிரியங் கொள்ளாதவன் போலத் தன குரலைச் சற்று தணித்துக்கொண்டு, அவளண்டையில் சென்று "அம்பா! நீ ஏன் சாப்பிட போசனசாலைக்கு வரவில்லை. அம்மாளை மட்டிலும் அங்கு கணடேன். நீ நோயாளிக்குச் செய்யும் உபசரணையில் புசிப்பதையும் மறந்து விட்டாய் போலிருக்கிறது" என்று சற்று கேலியாய்க கேட்டான். இவன் வார்த்தைகள் அம்பாலிகைக்குப் பிடிக்கவில்லை. என்றாலும் அவனுக்கு முன்பாக முகத்தைச் சுளிக்க மனமில்லாதவளாக, "நான் அங்கு வரவில்லையென்பது உண்மைதான். என் வேலைக்காரியை எனக்கு இங்கு உண்டி கொண்டு வரும்படியாகச் சொல்லியனுப்பி இருக்கிறேன்" என்றாள்.

சுகு.—அப்படியானால் இரவு இந்த அறையில்தான் படுத்துக்கொள்ளப் போகிறாயோ ?

அம்.—ஆம். என் வேலைக்காரி ஜனகத்தை எனக்குத் துணையாக இங்குவந்து படுத்துக்கொள்ளும்படியாகக் கூறியிருக்கிறேன்.

சுகு.—அப்படியா ?.........பரதேசியான ஒருவனுக்கு இந்த சிரமம் எதற்கு?.........ஆனால் இருக்

கட்டும். உன் மனதிற்கு விரோதமாய்ச் சொல்ல இஷ்டமில்லை அம்பா, உன் நோயாளி இப்போது எப்படி இருக்கிறான் ?

அம்.—சற்று குணம் என்றே எண்ணுகிறேன். ஆனல் அவரைப் பார்க்க உங்கள் கண்களுக்குப் பிடிக்கவில்லை போலிருக்கிறது.

சுகு.—ஆ ! அப்படியேன் சொல்லுகிறாய் ? நீயே ப்படி இருக்குமென்று எண்ணுகிறாயோ ?

அம்.—இல்லை. உங்கள் முகம் அவ்வித குறி யைக் காட்டியதால் அப்படி கூற நேர்ந்தது. அப்ப டிக்கு இல்லை என்றால் கூறுமே, அதற்கென்ன.

சுகு.—அம்பா, உன் கேள்வி விநோதமாயிருக் கிறது. ஆனலும் நீ கூறுவதில் உண்மை இல்லாது போகவில்லை. இந்த ஏழை மனிதனைக்காண எனக்கு அனுதாபம் உண்டாகிறது. அவன் விஷயத்தில் நீ எடுத்துக்கொள்ளும் பிரயாசை வீணுகுமானல் உன் வேலைக்குத் தகுந்த கூலி இல்லாது போகுமே என் கிற எண்ணமட்டிலும் என்னை வருத்துகிறது......... உண்மையைச் சொல்ல வேண்டுமானல் இந்த மனி தன் பிழைக்கப் போகிறான் என்கிற நம்பிக்கை எனக்குக் கிடையாது.

அம்.—அப்படியா ?—...அவர் இறக்க வேண்டு மென்பது உமது கோரிக்கையல்லவே ?

சுகு.—இல்லை.

அம்.—சரி. ஆனல் அதுவே போதுமானது.

சுகு.—அம்பா, இவனை அதிர்ஷ்டசாலி என் றே சொல்லவேண்டும். உன்னுடைய கவனத்தில் இருக்கக் கூடுமானல் நான் என் ஆயுள் பரியந்தம்

நோயில் வருந்த சம்மதிப்பேன் என்று சொல்லும் போது ஜனகம் அங்கு வந்தாள். அவள் தன் எஜமானி வேண்டிய போஜனமும் கொண்டு வந்து நின்றாள்.

உடனே சுகுமாரன் அம்பாலிகையிடம் விடை பெற்றுக்கொண்டு வெளியே சென்றான். வாயிற் படி தாண்டுகையில் கதவின் மேல்நிலை அவன் தலையில் இடித்தது. சுகுமாரன் உச்சியைத் தடவிக் கொண்டே வெளியே போனான். அவன் பள்ளியில் வாசிக்கும்போது குருவின் கையால் அனேகமாய்க் குட்டுவாங்கியவனானபடியால் அந்த இடி அவனுக்கு அவ்வளவாக உபத்திரவம் செய்யவில்லை. முன் உபாத்தியாயர் குட்டிய குட்டைத் துடைத்துக் கொண்டது போல இப்போதும் அலட்சியமாய்த் துடைத்துக் கொண்டான். பிறகு சுகுமாரன் தலையைச் சொரிந்துகொண்டே சற்று நேரம் தாழ்வாரத்தில் உலவினான், தன் அறைக்குள் போய் நித்திரை செய்யலாமாவென்று எண்ணினான். தூக்கம்வாராததால் பின்னும் சற்றுநேரம் உலாவிக்கொண்டிருந்தான்.

அப்போது அவனுக்குப் பகல் நடந்த விஷயம் ஞாபகத்துக்கு வந்தது. ஆ! என்ன மதியில்லாதவனாக நடந்து கொண்டேன். இன்று நான் இன்ப நிலயத்துள் புகுந்தவுடன் நல்ல அதிர்ஷ்டமிருந்தது. சுமார் (20000) இருபதினாயிரம் வரையில் ஜயித்தேன். உடனே திரும்பி யிருப்பேனானால் உத்தமமாய் இருந்திருக்கும். உற்சாகத்துடன் எழுந்து மேலே வந்தேன். தாக சாந்தியின் நிமித்தம் ஒரு

கிளாஸ் விஸ்கி அண்டு ஸோடா (Whisky and Soda) சாப்பிட்டவுடன் என்மனம் வேறுபட்டது. அது தான் முட்டாள்தனம். இன்று அதிர்ஷ்டம் உள்ள நாள் முன்னம் நாம் இழந்தபணம் யாவும் கைப்பற்றி விடலாம் என்றெண்ணி மறுபடியும் மாடிக்குப்போக அதிர்ஷ்டம் துரதிர்ஷ்டமாய் மாறிவிட்டது. வீடு நோக்கி வரும்போது வெறுங்கையனாய் வர நேரிட்டது......என்ன அதிர்ஷ்டம்......சீ! இனி அந்த இன்ப நிலையத்தின் முகத்திலேயே விழிக்கக்கூடாது என்று தனக்குள் தீர்மானித்துக் கொண்டு அறைக்குள் நுழைந்தான்.

அப்போது அவனுக்கு அம்பாலிகையைப் பற்றியும் அவள் நோயாளியைப் பற்றியும் ஞாபகம் வந்தது. உடனே அதனை மாற்றிக் கொண்டு "சீக்கிரமாய் உறங்குவேன். அதனால் நல்ல கனவுகள் காண்பேன். அவைகள் எனக்குச் சந்தோஷத்தைக் கொடுக்கும். இப்போது ஏன் வீண் சங்கடமான விஷயங்களைப் பற்றி எண்ண வேண்டும்?" என்று தனக்குள் மதித்தவனாக படுக்கையில் படுத்தான், செல்வ வந்தர்கள் தூங்குவது அரிது என்பார்கள். சுகுமாரன் அதற்குக் கஷ்டப்படவில்லை. சுபாவத்திலேயே தூக்கம் அவன் உடன்பிறந்ததாகையால் சிரமம் இல்லாது தூங்கிவிட்டான்.

அம்பாலிகை தனக்குக் கொண்டுவரப்பட்ட போஜனத்தை உண்டு இராஜகிரி மன்னனருகே போய் உட்கார்ந்தாள். மணி பத்து அடித்தது, வைத்தியர் கொடுத்த மருந்தை எடுத்துவந்து நோயாளிக்குக் கொடுத்தாள். அப்போது வீரேந்

திரன் தேகத்தில் வியர்ப்பது கண்டு சற்று போர்வை களை மெல்லவிலக்கித் துணியால் துடைத்தாள். இராஜ கிரி மன்னன் கண்விழித்துப் பார்த்தான். தான் முன் கண்ட அதே கருணையுள்ள கண்கள் அவனை நோக் கின. "நான் இங்கு வெகுநாளாக நோயாயிருக்கிறே னோ?" என்று கேட்டான்.

அம்.—இல்லை பிரபு, இன்று காலையே நீர் இங்கு கொண்டுவரப்பட்டீர்.

வரேந்திரன.—ஆ! இரண்டு நாட்களாகி விட் டனவா? என்று சொல்லி பெருமூச்சுவிட்டு திரும்பிப் படுத்தான். அவன் கூறிய சொல்லின் பலனை அம் பாலிகை உணரவில்லை. தான் ஒருநாள் என்றவுடன் அவன இரண்டுநாள் என்றதினால் தன்னுடையசொல் அப்படி விளங்கியிருக்கும் என்று எண்ணினாள் மறு படியும் அதுபற்றிப்பேச வாயெடுத்தவள் அதிகம் பேச வைப்பதினால் நோயாளிக்கு ஏற்படககூடிய சிர மத்தை எண்ணி பேசாமலிருந்துவிட்டாள்.

வரேந்திரன் இரண்டுநாள் என்றதின் காரணத் தை அவனைப்பற்றி ஒன்றும் அறியாத அம்பாலிகை எவ்வாறு அறிந்துகொள்ளக்கூடும்? இவன் அருமை யாய் நேசித்தக் காதலியை திருமணம் செய்து கொண்ட மாலையிலேயே பறிகொடுத்திருப்பான் என்று யார் எண்ணக்கூடும்? மரகதவல்லியை இழந்த அவள் காதலன் அவளை அடைய எண்ணி கமடத்தில் பிரயாணம் செய்கையில் கப்பல் காற்றுக்கு இரை யாகிக் கடலில் மூழ்க இவன் தண்ணீரில் மூழ்கினான் என்பதை அம்பாலிகை எப்படி அறிவாள்? இராஜ கிரிமன்னன் மறுபடியும் பெருமூச்சுவிட்டான். இத

யைக்கண்ட நம்மடவாள் நோயின் தொந்தரையால் வருந்துகிறான் என்று எண்ணினாள். வரேந்திரனோ தன் ஜீவிய காலத்தில் நடந்த விஷயம் ஒவ்வொன்றாய் யோசிக்கத் தலைப்பட்டான். உடல்நோய் அவனை வருத்தியதைவிட மனநோய் அவனை மிகுதியாக வருந்தச் செய்தது. அவன் எவ்வளவு வருந்திய போதிலும் அம்பாலிகையைப் போன்ற ஒருவளுடைய ஆதரவு கிடைத்தது அவன் நல்ல காலமென்றே சொல்லவேண்டும்.

ஜனகம் தன்வேலை யாவும் முடித்துக்கொண்டு அம்பாலிகை உட்கார்ந்திருந்த ஆசனத்தின் பின்புறமாக வந்து நின்றாள். எஜமானி அவளைப்பார்த்து, "ஜனகம், உன் வேலை யாவும் முடிவு பெற்றதா?" என்று கேட்டாள்.

ஜனகம்.—ஆம் அம்மணி, யாவும் குறைவின்றி முடித்தேன்.

அம்.—நல்லது ஜனகம், நீ வீணில் கண்விழிக்க வேண்டாம். உன் படுக்கையில் சயனித்துக்கொள், உன் உதவி அவசியமானால் உன்னை எழுப்புகிறேன்.

ஜன.—அம்மணீ! தாங்கள் சற்று உறங்குவீர்களானால் இவரை நான் கவனித்து இருப்பேன். உங்களுக்காக......

அம்.—வேண்டாம் ஜனகம் என் சொற்படி செய். நீ சயனித்துக் கொள் என்றவுடன் ஜனகம் பதில் பேசாமற் சென்று அறையின் ஒரு புறத்தில் போடப்பட்டிருந்த பாயில் படுத்துக்கொண்டாள்.

அம்பாலிகை யௌவன ஜமீன்தாரை அன்புடன் கவனித்துக் கொண்டிருந்தாள். இராஜ்ஜிசி

மன்னனே உக்கிரமசிங்கனுல் களவாடப்பட்ட தன் மனைவியையும் இப்போது தன்னை அன்பாய்ப் பாது காத்துவரும் அம்பாலிகையையும் பற்றி யோசித்துக் கொண்டிருந்தான்.



## 20--வது அத்தியாயம்

---

### வர்மத்துக்கு மேல் வர்மம்

இராஜகிரி மன்னனை போகிவாசம் கொண்டு வந்த எட்டு நாட்களுக்குப் பிறகு ஒருநாள் காலை கதிரவன் உதித்தும் வெயில் பரவவில்லை. ஆதித்தனை மேகத்துள் மறைந்திருந்ததால் காலை குளிர்ச்சியா யிருந்தது. மரங்கள்தோறும் பறவைகள் தங்கள் கூட்டத்தோடு கூடி உல்லாசமாய்க் கூவிக் களித் திருந்தன.

பாயும் படுக்கையுமாய் இருந்த வீரேந்திரன் மெல்ல தன் படுக்கையை விட்டு எழுந்தான். அறை யில் அவன் தனித்திருந்ததால் யாருடைய உதவியு மில்லாமலே தனியாய் எழுந்தான். அவன் கால்கள் பலனற்றதா யிருந்ததால் அவைகள் தரையில் பொருந்தி நிற்க இசையவில்லை. சற்று மனோதிடத் துடன் கால்களை ஊன்றி எழுந்து நின்றான். அதே தருணத்தில் வைத்தியர் அங்கு வந்தார்.

பிணியாளனின் பிரயாசையைக் கண்டு அதன் காரணம் உணராதவராக அவன் அண்டையில்வந்து, "பிரபு, என்ன செய்கிறீர் ? ஏன் இவ்வளவு சிரமத்து டன் எழுந்து நிற்க முயலுகின்றீர்?" என்று கேட்டார்

வீரே.—பண்டிதரே, நான் சீக்கிரம் குண மடையவேண்டும். எனக்குக் காரியம் அதிகமுண்டு.

பண்டிதர்.— ஏன் உங்களுக்கு உதவிபுரிய இந்த மாளிகையின் எஜமானி அம்பாலிகை உங்களருகில் இருக்கவில்லையா ? நீர் ஏன் இவ்வளவு பரபரப்புடன்

ஒருவருடைய உதவியுமில்லாது எழுந்து நிற்க முயன்றீர்?

வரே.—அம்பாலிகை இப்போது தான் என்னை விட்டுப் போனுள். அவள் அத்தை ஏதோ அவசரமாகக் கூப்பிட்டதால் அப்படிப் போக நேர்ந்தது. நான் என் பலத்தைப் பரிசோதிக்க எண்ணி இப்போது என்னுல் நடக்கமுடியுமோ வென்று பார்க்க எழுந்தேன்.

பண்.—நீர் நடக்கவேண்டியது அவ்வளவு அவசரமோ?

வரே.—என்ன அவசரமா!...நான் இங்கிருப்பது எவ்வளவு தாமதமானது.

பண்.—ஏன இப்படிக்கூறுகிறீர்? உமக்கு இங்கு என்ன குறைவு?

வரே.—என்ன குறைவா?.........மனக்குறைவு தான். பண்டிதரே, நீர் என்னை அறியமாட்டீர். என் கதை முழுவதிலும் அறிவீராஞல் இப்படிக் கூறத் துணியீர் என்று சொல்லிக்கொண்டே நிற்க பலனற்றவனுக வைத்தியரின் தோளைப்பிடித்து நின்றுன். அப்போது வெளியில் சென்றிருந்த அம்பாலிகை அங்கு வந்தாள்.

அவன் அறைக்குள் நுழைகையில் வரேந்திரன் கூறிய கடைசி மொழி அவள் காதில் நுழைந்தது. உள்ளே வந்தவுடன் சற்று வியப்படைந்தவளாக இராஜகிரி மன்னனைப் பார்த்து, "பிரபு, உம்முடைய கதையைப்பற்றி என்ன சொல்லுகிறீர்? அதனை நானும் கேட்கலாமோ?" என்று புன்னகையுடன் கேட்டாள்.

வசீ.—அம்பா, என் ஜீவிய சரித்திரம் கேட்போர்களுக்கு ரம்மியமாயிராது. மேலும் அது ஒரு நீண்ட சரித்திரமாகும். அதனை வரையப் புகுந்தால் இரண்டு புத்தகங்களில் அடங்காது. மூன்றும் புத்தகமும் அவசியமாகும்

அம்.—அதனைக் கேட்க நாங்கள் பிரியமுள்ளவர்களா யிருக்கிறோம். பிரபு, முன்னம் நீர் இராஜகிரி ஜமீனுக்குரியவர் என்பதை மட்டிலும் கூறியிருக்கிறீர்கள். இப்போது உங்களுடைய முழு சரித்திரத்தையும் கேட்க ஆவலுள்ளவர்களா யிருக்கிறோம்.

பண்.—பிரபு, நீர் இங்கு இப்படி நிற்பது தகுதியாகாது. உமது படுக்கையில் உட்காரும். பிறகு சக்தி இருக்குமானால் பார்த்துக் கொள்ளுவோம்.

வசீ.—பண்டிதரே, நான் இன்று ஒரு குழந்தைபோல் இந்த அறையைச் சுற்றி நடந்தாகிலும் களிப்படைகிறேன். நீர் எனக்கு உதவியாக என்னைப் பிடித்து வாரும்.

அம்.—வைத்தியரே, அவர் இஷ்டத்தைக் கெடுக்கவேண்டாம். அவர் நடக்கட்டும். இந்த அறைக்கு அடுத்த அறை என் தந்தையின் வாசகசாலை. அங்குபோக இங்கிருந்து வாயற்படி தாண்ட வேண்டியதில்லை. இந்த அறையின் மேற்புறமாகச் சுவற்றில் விடப்பட்டிருக்கும் படுதாவை நீக்கினால் அந்த அறைக்குள் போய்ச் சேரலாம். அங்கு ஒரு நீண்ட நாற்காலியு மிருக்கிறது. அதில் இவர் உட்கார்ந்திருந்தால் சற்று ஆறுதலா யிருக்கும்.

வசீ.—ஆம், அப்படியே செய்வோம் என்ற

வுடன் அம்பாலிகை முன்னதாகச்சென்று படுதாவை நீக்கி அடுத்த அறைக்கு வழி காட்டினாள் மூவரும அவ்வறைக்குள் நுழைந்தார்கள்.

அது ஒரு பெரிய அறையாயிருந்தது. நாற்புறமும் உயர்ந்த கண்ணாடி அலமாரிகள் வைக்கப்பட்டிருந்தன. அந்த அலமாரிகள் நிறைய புத்தகங்களும் எட்டுப் பிரதிகளும் நிறைந்திருந்தன. இராஜகிரி மன்னன் அந்த அறையை நாற்புறமும் சுற்றிப் பார்த்து அம்பாலிகை கொண்டு வந்து போட்ட ஆசனத்தில் உட்கார்ந்தான். அப்போது பண்டிதர் அம்பாலிகையை ஒரு புறமாய் வெளியில் அழைத்துக் கொண்டுபோய் இனி அவள் இராஜகிரி மன்னனுக்குச் செய்யவேண்டிய உதவிகளை விரிவாய்க் கூறி விடை பெற்றுக்கொண்டு சென்றார்.

வரேந்திரன் அந்த அறையைச் சுற்றிப்பார்ப்பதே ஓர் அரிய காட்சியாக எண்ணினான். அந்த அறைக்குள் வந்த ஒவ்வொரு விநாடியும் புதிய பலனடைந்தவன் போல் உற்சாகமடைந்தான்.

அம்பாலிகை வைத்தியருடன் வெளியே சென்றிருந்தபடியால் தனியே மெல்ல எழுந்து வடபுறத்தில் போட்டிருக்கும் அலமாரியிலுள்ள ஒரு ஏட்டுப் பிரதியை கையில் எடுத்தான். அது ஒரு அழகிய புத்தகமாய் இருந்தது. ஆனால் அதிலுள்ள எழுத்துக்கள் அவ்வளவு தெளிவாய் விளங்கவில்லை. அதன் முதல் ஏட்டில் " தாய் நாட்டிற்கு ஊழியம் செய்ய விரும்பும் தனயனுக்கு " என்று வரைந்திருந்தது. இதனைக் கண்ணுற்ற வீரேந்திரன் திடுக்கிட்டான். இதனை யார் எழுதியது? இந்தப் புத்தகம் இருக்கு

அக்ஷரங்களைக் கொண்டிருந்த போதிலும் அரிய விஷயங்களைக்கொண்டிருக்கவேண்டும் என்று எண்ணி அதனைத் திருப்பித் திருப்பிப்பார்த்தான்.

மூடர்கள் அழகிய எழுத்துக்களில் வரைபவர்களே உயர்ந்த பொருள்களை விளக்கக்கூடும் என்று எண்ணுகிறார்கள். பட்டுமெத்தையாய் இருந்தபோதிலும் பணமிலலாதுபோனல் என்னபிரயோசனம்? மண்ணிலிருந்தே பொன்னை எடுக்கிறார்கள். கிறுக்கு எழுத்துகளிலும் உயர்ந்த பொருள்களைக் காணலாம என்பதை இராஜகிரி மன்னன் நன்றாய் அறிந்தவனானதால் அப்புத்தகத்தைக் கீழே போடாமல் பின்னும் விரித்துப்பார்க்கச் சமமதித்து இருந்தான். இரண்டாவது ஏட்டில் முன்னுரை ஒன்று எழுதியிருந்தது:

நான் என் ஜன்மதேசத்திற்குச் செய்யக்கூடிய கருமத்தைப்பற்றிப் பலவாறாய் யோசித்தேன். ஆனால் நான் எண்ணிய கருமங்கள் அனைத்தையும் முறையே செய்துவரப் பலனற்றவனாய் இருந்தேன். என் பலவீனத்தைக் கண்டு நானே என்னை வெறுத்துக் கொண்டேன். ஒருசமயம் இன்று நான் எழுதும் புத்தகம் ஒரு பரத கண்டத்தவன் கையில் கிடைக்குமானல் அவன் இதனைக்கொண்டு பயனடையத் தவறாதிருப்பானாக. இம்மன்னுலகம் அவனை என்றென்றும் போற்றி வாழ்த்தும்.

வி. நாகேந்திரன்

இதனைப் படித்துப்பார்த்த வீரேந்திரன் மனம் பூரித்தது. இதனை எழுதியவர் அம்பாலிகையின் தந்தை. அவர், ஒரு மேதாவியாய் இருந்திருக்க

வேண்டும். அவனை உலகம் நன்கு மதிக்கவில்லைபோ லிருக்கிறது என்று எண்ணி மறுபடியும் பிரித்துப் பார்த்தான்.

"நமது தேசம ஒரு பெரிய மாந்தோட்டத் திற்குச் சமானமானது. என் தாய்நாட்டின் சகோதரர்களே! நாம் அந்தத் தோட்டத்திற்கு காவற்காரர்களாவோம். நாம் தயாளகுணம் உள்ளவர்களா யிருப்போமானால் அந்தத் தோட் டத்தில் உண்டாகும் மாம்பழங்களை யாவருக்கும் பசியாறப் புசிக்கக்கொடுப்போம். ஆனால் அந் தப் பழங்களைத் தோட்டத்தைவிட்டு வெளியே கொண்டுபோகவிடாது காக்கவேண்டும்"

என்று வாசித்தான். இது சந்தர்ப்பத்தில் அம்பா லிகை அங்கு வந்தாள். அவளுக்குண்டான வியப் பிற்கு அளவில்லை. இராஜகிரிமன்னன் ஒருவருடைய உதவியுமில்லாமலே நின்று புத்தகம வாசிப்பதைக் காணவே அவளுக்குண்டாகிய சந்தோஷத்திற்கு எல்லையில்லாது போயிற்று. வரேந்திரன் அவளைக் கவனிக்கவில்லை. தன் வாசகத்தில் கருத்தை ஊன்றி வெகுநேரமாக தான நின்றிருப்பதையும் கவனிக்க வில்லை என்றால் அம்பாலிகை அங்கு வந்ததை அவன் எப்படி கவனித்திருப்பான்? நாகேந்திரன் மகள் வரேந்திரனை அணுகி, "பிரபு, நீர்முற்றும் குணப் பட்டுவிட்டீர்" என்று ஆர்வத்தோடு கூறினாள். அவள் குரலைக் கேட்டவுடன் வரேந்திரன் திடுக் கிட்டுத் திரும்பினான்.

அம்.--பிரபு, அதுவென்ன புத்தகம்? இவ் வளவு கவனத்துடன் வாசிக்கிறீரே.

வரே.—இது உன் தந்தை எழுதியது. நீ இதனைப் பார்த்ததில்லையா ? என்று சொல்லி தன் கரத்திலுள்ளதை அவள் கையில் கொடுத்தான்.

அம்பாளிகை அதனை வாங்கிப்பார்த்து, " ஆம். இது என் தந்தை எழுதியதுதான். அநேக நாட்கள் சரிவர புசிக்காமலே இதனை எழுதிக்கொண்டிருந்தார். அவரைப்பற்றி பலர் பலவிதமாக கூறுவார்கள்.

வரே.—ஏன் அப்படி ? நான் அவரை ஒரு மேதாவியாகப் பாராட்டுகிறேன்.

அம்.—அவர் என்னிடம் பேசும்போதெல்லால் நமது புனிதபூமியாகிய பாதகண்டத்தைப் பற்றி அடிக்கடி பேசுவார். அவரை அறிந்தவர்கள் அறிந்தவர்களாயும் அறியாதவர்கள் அறியாதவர்களாயுமாவார்கள். அது போகட்டும். பிரபு, அவர் இறந்தும் ஒருவருடமாகிவிட்டது அவரை இப்போது எண்ணுவாருமில்லை.

வரே.—ஏன் இப்படி சொல்லுகிறாய் ? அம்பா, நீ அவர் மகளாயிருந்தும் அவரை இவ்வளவு சீக்கிரமாக மறந்துவிட்டாயா ?

அம்.—மறப்பதா ?......என் தந்தை எவ்வளவு அன்புடையவர் என்பதை நானறிவேன். அவரை மறக்க என் மனம் என்ன கல்லா ? ஆனால் பிரபு, நீர் இப்போது அவரைப்பற்றி ஆராயவேண்டிய அவசியமில்லை என்று நான் மொழிந்தேன். மேலும் நீர் வெகுநேரமாய் இப்படி நின்றிருப்பது பலஹீனமுள்ள உமக்கு நன்மையைத்தராது என்பதைக் கூறவே முன் யோசித்து அப்படிக்கூறினேன். என்று

இருவரும் பேசிக்கொண்டிருக்கையில் சுகுமாரன் அங்கு வந்தான்.

அம்பாலிகை இராஜகிரி மன்னனுக்கு உதவியாக அவன் கரத்தைப்பிடித்து அழைத்துவந்து முன் உட்கார்ந்திருந்த ஆஸனத்தில் இருத்தினான். இதனைக் கண்ட சுகுமாரன் கண்கள் கோபத்தால் சிவந்தன. பொறாமை அவன் உள்ளத்தில் குடிகொண்டது. வீரேந்திரனை முதல்முதல் காணும்போதே பொறாமையடைந்தவனாதலால் அம்பாலிகை அவனுக்குச் செய்யும் ஒவ்வொருகாரியமும் அவனுக்கு தீராத பொறாமையை வளர்த்துவந்தது. இந்த முறை அவள் அவன் கையைப்பிடித்து அன்புடன் அழைத்துவந்ததைப்பார்க்க அவன் கண்களுக்கு சகிக்கவில்லை. உடனே மறுபக்கம் திரும்பினான்.

அம்பாலிகை தனது அத்தை மகனின் முகமாறுதலை கவனியாதிருக்கவில்லை. ஆனால் அவனுக்குச் சமாதானம்சொல்ல இஷ்டப்படவில்லை. ஏனெனில் அவன்போன்ற மனிதர்களுக்கு விஷயத்தை விளக்கப் புகுவது சேற்றில் கல்லைப்போடுவது போலாகும் என்பதை அவள் நன்றாய் அறிந்திருந்தாள். சுகுமாரன் ஒன்றும்பேசாமல் வந்தவழியே திரும்பிப் போய்விட்டான். இராஜகிரி மன்னன் மட்டிலும் சுகுமாரன் விஷயத்தில் அனுதாபம் கொண்டவனாக அம்பாலிகையை அது விஷயமாக சில கேள்விகள் கேட்டான். அவைகளுக்கு அவள் நேரே பதில் கூறாததால் பிறகு அதுபற்றி வற்புறுத்தவில்லை.

சற்றுநேரம் செல்ல அம்பாலிகை வீரேந்திரனைப் பார்த்து, "பிரபு, நீர் உம்முடைய சரித்திரம் பெரி

தாகும் என்றும் அதனை வரையப்புகுந்தால் மூன்று புத்தகங்களாகும் என்றும் கூறினீர்களே அதனை எனக்குச் சுருக்கமாய் உரைக்கக்கூடுமோ?'' என்றாள். இதனைக்கேட்டவுடன் வரேந்திரன் முகம் மாறியது. "பிரபு, என் கேள்வி உமக்கு வருத்தம் செய்யக் கூடுமானால் என்னை மன்னிக்கவேண்டும். நான் உங்களை வருத்துவதற்காக அவ்விதம் கேட்கவில்லை.''

வரே.—அம்பா, உன்கேள்வி என்னை வருத்தவில்லை. ஆனால் என் விதி என்னை வருத்தச்செய்தது. நீ எனக்காக செய்யும் உபகாரத்திற்கு நான் உன் ஆசையை கெடுத்துவிடமாட்டேன். எனது நிர்பாக்கிய ஜீவியத்தைபபற்றி கூறுவதில் வருந்த நேரிடுமாயினும் உன்பொருட்டு அதனைக்கூற சம்மதிப்பேன் என்று சொல்லி சற்றுநேரம மௌனமாயிருந்தான.

அம்பாலிகை வரேந்திரன் உரைக்கபபோவதில் மனம் ஊன்றியவளாகக் கவனத்தோடு அவனைப் பார்த்திருந்தாள். இராஜகிரி மன்னன்தான் பிறந்தது முதல் ஆரம்பித்து கடைசியாக தனக்கு மரகதவல்லி மனைவியாக வாய்த்ததும் மணமான மாலையே அவள் மாயமாக உக்கிரம சிங்கனால் களவாடப்பட்ட விபரமும் கூறி தான் அவள் நிமித்தமாக கமடத்தில் பிரயாணப் பட்டதையும் புகன்றான்.



# 21--வது அத்தியாயம்

--

## அரிய ஆலோசனை

சுகுமாரன் முகம் சிவக்க கோபாவேசமாய் இராஜகிரிமன்னனும் அம்பாலிகையும் பேசிக்கொண்டிருந்த அறையை விட்டு வெளியே போனான். அவள் அவனை விரும்புகிறாள். என்று தன் வாய்க்குள் முணமுணுத்தான். அவன மனம் நிம்மதியா யிருக்கவில்லை. இனி நாம் என்ன செய்யலாம்? என்று எண்ணியவனாக தாழ்வாரத்தைச் சுற்றி விரைவாய் நடந்தான். அவனுக்கு இன்ன செய்வதென்று ஒன்றும் புலப்படவில்லை. அம்பாலிகை தனக்கு மனைவியாக வாய்க்காது போனால் என்று எண்ணும்போதே அவனுக்கு நடுக்கம் உண்டாகியது. அப்படி ஒருகால் சம்பவிக்குமானால் தன்கதி அதோகதி தான் என்பதை அவன் பூரணமாய் அறிந்திருந்தான்.

இவ்வித சந்தர்பத்தில் யாரையேனும் ஆலோசனை கேட்கவேண்டும் என்று எண்ணினான். இது விஷயமாக யாரைக் கேட்பது? தன் தாய் காளிந்தியிடம் இது விஷயமாக ஆலோசனை கேட்க சுகுமாரன் பயந்திருந்தான். இந்த நெருக்கமான சந்தர்ப்பத்தில் தனக்கு யுக்தி கூறக்கூடிய நண்பர்கள் யார் இருக்கிறார்கள் என்றுயோசித்தான். இன்பநிலையத்திலுள்ள நண்பர்கள் இது விஷயமாக அரிய ஆலோசனை கொடுக்கக்கூடும் என்று எண்ணினான். உடனே அங்கு செல்ல தன்னிடம் பணம் இல்லையே என்கிற எண்ணம் அவனுக்கு உண்டாகியது. கணபதி ஐயா பிள்ளையிடம் தனக்கு வேண்டியதை பெற்றுக்கொள்

னலாம் என்று எண்ணினன். அதே சமயத்தில் கண பதி ஐயாபிள்ளை தன் நிலையை கண்டுகொள்ள கூடு மானல் உடனே வாரண்டியில் பிடித்துத்தன்னை காவற்கூடத்தில் வைத்துவிடுவாரோ என்று எண்ணினன். சுகுமாரன் இருதலைகொள்ளிக்கு இடைப்பட்ட எறும் பைப்போல இனி என்ன செய்வதென்று ஒன்றும் தோன்றாதவனாக சற்றுநேரம் அசைவற்று நின்றான். அவன் நிலைமை பரிதாபத்திற் குரியதா யிருந்தது. சுகுமாரன் சுபாவத்தில் மந்தனாயினும் குணத்தில் நல்லவனென்றே சொல்லவேண்டும். புத்திமான்களும் கொடிய பழக்கங்களுக்கு இடங் கொடுப்பார்களானல் அதினின்றும் மீள வகையறியாதவர்களாகி மென்மேலும் அவ்வித தீச்செயலிலேயே காலத்தைக் கழிக்கிறார்கள். அவர்கள் அவ்வித கொடிய பழக்கங்களிலிருந்து மீளுவதற்கு முயன்றபோதிலும் முன் செய்த செய்கைகள் அவர்களுக்கு இடங் கொடுப்பதில்லை. மேதாவிகளும தங்கள் கொடிய பழக்கக்களால் வருந்துகிறார்க ளென்றால் ஏழை சுகுமாரன் என்ன செய்வான்? அவன் நிலை உண்மையில் வருந்தத் தக்கதாயிருந்தது.

சற்றுநேரம் ஆயாசத்துடன் உலாவிக்கொண்டிருந்த சுகுமாரன் திடீரென்று ஒரு முடிவுக்கு வந்தான். துரிதமாய் நடந்து தன் அறைக்குள் வந்து உடுத்திக்கொண்டு இன்ப நிலயத்தை நோக்கி நடக்கலானன்.

பத்தொன்பதாவது அத்தியாயத்தில் சுகுமாரன் இனி இன்ப நிலயத்திற்குப் போவதில்லை என்பதாக தனக்குள் நிர்மானித்துக்கொண்டு பழைக்

கைக்குப் போனன் என்று நாம் சொல்லியது வாசகர்களுக்கு ஞாபகம் இருக்கலாம். இப்போது அவன் அந்தத் தீர்மானத்திற்கு விரோதமாய் இன்ப நிலையத்தை நோக்கிச் செல்லுவது ஆச்சர்யமாகாது. ஏனெனில் குடியர், சூதாடிகளுடைய பிரதிக்கினைகள் யாவும் விடியுமட்டிலும் தான் நிலைத்திருக்கிறது என்னும் உண்மையை யாவரும் அறிந்த விஷயமே. மேலும் தனக்கு இந்த சந்தர்ப்பத்தில் ஏதேனும் உதவி செய்யக்கூடியவர்களை அங்குகாணலாம் என்று எண்ணியவனகையால் சுகுமாரன் இன்ப நிலையத்துக்குப்போக வேண்டியதை அவசியமாக எண்ணியிருந்தான்.

கணபதி ஐயாபிள்ளைக்கு தன் விஷயத்தில் ஒன்றும் கூருது மறைத்துவிட வேண்டும் என்கிற எண்ணத்துடன் இன்ப நிலையத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்தான். சுகுமாரன் எண்ணியது போல கணபதி ஐயாபிள்ளை அறியாது ஒருகாரியமும் நடைபெறுவதில்லை. கணபதி ஐயாபிள்ளை உடலில் எவ்வளவு பருத்த மனிதரோ அவ்வளவு தந்திரத்திலும் மிகுந்தவர். சுகுமாரன் அவரை அறிந்தவனாக எண்ணியிருந்தபோதிலும் அவர் காரியம் யாவும் இவனுக்கு மர்மமானது. கணபதி ஐயா பிள்ளை சுகுமாரன் விஷயம் ஒவ்வொன்றும் தெளிவாய் அறிந்தவர். இவன் வேண்டிக் கேட்டிருந்தால் அவரே தக்க உளவு சொல்லி இருப்பார். சுகுமாரன் சூது அறியாதவனகையால் தன் கடன்காரனுக்கு தன் குறைகளைக்கூருது ஏமாற்றிவிடலாம் என்கிற எண்ணத்துடன் இன்ப நிலையத்துள் புகுந்தான்.

கணபதிஐயா பிள்ளை வழக்கம்போல புன்னகை யுடன் "வரவேண்டும். வரவேண்டும்." என்று சுகு மாரனுக்கு நல்வரவு கூறி உபசரித்தார். இவன் அதிக பேச்சுக்கு இடம் வைத்துக் கொள்ளாமல், "பிள்ளைவாள், இன்று எனக்கு ஐந்தாயிரம் வேண் டும்" என்றான்.

கண.—ஏன் பிரபுவுக்கு இவ்வளவு அவசரம்? முகமும் வாட்டமுடையதாகவே விளங்குகிறது. கேவலமான என் ஏழை வீட்டை வந்துபார்க்க சாவ காச மில்லைபோலும்.

சுகு.—காலதாமதம் வேண்டாம். பிள்ளை, நான் வேண்டியதைக் கொடும்.

கண.—எங்காவது அவசரமாய்ப் போக வேண் டுமோ? மாடிக்குச் சென்று விளையாடப் போக வில்லையா?

சுகு.—நீங்கள் எணணுவது போல நான் வெளி யில் போகப் போவதில்லை. மாடிக்குச் செல்லவே எண்ணிவந்தேன். பிள்ளையவாள், நீங்கள் மட்டிலும் என்றும் உமது உபசாரங்களை மறந்து விடுவதில்லை. போகட்டும் நான் வேண்டியதைத் துரிதமாய் கொடும். வட்டிக்கு ஆலோசிக்க வேண்டாம். உம் முடைய இஷ்டம் போலாகட்டும்.

கண.—"நான் என்ன அப்படி அற்ப கணக்கு பார்ப்பவனா? போகட்டும், பிரபு அவசரப்படுகிற படியால் நான் அவசியமாய் கூறவேண்டிய சில விஷ யங்களையும் விட்டு விடுகிறேன்" என்று சொல்லிக் கொண்டே எழுந்து ரூபாய்களை எடுத்து வந்து

கொடுத்து "பிரபு தயவிருந்தால் போதுமானது......
ஏன் தங்கள் காரியம்?"

சுகு.—"கூடிய சீக்கிரத்தில் முடிவாகிவிடும்"
என்று பதில் சொல்லிவிட்டு இவன் இதோடு விட்
டால் போதுமானது என்று எண்ணிக் கொண்டே
உள் நுழைந்தான்.

கணபதி ஐயா பிள்ளை எமன் அறியாது உயிர்
போகப் போகிறதில்லை. எல்லாம் பார்த்துக்கொள்
ளுவோம் என்று எண்ணிக்கொண்டே நீண்ட ஏப்
பம் விட்டு சுகுமாரன் போவதைப் பார்த்து இருந்
தார்.

காளிந்தியின் ஏக குமாரன் மாடிக்குச் சென்று
அங்கு நாம் முன் குறிப்பிட்ட விசாலமான அறையில்
நுழைந்தான். அங்கு உள்ளோர் யாவரும் விளை
யாட்டில் கவனம்செலுத்திக் கொண்டிருந்தபடியால்
இவனைக் கவனிக்கவில்லை. இரண்டொருவர் மட்டி
லும் கவனித்தார்கள். அவர்களில் சகிதன் என்ப
வன் ஒருவன். இவன் சுகுமாரனுக்குத் தோழன்.
இவனைக் காணவும் கண்ஜாடை காட்டி தன்னருகில்
வரும்படியாக தெரிவித்தான்.

சகிதன் சுமார் 40 வயதுடையவனா யிருந்த
போதிலும் சுகுமாரனை தன் உபசார வார்த்தை
களால் தோழமை கொண்டு ஒழுகுபவன். அவன்
கருத்த தேகமும் நீண்ட மூக்கும் ஒட்டிய தாடையும்
உடையவன். அவன் சிரசு பின்புறம் உயர்ந்து
மேடாக விளங்க அங்கு ஒரு சிறு குடுமியும் உடைய
வனா யிருந்தான். இவனைக் கண்டவுடன் இவன்
தனக்கு உதவி செய்யக்கூடும் என்று எண்ணிய படி

யால் சகிதன் சமிக்கை காட்டியதற் கேற்ப அவனண்டையில் சென்று அவனுக்கு உபசாரம் கூறி அவனிஷ்டப்படி பந்தயம் வைத்து சூதாட ஆரம்பித்தான்.

சகிதன் உதவியால் சிறிது நேரம் விளையாடிய போதிலும் சுகுமாரன் என்றும் விரும்பியாடும் சூதில் அன்று அவனுக்கு மனம் செல்லவில்லை. ஜெயமும் அபஜயமும் எண்ணுமலே சகிதன் இஷ்டப்படி விளையாடிக் கொண்டிருந்தான். சூதாடப் புகுந்தால தாய் இறந்ததாகச் செய்திவந்தபோதிலும் சவம் இப்படித்தானே போகும் பார்த்துக் கொள்ளுவோம் என்று சொல்லி சூதை நிறுத்தாது விளையாடுவார்கள் என்பது யாவரும் அறிந்த விஷயம், அப்படியிருக்க சுகுமாரன் மனம்மட்டிலும் அப்போது சூதில் நிலையவில்லை. சகிதன் சொற்படி ஒரு இயந்திரம் போல் விளையாடிக் கொண்டிருந்தவன் திடீரென்று எழுந்தான். சகிதன் அவனை ஆச்சரியமாக நோக்கினன்.

சுகு.—போதும். சகிதா, இன்று என் மனம் ஆட்டத்தில் செல்லவில்லை. கீழ் இறங்குவோமா?

சகிதன்.—ஏன்! வீட்டிற்குப்போகவா?...... ஏன் இவ்வளவுசீக்கிரம்? இன்று அவ்வளவு தோல்வி இராதென்றே எண்ணுகிறேன்.

சுகு.—நேசா, நான் இப்போது அந்த கணக்குப் பார்க்கவில்லை. கீழிறங்கி சற்று தாகசாந்தி செய்து வரலாமென்று எண்ணுகிறேன்.

சகி.—அப்படியானல் நானும் வருகிறேன்.

சுகு.—"நீ யில்லாமலா. வா போவோம்"

என்று இருவரும் எழுந்து மாடியைவிட்டு கீழிறங்கினார்கள். சகிதன் தன் தோழன் இருக்கும் நிலைமையை நோக்கி இவன் ஏதோ கலவரமுடையவனாயிருக்கிறான் என்று அறிந்துகொண்டான். இருவரும் கீழே வந்து, "பிரபுக்களுக்கு" என்று எழுதிய பலகை மாட்டியிருக்கும் அறைக்குள் நுழைந்தார்கள்.

அதனை நாம் ஒரு அறை என்று சொல்லக் கூடாது. சிறு அலங்கிருதமான வீடு என்று தான் சொல்லவேண்டும். அங்கு சென்றவுடன் சுகுமாரன் சுற்று முற்றும் பார்த்தான். மேஜையின் பேரில் வைத்திருக்கும சிறு மணியை யடிக்கவே ஒரு சிறுவன் ஓடிவந்தான். அவனைப பார்த்து "நாஙகள் வேண்டியதைக் கொடுத்துக் கொண்டிரு" என்று சொல்லி ஒரு பக்கமாய்ப் போடப்பட்டிருந்த சிறு மேஜையில் சகிதனோடு உட்கார்ந்தான்.

சுகுமாரன் சுபாவத்தில் தனியாக உண்பதிலும் குடிப்பதிலும் பிரிய மில்லாதவன். அப்படி இருந்தும் இன்று இருவருக்கு மட்டிலும் போடப்பட்டிருந்த தனித்த மேஜையில் உட்கார்ந்து தங்களுக்கு வேண்டியதைக் கேட்டுக் கொள்ளுவதைப் பார்த்து அவன் தோழன் ஆச்சரிய மடைந்தான் சுகுமாரன் உத்திரவுபடி சிறுவன் ஒரு புட்டி ஹௌஸ் ஆப் லார்ட்ஸ் (House of Lords) என்னும் விஸ்கி சாராயமும் சோடாவும் சில சிற்றுண்டிகளும் கொண்டு வந்து வைத்தான். இருவரும் அன்புடன் சாராய புட்டியைத் திறந்து குடிக்கவும் சிற்றுண்டியைத் தின்னவும் தலைப்பட்டார்கள்.

திடீரென்று சுகுமாரன் தன் தோழனைப் பார்த்து, "நண்பா, இன்று நான் உன்னை ஒரு ஆலோசனை கேட்க வேண்டியவனா யிருக்கிறேன்" என்றான்.

சசி.—ஒரு ஆலோசனையா? ஆயிரம் வேண்டு மானாலும் கூற பிரியப்படுவேன் ஆனால் நண்பா, நீ இன்று அவ்வளவு களிப்புடன் இருக்கவில்லை என்பதை ....

சுகு.—அது போகட்டும்......நண்பா, ஒரு காரியம் முடிவதற்கு ஒருவன் தடையாயிருப்பா னானால் அந்தக் காரியத்திற்கு என்ன செய்வது?

சசி.—என்ன? கேள்வி ஒரு விடுகதைபோல் இருக்கிறதே. ஏன் இவ்வளவு மர்மம்? திறந்து சொல்லுகிறதுதானே. ஒருவன் தடையாயிருப்பா னானால் அவனைத் தொலைத்துவிடுவது காரியசித்திக்கு உத்தமமான முறையாகும்.

சுகு.—தொலைத்து விடுவதா?

சசி.—ஆம்......அதுவென்ன காரியம்? என் னிடம் கூறவும் சந்தேகமுண்டா?

சுகு.—இல்லை சசிதா, நான் உன்னை அறியாதவ னல்ல. மேலும் நீ எனக்கு உதவி புரிய பின்வாங்க மாட்டாய் என்பதுதான் என் எண்ணம்.

சசி.—சந்தேகமில்லாமல் நான் உனக்கு உதவி புரிவேன். உனக்கு உதவி புரிவதில் என் ஜீவனை விடவேண்டுமானாலும் ஆலோசனை இல்லாமல் விட்டு விடுவேன்

சுகு.—நண்பா, உன் நேசத்தின் பாசத்தை நான் அறியாதவனல்ல. மேலும் நான் என்னும்

காரியமும் அவ்வளவு பெரிதல்ல.

சகி.—என்ன காரியம்?

சுகு.—நீ அறிவாயல்லவா?......நான் என் மாமன் மகளை விவாகம் செய்துகொள்ளப் போகும் விஷயம்......

சகி.—ஆம். அம்பாளிகை அம்மாள் உம்மை விவாகம் செய்துகொள்ள வேண்டியவள் என்பதை நான் அறிவேன்.

சுகு,—அதுதான் இப்போது......

சகி.—இப்போது என்ன? அசாத்தியமாய் முடிந்ததோ? அவள் உம்மை விவாகம் செய்து கொள்ள சம்மதிக்கவில்லையோ?

சுகு.—சம்மதமில்லாமலில்லை. ஆனால் எனக்கு ஒருவன் போட்டியாயிருக்கிறான்.

சகி.—உமக்கு போட்டியாகவா? அவன் யார்?

சுகு.—அவனா? ஒரு பிச்சைக்காரப் பயல், ஏதோ பிரபு என்று சொல்லிக்கொண்டானாம். வயிற்றுப் பிழைப்பிற்குக் கப்பலேறிச் சென்றவன் புயல்காற்றில் கப்பல் மூழ்கியும் பாழும் எமன் அவனைக்கொண்டு போகாததால் எனக்கு இகல( சேர்ந்தான்.

சகி.—என்ன ஆச்சர்யம்! அவள் அந்த கதி யற்றவனை நேசிக்கிறாளா?

சுகு.—அப்படி தான் எண்ணவேண்டியிருக் கிறது.

சகி.—அவன் எங்கே யிருக்கிறான்?

சுகு.—அடிவயிற்றில் பாம்புக்குட்டி இருப்பது போல என் வீட்டிலேயே இருந்து வருகிறான்.

சகி.—என்ன? உங்களுடைய போகி வாசத்திலா? நீர் அவனைத் துரத்தி விடுகிறதுதானே?

சுகு.—அதுதான் என்றால் கூடவில்லை. அம்பாளிகை அவன் மீது கிருபை பாராட்டுகிறாள்.

சகி.—அப்படியானால் எல்லாம் முடிந்துவிட்டது.

சுகு.—என்ன முடிந்துவிட்டது? இப்படி சொல்லுவதற்குதானா உன்னை ஆலோசனை கேட்டேன்?

சகி.—இல்லை யில்லை, நண்பா, அவனைத் தொலைத்துவிட்டால் எல்லாம் ஒழுங்காய் முடிந்துவிட்டது என்றுதான் சொன்னேன்.

சுகு.—அது எப்படி? அதுதான என்றால் கூடவில்லை என்று முன்னமே சொன்னேனே.

சகி.—"முடியாதா? பிரபு, நான் முடியாததை எல்லாம் முடிவு செய்கிறேன்............புட்டி காலியாகி விட்டது. மற்றொன்று கொண்டுவரும்படியாக ஏற்பாடு செய்யும். நான் அதற்குள் ஆலோசனை செய்கிறேன்" என்று சொல்லி சிறிதுநேரம் மௌனமாயிருந்தான். சுகுமாரன் சிறுவனிடத்தில் மற்றொரு புட்டியும் வேறுசிற்றுண்டிகளும் கொண்டுவரச் சொல்லவே சிறுவன் கொண்டு வந்து வைத்தான். சகிதன் புதிய புட்டியில் பாதி சாராயம் குடித்தவுடன் பேசத் தொடங்கினான். சுகுமாரன் கவனத்துடன் அவன் வார்த்தைகளில் செவி சாய்க்கலானான்.

சகிதன் தனது நீண்ட பிரசங்கத்தை முடிக்கும்போது மணி நாலாகி விட்டது. அவன் கூறிய விஷயத்தில் சுகுமாரன் உடன்பட்டிருந்த போதிலும் அவன் முகம் சந்தோஷக்குறி காட்டவில்லை. சற்று

நேரம் மௌனமாயிருந்து பிறகு தன் தோழனைப் பார்த்து, " சகிதா, நீ கூறிய காரியம் என்னால் செய்யக்கூடாதது......ஆனாலும் என் நன்மைக்காக அப்படிச் செய்யவேண்டியவனா யிருக்கிறேன்" என்று பெருமூச்சு விட்டு சொன்னான்.

சகி.—" நண்பா, உன் காரியம் செவ்வனே முடியவேண்டுமானால் நான் கூறியதுபோல் செய்து தான் ஆகவேண்டும்" என்று சொல்லி எழுந் தான். இருவரும் அந்த அறையை விட்டு வெளியே வந்தார்கள். அங்கு ஒருவரும் இல்லாதது கண்டு சகிதன் தன் உடையில் மறைத்து வைத்திருந்த ஓர் சிறு குத்துவாள் போன்ற ஆயுதத்தைச் சுகுமாரன் கையில் கொடுத்தான். சுகுமாரன் அதனைக் கையில் வாங்கும்போது அவன் கரம் நடுங்கியது. முகம் சல வைக்கல போல வெளுத்தது. இதனைக் கண்ட சகி தன் கோபங் கொண்டவனாக " என்ன ? ஏன் இப் படி நடுங்குகிறாய்? உன் போன்றவர்கள் கையில் இவ் வித விலையுயர்ந்த ஆயுதம் இருக்கத் தகாதுதான். அதனை என்னிடம் கொடுத்துவிடு" என்று சொல்லி அதனை அவன் கரத்திலிருந்து பிடுங்கப் போனான்.

உடனே சுகுமாரன சற்று திடங் கொண்டு, " இல்லை யில்லை, நான் பின் வாங்குவதில்லை, என்னி டம் அதனைக் கொடுத்து வை" என்று சொல்லி உடனே அந்த அழகிய ஆயுதத்தைத் தன் ஆடைக் குள் மறைத்தான்.

சகி.—நண்பா, அதனைப் பத்திரமாக வை. அது விடம் தோய்ந்தது என்பது உன் ஞாபகத் தில் இருக்கட்டும். ஒரு சிறிது உன் தேகத்தில் படு

மானால் அதுவே உன் மரணத்துக்குக் காரணமா யிருக்கும்.

சுகு.—"ஆம். அதனை நீ எனக்கு முன்னமே கூறியிருக்கிறாய் இருக்கட்டும்" என்று நாக்குழறச் சொல்லி இன்ப நிலையத்தை விட்டு வெளியே போனான் சகிதன் அவனைப் பின்பற்றி வந்து சுகுமாரனைப் போகி வாசத்துக்குச் செல்லும் பாதையில் விட்டு, "பத்திரம்! பத்திரம்!" என்று கூறிப் போனான்.

சுகுமாரன் ஒரு புறம் கலக்கமடைந்தவனாகவும் மற்றொரு புறம் பொறாமை கொண்டவனாகவும் போகிவாசத் தோட்டத்தின் வழியாக மாளிகைக்குப போக அந்த தோட்டத்தின் கதவு வழியாக உள்ளே புகுந்தான்.

தோட்டத்தில் ஒரு புறம் போடப்பட்டிருந்த நீண்ட பலகையில் உட்கார்ந்து அம்பாலிகையும் இராஜகிரி மன்னனும் பேசிக்கொண் டிருந்தார்கள். இவர்களைக் கண்டவுடன் சுகுமாரன் முகம் சிவந்தது, உடல் குபீரென்று வியர்த்தது. ஒன்றும் தோன்றாதவனாக சற்று நேரம் அசைவற்று நின்றான். சிறிது நேரம் செல்ல அவர்கள் என்ன பேசிக் கொள்ளுகிறார்கள் என்பதை அறிய எண்ணங் கொண்டவனாகப் பாம்புபோல் தரையிலேயே நகர்ந்து வந்து அவர்களிருவரும் பேசிக்கொண்டிருக்கும் இடத்திற்கு சமீபத்திலுள்ள ஒரு செடி மறைவி லிருந்து அவர்களைக் கவனிக்கலானான்.



# 22 வது அத்தியாயம்.

## எதிர் பாராத ஆபத்து.

அம்பாலிகை அன்புடன் பேசுவதைக் கவனித்த இராஜகிரி மன்னன் கையில் வைத்திருந்த புத்தகத்தைப் பலகையில் வைத்து அவளுக்குப் பதில் கூறத் தொடங்கினான். நாகேந்திரன் மகள் வரேந்திரன் பலகையில்வைத்த புத்தகத்தைக் கையிலெடுத்து விரித்துப் பார்த்து நகைத்துக்கொண்டே, "ஏன் பிரபு, இப் புத்தகம் உங்களுக்கு அவ்வளவு பிடித்தமானதா யிருக்கிறதோ" என்று கேட்டாள்

வரே.—அம்பா, உன் தந்தை எழுதிய புத்தகத்தை நான் கண்ணுற்ற விஷயத்திலேயே பாக்கியம் பெற்றவனானேன்.

அம்.—பிரபு, நீர் எனக்காக அப்படி சொல்லுகிறீர்களா? அவர் கிறுக்கு எழுத்துகள் உங்களைச் சிரமப்படுத்தவில்லையா? அந்தப் புத்தகம் அழகிய அச்சு எழுத்துக்களில் இருக்குமானால் வாசிப்பதற்குக் கூடுமானதாயிருக்கும். நீர் இவ்வளவு பிரியப்படுகிறதால நான் அதனை அச்சிட முயலுகிறேன்.

வரே.—உன் தந்தை போன்ற மனிதர் இப்போது ஒருவர் இருப்பாரானால் நமது தேசம் ஒருபோதும் வறுமையில் வருந்தாது என்று நான் திட்டமாய்ச் சொல்லுவேன். அம்பா, நீ இஷ்டப்படுவாயானால் இந்தப் புத்தகத்தை எனக்குக் கொடு.

அம்.—நீர் விரும்பினால் அதனை அச்சிடுவித்தும் கொடுக்கிறேன்.

வரே.—உனக்கு அந்தச் சிரமம் வேண்டியதில்லை. நான் அதனை உபயோகிக்கும் முறைப்படி பிரயோகப்படுத்திக் கொள்ளுகிறேன். இக்காலத்தில் இதுபோன்ற அரிய நூல்கள் அச்சிடுவதற்கு யோக்கியதை உடையனவல்ல. பொது ஜனங்கள் வீண் கதைகளைப் படித்துக் காலத்தைப் போக்குகிறார்கள். இதுபோன்ற அரிய நூல்கள் அவர்கள் மனதைக் கவரமாட்டாது.

அம்.—பிரபு, நீர் அதனை எடுத்துக்கொள்ளும். அதனை எவ்விதத்தில் உபயோகப்படுத்திக் கொண்டபோதிலும் எனக்குச் சம்மதமே, என்றுசொல்லி புத்தகத்தை இராஜகிரி மன்னன் கையில் கொடுத்தாள் அப்போது அவள் கரம் வரேந்திரன் கரத்தில் பட்டது. அது சமயத்தில் அவள் மனம தடுமாற்றமடைந்தது. அந்த மாறுதல் அவளுக்கு எப்படி உண்டாகியது என்று அவள் அறியவில்லை. ஆனால் அவள் மனம் படபடத்து சற்றுநேரம் மௌனமாயிருந்தாள்.

இராஜகிரி மன்னன் புத்தகத்தை மடித்து பல கையில் வைத்துத் தன்னைச சுற்றியுள்ள பூந்தோட்டத்தின் விசேஷங்களைக் கவனிக்கலானான். அம்பாலிகை வரேந்திரனைப் பார்ப்பதும் பிறகு பூமியைப் பார்ப்பதுமா யிருந்தாள். சற்றுநேரம் நிச்சப்தமாயிருந்தது. கதிரவனும் மேற்றிசை நோக்கிச் சென்று கொண்டிருந்தான். பறவை இனங்கள் தம் தம் சேக்கையை நாடின. தென்றல் காற்று மகரந்தப் பொடிகளை வாரி இறைத்து நறிய மணத்தை எங்கும் பரப்பிக்கொண்டிருந்தது.

ஆழ்ந்த சிந்தனையில் அமிழ்ந்து கிடந்த வரேந்திரன் அங்கு வீசும் குளிர்ந்த காற்றினால் உற்சாகமடைந்திருந்த போதிலும் அவன் மனம் நிம்மதியாயிருக்கவில்லை. அவன் எதுபற்றி இவ்வளவு உருக்கமாக ஆலோசிக்க வேண்டுமென்பதை நமது வாசகர்கள் முன்னமே அறியாதவர்களல்ல அவன் காதலியின் கதியைப்பற்றி ஆலோசிக்காதிருக்க அவனால் கூடவில்லை. சற்றுநேரம் செல்ல மனம் தாளாதவனாக பெருமூச்சு விட்டான். நிசசப்தமான அந்நேரத்தில் அவன் பெருமூசசுவிடுவதே ஒரு பெரும் சப்தமாக இருந்தது

வரேந்திரனையே கருத்தாய்ப்பார்த்திருந்த அம்பாலிகை அவன் மனோ வேதனையைக் காணாதிருக்கவில்லை. இராஜகிரி மனனனின் கதியை உற்று நோக்கியவர் யார்தான் அவனுக்காக வருந்தாமல் இருக்கக்கூடும்? அவன விதி கல் மனத்தினரையும கரையச் செய்யுமல்லவோ? பிறர் வருத்தம் போக்க தான் வருந்தும் குணமுடைய அம்பாலிகை எபபடி அவன் படும் துயரத்தைக் கண்டு சகித்திருப்பாள்? அம்பாலிகை மனம் உருகியவளாக இராஜகிரி மனனனுடைய மோவாய் பிடித்து, "பிரபு? நீர் வருந்துவதைக் காண எனக்குச் சகிக்கவில்லை. உம்முடைய விருத்தாந்தம் யாவும் அறிந்தவளாகிய நான் உமக்கு எவ்வாறு தேறுதல் சொல்லப்போகிறேன்? ஐயோ! கொடிய கலி யாரை விட்டது? நீர் வருந்துவதில் பயனில்லை" என்று சொல்லி மேலே சொல்ல வகையறியாது திகைத்து நின்றாள்.

இவள் அரிய மொழியையும் அன்பான பார்வையையும் கண்ட வரேந்திரன் மறுபடியும் பெருமூச்செறிந்து, அம்பாலிகையைப் பார்த்தான். அவன் கண்களில் நீர் தாரை தாரையாய்ப் பெருகியது. இதனைக் கண்ட அம்பாலிகையின் மனம் தீயில் இட்ட வெண்ணெய் போல உருகியது. அவள் நெடுங் கண்களும் மழை துளிப்பதுபோல நீரைப் பெருக்கியன. இவர்களிருவரும் கண்ணீர் விடும் காட்சி ஒரு பரிதாபமானக் காட்சியாக விருந்தது. இளமையில் வறுமை அனுபவிப்பவர்களும் இப்படி வருந்தார்கள் என்று திட்டமாய்க் கூறலாம். ஆனால் இராஜகிரி மன்னன்தான் தனக்கு நேரிட்ட துன்பத்தை எண்ணி வருந்துகிறானென்றால் யாதொரு வருத்தமும் அறியாத அம்பாலிகை ஏன் வீணில் வருந்த வேண்டும் என்பதை வாசகர்கள் கேட்கலாம். அந்தக் கேள்வியை அவளையே கேட்கட்டும். அவள் போன்ற மனமுடையவர்களே அத்தகைய கேள்விக்குப் பதில் சொல்லக்கூடும்.

இராஜகிரி மன்னனுக்கு தன் துயரம் ஒரு புறமிருக்க அம்பாலிகை தன் நிமித்தமாக வருந்துவதைக் காணச் சகிக்கவில்லை. அவள் முகத்தைத் தன் புறமாகத் திருப்பி, “அம்பா! வருந்தவேண்டாம். ......மாதே, நீ ஏன் எனக்காக வருந்தவேண்டும்? ஐயோ! நானிழந்துபோன என் பிரிய மனைவி மரகதவல்லியின் குணம் உன்னிடத்திலு மிருக்கிறது...... ஆ! தேவா! தரும தேவதையானவள் இரண்டு பெண்ணுருவைத் தாங்கி இப்புவியில் வந்துற்றனளோ? நானறியேன்......அம்பா, நீ வருந்தவேண்

டாம். எனக்காக நீ எடுத்துக்கொண்ட பிரயாசைக்கு நான் உனக்கு நன்றி பாராட்டக் கடமைப்பட்டவன்.

அம்.—பிரபு, என்னை மன்னிக்க வேண்டும். நான் கைம்மாறு கருதி உங்களுக்கு உதவி செய்ய வில்லை......பிரபு? நான் உங்களைக் கண்ட நாள்முதல் என் எண்ணமெல்லாம் வேறுபட்டு விட்டது உங்களை நான் முதன் முதல் கண்டபோது நீர் சலவைக் கல் பாவைபோ லிருந்தீர். உம்மீது நான் இரக்கங் கொண்டு உமக்கு உதவி புரிய சம்மதித்திருந்தேன். ஆனால் நாளடைவில் இரக்கம் வேறாக மாறிவிட்டது. என்று சொல்லி பெருமூச்சு விட்டாள். அதற்கு மேல் பேச அவளுக்கு நாவெழவில்லை.

வரேந்திரன் அவள் பேசியதின் கருத்து என்ன வென்று ஆலோசிக்கலானான் அம்பாலிகையின் மனோபாவம் அவள் கண்களில் பிரதிபலித்துக்கொண் டிருந்தது. இராஜகிரி மன்னன் இதனைக் காணாது இருக்கவில்லை. அவள் எண்ணம் இவன் உள்ளத்தில் ஊசலாடிக்கொண்டிருந்தது. மரகதவல்லியின் ரூபத்தை வரேந்திரன் மறக்கவில்லை. அவன் பிரிய மனைவி யின் சாயல் என்றும் அவன் மனதுள் புதைந் திருந்தது. தன் அருகில் நிற்கும் மாதின் நோக்கத்தைப் பார்க்க இராஜகிரி மன்னன் தனது கண்களை அம்பாலிகை மீது செலுத்தினான். அவள் மழை மதர்த்த நீண்ட கண்கள் இவனை ஊடுருவிப் பார்த் தன.

அவள் பவள வாய் திறந்து, "பிரபு, நான் உம்மை நேசித்தேன்......நேசிக்கிறேன்......நேசிப் பேன்" என்று மொழிந்தாள். திடீரென்று ஒரு

சப்தம் கேட்டது. இவர்களுக்கு அருகே உள்ள புட்பச் செடி ஒடிந்தது. சுகுமாரன் கத்தியும் கையு மாய் ஆவேசத்துடன் வீரேந்திரன் பேரில் பாய்ந் தான்.

இராஜகிரி மன்னன் முகம் வேறுபட்டது. அவன் அஞ்சாத வீரனாயினும் திடீரென்று தோன் றிய சம்பவத்தில் ஒன்றும் தோன்றாதவனாகத் தன்னை நோக்கி வாளை ஓங்கிவரும் சுகுமாரனைப் பார்த்துக் கொண்டிருந்தான். தன்னைக் காத்துக்கொள்ளவும் அவன் யோசிக்கவில்லை பாம்பின் கண் பட்ட பறவைபோல அவனை விறைக்கப் பார்த்துக் கொண் டிருந்தான்.

ஆ! இதுவென்ன விபரீதம்! என்று கூறி அம் பாலிகை சுகுமாரன் கரத்தைப் பிடிக்க கை தூக்கி னாள். அதற்குள் சுகுமாரன் ஓங்கிக் குத்தினான். மின்னல் தோன்றி மறைவதற்குள் சுகுமாரனால் வீசப்பட்ட வாளில் இரத்தம் சொட்டியது. இராஜகிரி மன்னன் வீரிட்டுக் கத்தினான். துளித் துளியாக பூமியில் படியும் இரத்தம் சுகுமாரன் கண் களைக் கறைப்படுத்தியதுபோல ஓவென்று கூவினான். அவன் கண்கள் இறந்த ஆட்டின் விழிகளுக்குச் சமானமாய் இருந்தன.

மழை நீர்போல் சொரியும் இரத்தம் இராஜகிரி மன்னனிடத்திலிருந்து புறப்படவில்லை. அவனை அன்போடு போற்றி ஆதரித்த அம்பாலிகையின் கரத்திலிருந்து வடிந்தது. தெளிவாகக் கூறவேண்டு மானால், வாசகர்களே. நமது வீரேந்திரன் காயப் படவில்லை. அவன் மீது ஓங்கிய வாளை அம்பாலிகை

தன்கரத்தால் தடுத்தபடியால் சுகுமாரன் வீசியவாள் அவன் மாமன் மகளின் கரத்தில் விழுந்தது. தனக்கு மனைவியாக வாய்க்கவேண்டியவளைக் காயப்படுத்திய தால் சுகுமாரன் மருண்டு போனான். அவன் அவ ளுக்குச சொற்பகாயம் உண்டாகும்படி செய்ததற்கு மட்டிலும் அல்ல. அவள் கரத்தில் பட்ட சிறு காயம் அவளுக்கு பிராண ஆபத்தாய் முடியு மென்பதை சுகுமாரன் அறிந்திருந்தான்.

காளிந்தியின் மகன் கோபாவேசத்தால் செய்த காரியம் அவன் எண்ணியதற்கு மாறாக முடிந்ததைக் காணவே பயந்து போனான். அம்பாலிகை இறக்க நேருமானால் தன எண்ணமெல்லாம் நீர்மேல் குமிழி போலாகுமே என்று எண்ணும்போது அவன் தன்னை யும் மறந்தவனாக அந்த இடத்தை விட்டு தோட்டத் தின் வழியாகவே இன்ப நிலையத்தை நோக்கி ஓடி னான். அவன் சொற்ப அறிவும் நிலகுலைந்தது. அவ னுக்கு இனி என்ன செய்வதென்று ஒன்றும் விளங்க வில்லை. இரத்தம் தோய்ந்த விடவாள் அவன் கரத்தி லேயே இருந்தது. அந்தக்கொடிய வாளைத் தனக்குக் கொடுத்த சனிதனை நிந்தித்தான். அதனை அங்கு தரையில் போட்டுவிடலாமா என்று எண்ணினான். ஆனால் அந்த வாளை அழுத்திப் பிடித்திருந்த அவன் கை விரல்கள் அதனைக் கீழே போடச் சம்மதப்பட வில்லை. தலைவிரி கோலமாய் இன்ப நிலயத்தை யனு கினான்.

திடீரென்று சனிதன் அவன் முன் வந்து, "என்ன சுகுமாரா? இதுவென்ன கோலம்." என் றான். சனிதன் சுகுமாரனை விட்டுப்பிரிந்த நேரமுதல்

வீதியிலேயே உலாவிக்கொண் டிருந்தான். தன் தோழன் இவ்வித கோலமாய்த் திரும்பி வருவா னென்று அவன் எதிர் பார்க்கவில்லை. ஆனால் அவ னிடம் அவ்வித விலையுயர்ந்த தனது ஆயுதத்தை கொடுத்ததற்காக வருந்திக்கொண் டிருந்தான். அவன் வருந்தியதின் காரணம் காருண்யத்தினால் அல்ல. அவன் பிறருக்குத் தீங்குசெய்ய பின் வாங்கு வதே யில்லை. ஆனாலும் இப்போது அந்த வாளை சுகுமாரன் வசம் கொடுத்ததில் வருந்தினான். ஏனென்றால் சுகுமாரனுடைய அற்ப புத்தியால் தன் காரியத்தில் ஏதேனும் துன்பம் ஏற்பட்டு தன்னை எங்கே காட்டிக் கொடுத்துவிடப். போகிறானோ என்ற பயம்தான் அவனை இப்படி யோசிக்கச் செய் தது. இப்போது சுகுமாரனை இந்த நிலையில் காண வும் அவன் முகம் மாறியது.

சகிதனைக் காணவும் காளிங்கியின் மகன் திடுக் கிட்டு நின்று " அடா பாவி, என் குலத்தைக் கெடுத்தாயே !" என்று கூவினான்.

சகி.—என்ன விசேடம்? அவசரப்படவேண் டாம். சுகுமாரா, நடந்ததைக் கூறு.

சுகு —கூறுவதா ?......எல்லாம் இழந்தேன்.

சகி.—என்ன இழந்தாய் ?.........சுகுமாரா,எல் லாம் உன் மூடத் தன்மையால் ஏற்பட்டதாகவே யிருக்கும் என்று நான் எண்ணுகிறேன. என்ன நேர்ந்தது விளம்பு ?

சுகு.—நடந்ததா ?...... அவனைத் தொலைக்க எண்ணி அவனைக் குத்தினேன்.. என்று நடந்த விஷ யங்களை இரண்டொரு வார்த்தையில் கூறினான்

உடனே சகிதன் மனம் வேறுபட்டது. "உன் போன்ற முட்டாளுக்கும் நான் உதவி புரிய உடன் பட்டேனே. அதுவே எனக்குப் போதுமானது. முழு மகனே என் வாளை என்னிடம் கொடுத்துவிடு. நீ எக்கேடு கெட்டாலும் இனி எனக்கு ஆகவேண்டியதென்ன?" என்றான்.

இந்த வார்த்தைகளைக் கேட்டவுடன் சுகுமாரனுக்குக் கோபம் பிறந்தது. "அடா சகிதா, நீ என் குலப் பெருமையைக் கெடுத்து என் மானத்தைப் போக்கி குற்றவாளியாயுமாக்கிப் பிறகு என்னை முழு மகனே என்று ஏசவும் துணிந்தாயா?......

சகி.—துணிவதென்ன? முட்டாள் பயலே. உன் உறவும் கெட்டது நீயும கெட்டாய். என் வாளை என்னிடம் கொடுத்துவிட்டு எக்கேடு கெட்டாகிலும் போ, என்று சொல்லி சுகுமாரனை நெருங்கினான்.

காளிந்தியின் மகனுக்குக் கோபத்தால் மீசை துடித்தது, இரத்தம் பொங்கியது. தன்னை நெருங்கி வரும் சகிதன் மேல் வாளை ஓங்கினான். சகிதன் தந்திரமுள்ளவன். யாவற்றுக்கும் துணிந்தவன். தன் மேல் விழவரும் வாளை நோக்கினான். அவன் அப்படிச் செய்யக்கூடும் என்பதை முன்னமே ஆலோசித்து இருந்தபடியால் சுகுமாரன் கத்தியை ஓங்கும் போது அவன் கால்களைத் தட்டிவிட்டான்.

காளிந்தியின் மகன் வீரிட்டு பூமியில் மல்லாந்து விழுந்தான். அவன் முதுகில் இரத்தம் வெள்ளம் போல் பெருகியது. ஓங்கிய வாளுடன் மல்லாந்து விழுந்தபடியால் அவன் கரத்திலிருந்த வாள் அவன் முதுகில் பாய்ந்தது. சகிதன் குனிந்து சுகுமாரன்

கையில் பற்றியிருந்த வாளைப் பிடுங்கி அவன் ஆடையிலேயே துடைத்துவிட்டு சுற்று முற்றும் பார்த்தான். இருண்ட வேளையா யிருந்தபடியால் அங்கு ஒருவருமிருக்கவில்லை. விடம் தோய்ந்த வாளை தன ஆடையுள் மறைத்துக்கொண்டு தூரிதமாய் நடந்தான்.

குருதி வெள்ளத்தில் மூழ்கி வருந்தும் ஏழை சுகுமாரன் தனக்கு உதவி செய்யும்படியாக வேண்டினன். வானமும் கொடியவர்கள் மனம்போல கருத்திருந்தது. நட்சத்திரங்களும் கண்விழித்துப் பார்க்கப் பயந்து மேகத்துள் மறைந்து கொண்டன. கரிய மேகங்கள் தங்கள் ஆர்வத்தில் மின்னி இடித்து ஓடிக்கொண்டிருப்பதை விட்டு நமது ஏழை சுகுமாரனைக் கவனிக்கவில்லை.

காளிந்தியின் ஏக புத்திரன் விடவாளினல் காயம்பட்டு இரத்தக் கடலில் மூழ்கி ஆதரவறறுக் கிடந்தான்.

குருதி = இரத்தம்.



## 23-வது அத்தியாயம்

---

### இதுவென்ன காயம்?

இராஜகிரிமன்னன் சுகுமாரன் ஓடுவதை அசைவற்று நின்று பார்த்துக்கொண்டிருந்தான். அவன் செய்கை இவனை விசனப்படுத்தியது. கரத்தில் காயம்பட்ட அம்பாலிகையைத் திரும்பிப்பார்த்தான். அவன் சித்தம் தடுமாறியது. தன்னைக் குத்தவந்த வாளைத்தடுத்து அம்பாலிகையின் கரம் இரத்தக்கறை பட்டிருப்பதைக் காண அவனுக்கு மனம் சகிக்கவில்லை. தன்னை ஆதரித்த கரம் அறுபடுவதென்றால் யார் சகிப்பார்? மேலும் இப்போதும் தன்னைக் காக்கும் பொருட்டே அவள் அப்படி காயம்பட நேர்ந்ததைக் காணவும் வரேந்திரன் மனங் கலங்கியது. அருகில் நிற்கும் கன்னிகையைப் பரிதாபத்துடன் நோக்கினான்.

அம்பாலிகை இவன் பார்வையின் மனோபாவத்தை யறிந்தவளாக, "பிரபு, நீர் விசாரப்பட வேண்டாம். பேதைமையால் என் அத்தை மகன் உமக்குச் செய்ய எண்ணிய தீமையை மன்னிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்" என்றாள்.

வரே.—அம்பா, அவன் எண்ணியதுபோலவே என்னைக் குத்தி யிருப்பானானால் நான் ஒருபோதும் வருந்தேன். க்ஷத்திரிய குலத்தில் பிறந்த நான் வெட்டு, குத்து முதலிய இரத்தப் பெருக்கான காரியத்திற்குச் சலியாதவன். என்னை அன்புடன் ஆத

ரித்த உன் மெல்லிய கரத்தைச் சேதித்த விஷயமே என் மனதைப் புண்படுத்தியது.

அம்.—நீர் அதற்காக வருந்தவேண்டாம்...... உமக்காக என் ஜீவனையும் கொடுக்கப் பின்வாங்கேன் என்று திட்டமாய்க் கூறவும், வரேந்திரன் அவள் முகத்தை உற்று நோக்கினன். அவள் கண்கள் சுடர்விட்டு மின்னல்போல் பிரகாசித்தன, சற்று நேரம் அசைவற்று நின்று அவள் அழகிய வதனத்தை உற்று நோக்கிக்கொண்டிருந்தான். திடீரென அவன் காதலி மரகதவல்லியின் ஞாபகம் அவனுக்கு உண்டாகியது. தரும தேவதையே இரண்டு உருவு கொண்டு இம்மண்ணியில் வந்திருக்க வேண்டும் என்று தனக்குள் சொல்லிக்கொண்டே பெருமூச்சு விட்டான். இவன் நெட்டுயிர்ப்பெறி வதை அம்பாலிகையும் பார்த்துக்கொண்டிருந்தாள். அவள் காயம் அவனை வருத்தியதை விட இராஜகிரி மன்னனின் துயரம் அவனை அதிகமாக வருந்தச் செய்தது.

சற்று நேரம் அசைவற்று நின்றுகொண்டிருந்த வரேந்திரன் அம்பாலிகையின் இரத்தம் வடியும் கையைப் பார்த்தான். உடனே, "அம்பா, உனக்கு சிகிச்சை செய்ய வேண்டியதை மறந்து நாம் இப்படி இங்கு வீண்காலம் போக்குவது நன்றல்ல. மாளிகைக்குட் சென்றால் பண்டிதரை வரவழைக்கலாம். நாமே ஏதேனும் சமய சிகிச்சை செய்யவும் பிரயாசைப்படலாம்" என்றான்.

அம்.—வேண்டாம் பிரபு, நீர் அதற்காகப் பிரயாசைப்படவேண்டாம், என் காயம் அவ்வளவு

பெரிதல்ல. ஒரு சிறு கந்தை அதனைச் செம்மைப் படுத்தும் என்று சொல்லிக்கொண்டே சுற்று முற்றும் பார்த்தாள்.

வீரேந்திரன் அவசரமாகத் தன் அறையில் சுற்றியிருக்கும் ஆடையில ஒருபுறம் கிழித்து அம்பாலிகையின் கரததைப் பற்றி காயத்தைச் சுற்றிக் கட்டினான்.

அம்.—பிரபு, நீர் சற்று அவசரப்பட்டு உமது அழகிய மெல்லிய பட்டாடையை சேதப்படுத்திவிட்டீர். காயத்தைக் கட்டுவதற்கு ஒரு சிறு கந்தை போதுமானது.

வீரே.—"நாதியற்ற என்னை அன்புடன் ஆதரித்த உனது திருக்கரத்திற்கு எனது புல்லிய ஆடை அற்பமானதே. ஆனால் நான் படவேண்டிய காயத்தை நீ வாங்கியதற்கு நான் உனக்கு என்ன கைம்மாறு செய்யப்போகிறேன்" என்று சொல்லி மறுபடியும் பெருமூச்சு விட்டான். தன்னைக் கொடிய உக்கிரமசிங்கன் கையிலிருந்து காப்பாற்றிய சிறிய அழகுவிற்குக் கைம்மாறாக தான் செய்த உதவி என்னவென்று யோசித்தான். அவளை அன்புடன் மணம் புரிந்தும் இப்போது அவளை அவன் கையில்விட்டு தான் இங்கு காலம போக்குவதை எண்ணவே அவன் முகமாறியது. சிங்களமாதுவென கருதப்பட்ட அழகிய நங்கை தனக்குப் புரிந்த பணிவிடையும் பிறகு அவள் கருங்குயில் குன்றத்துக்கு வந்ததுவும் அவன் அவளை மணம்புரிந்ததுவும் இப்பொழுது அவள் அந்த கொடிய உக்கிரமசிங்கனால் கொண்டுபோகப்பட்டதுவும் அவனுக்கு ஒரு கனவுபோலிருந்தது.

இராஜகிரிமன்னன் தன் யோசனையில் அமிழ்ந்தினவனுக அசைவற்று பூமியைப் பார்த்துக்கொண்டு நின்முன். அம்பாலிகை அவனருகில் நின்றுகொண்டிருப்பதையும் அவன் கருதவில்லை. உலர்ந்த சருகுகள் காற்றினுல் சுலவுற்று மண்ணில்புரண்டு சப்தித்துக்கொண்டிருந்தன. வானத்தில் தாரையினங்கள் தோன்றித் தரையைப் புகழ்படுத்திக்கொண்டிருந்தன. வரேந்திரன் அம்பாலிகையின் காயத்தைக் கட்ட கிழித்த ஆடையின் மறுபாகுதியும் காற்றினுல் அசைந்துகொண்டிருந்தது.

தோட்டத்திற்கு வெளிபுறமுள்ள பாதையில் வேகமாய் வண்டி உருளும சப்தத்தைக் கேட்கவும் இராஜகிரிமன்னன திடுக்கிட்டுத் திரும்பிப் பாாத தான். அம்பாலிகை மருண்டபாா்வையுடன் இவனை நோக்கினுள். ''ஆ! இதுவென்ன அம்பா! ஏதோ வண்டி நமது போகிவாசத்தைக் கிட்டி வருகிறதென்றே சொல்லவேண்டும்......அது போகட்டும். நாம் ஏன் இதுவரையில் இங்கிருக்கிறேம்? மாளிகையுள் போவோமே'' என்முன்.

அம்.—ஆம்......ஆனுல் பிரபு, நான் உங்களை ஒன்று கேட்டுக் கொள்ளுகிறேன்............

வரே.—என்ன ?

அம்.—நான் காயம்பட்டதின் விபரத்தை அங்கு ஒருவரிடத்திலும் சொல்லக்கூடாது.

வரே.—ஏன் அப்படி ?

அம்—அதுவே என் பிரியம்...மேலும் பிரபு,... இம்மனிதன் எனக்குச்செய்த பிழையை நான் எண்ணவில்லை. அவன் பேதைமையால் செய்த காரியத்தை

வெளிப்படுத்தாதிருக்கவேண்டுமென்பது என் எண்ணம்.

வரே.—உன் காயத்தின் காரணம் யாது என்று கேட்டால் நீ என்ன கூறப்போகிறாய்?

அம்.—அது என் காரியம்.

வரே.—உன் விருப்பத்தின்படி ஆகட்டும்...... ஆனால் அம்பா, அந்தப் பித்தன் மறுபடியும்......

அம்.—இல்லை பிரபு, அவர் சுபாவத்தில் சாந்த குணமுடையவர் ஏதோ அவசரபுத்தியில் இப்படி செய்துவிட்டார். அவருக்கு மறுபடியும் அவ்வித ஆவேசம் வாராது நான் பார்த்துக்கொள்ளுகிறேன். நீர் கவலைப்படவேண்டாம்.

வரே.—நல்லது. அம்பா, உன மனதின்படி ஆகட்டும .....நான் இந்த இடத்திலிருந்துகொண்டு உனக்குத்தொந்தரை கொடுக்கமாட்டேன. நாளைக்கே இதைவிட்டுப் புறப்பட முயலுவேன.

அம்.—இதைவிட்டுப் போவதா?.. .......எங்கு போவது? என்று ஆத்திரத்துடன் கேட்டாள். வரேந்திரன், "என் வேலையாக" என்று சாந்தமாய்ப் பதில் கூறினன். அம்பாலிகை பதிலொன்றும் பேசவில்லை. வரேந்திரன் தன்னைவிட்டுப் பிரிந்துவிடப்போகிறான் என்று எண்ணும்போதே அவள் ஜீவன் அவளைவிட்டுப் பிரிந்துவிடும்போலிருந்தது. இராஜகிரிமன்னன் சாந்தமாய் அவளுடைய தோளில் கரத்தை ஊன்றி மாளிகையை நோக்கி நடக்கலானன். அம்பாலிகை அவனைத் தாங்கி பூமியைப் பார்த்த வண்ணமாகவே நடந்தாள். இருவரும் மாளிகையுள் நுழைந்தார்கள். வாசற்படியண்டை

யில் காளிந்தி அம்மாள் உட்கார்ந்திருந்தாள். இருவரையும் கண்டவுடன் எழுந்தாள். அம்பாளிகை கரத்தை முந்தாணியில் மறைத்து அவள் முன் சென்ருள்.

இதனைக்கண்ட அவள் அத்தை, "அம்பா, உன் மடியில் என்ன? புஷ்பமா?" என்று கேட்டாள்.

அம.—இல்லை அத்தை எனறு அவசரமாயப பதில் கூறினுள்.

காளி.—அப்படியாளுல் உன் கரத்திலென்ன?

அம்.—"கரத்திலா?......ஒன்றுமில்லை. அத்தை" என்று கூறித் தடுமாறினுள். அவள் கேள்விக்கு ஆம் என்று ஒரு பதில் கூறியிருப்பின் உத்தமமாயிருந்திருக்கும். அவள் பொய் உரைக்க எண்ணினும் உண்மையையே கூறப் பழகியிருந்த அவள் நா ஒரு பொய்யுரைக்கவும் இசையவில்லை.

இவள் தடுமாற்றத்தைக் கண்ட காளிந்தி அவளருகில் வந்து மடியைத் திறந்து பார்த்தாள். கரம் இரத்தம் தோய்ந்து வெண்பட்டினுல் கட்டப்பட்டிருந்தது. அருகில் நிற்கும் வரேந்திரனைப் பார்த்தாள். அவன் ஒருபக்கம் திரும்பியவண்ணமாய்ப் பூமியைப் பார்த்துக்கொண்டிருந்தான். அவன் ஆடையையும் கவனித்தாள். அவள் கண்கள் சிவந்தன. "என்ன அம்பா, இதுவென்ன காயம்? எப்படி உண்டாயிது?" என்று கேட்டாள்.

அம்.—இல்லை அத்தை, ஒரு ரோஜாமலரைக் கொய்கையில் முள்பட்டு இச்சிறுகாயம் உண்டாகியது.

காளி.—என்ன? சிறுகாயமா? உன் கரம் நீல நிறமா யிருக்கிறதே? அது ஒரு பலத்த காய மென்றே எண்ணுகிறேன் என்றாள். காளிந்தி நீல நிறம் என்று கூறும்போது அம்பாலிகை அதனைப் பார்த்தாள். ஆனால் அதன் காரணம் அவளுக்கு விளங்கவில்லை. இராஜகிரிமன்னனும் அதனைப் பார்த்தான். ஒருவேளை தான் அழுத்தமாய்க் கட்டியதால் அப்படி நேர்ந்திருக்குமோ என்று எண்ணிக்கொண்டான்.

காளி.—அம்பா, இதனை அலட்சியம் செய்யக் கூடாது. நமது பண்டிதரை வரும்படியாகத் தெரிவிக்கட்டுமா?

அம்.—வேண்டாம் அத்தை. அது ஒன்று மில்லை. இரண்டு நாட்களில் செம்மை பட்டுவிடும்.

காளி.—ஆராமலென்ன? வைத்தியர் * சந்தான கரணிகொண்டு கட்டுவாரானால் சீக்கிரம் ஆறும் என்றுதான் சொல்ல வந்தேன் என்று பேசிக்கொண்டிருக்கும்போது தாஸன் ஓடிவந்து, "அம்மா! அம்மா!" என்றான்.

காளிந்தி அம்மாள் திரும்பிப்பார்த்தாள். அவன் முகம் விகாரப்பட்டிருந்தது "என்ன விசேஷம்?" என்றாள்.

தாஸன்.—அம்மா, நமது எஜமானன்.........உங்கள் குமாரன் சுகுமாரப்பிரபுவை வண்டியில் கொண்டு வந்திருக்கிறார்கள் என்று விக்கத்தோடு மொழிந்தான்.

---

* சந்தானகரணி = துண்டிபட்ட உறுப்பைப் பொருத்து மருந்து.

காளி.—என்ன ! கொண்டுவந்திருக்கிறார்களா ! அவனுக்கென்ன ?

தா.—என்னமோ அம்மா, என்னால் சொல்லக் கூடவில்லை, நீங்கள் நேரில் வந்துபார்த்தால் நன்றாய்த் தெரியும் என்றாள் காளிந்தி துரிதமாக நடந்தாள். இராஜகிரிமன்னன் அம்பாலிகையைக் குறிப்பாய்ப் பார்த்தான். அவள் தன் அத்தையின் பின் நடந்தாளாயினும் அவள் அவ்வளவு சந்தேகிக்கவில்லை. குடித்த வெறியால்தான் முன் இராஜகிரி மன்னனைக் குத்தவந்தான் என்பது அவள் எண்ணம். இப்போதும் அவன் மயக்கத்தில் எங்கேயாகிலும் விழுந்திருக்கவேண்டுமென்று எண்ணினாள்.

மூவரும் வாயற்படி யண்டையில் செல்லும் போது இரண்டு தடித்த மனிதர்கள் சுகுமாரனை சுமந்துகொண்டு உள்ளே நுழைந்தார்கள்.

குருதிதோய்ந்த தன் மகனைக் காணவும் காளிந்தி திடுக்கிட்டுக் கூவினாள். அம்பாலிகை அசைவற்று நின்றாள். சுகுமாரனைச் சுமந்துவந்த ஆட்களில் ஒருவன் காளிந்தி அம்மாளைப்பார்த்து, "தேவி, இவரை எங்கு கொண்டுபோக விரும்புகிறீர்கள் ? நாங்கள் முதலில் இவரை பொது வைத்தியசாலைக்குக் கொண்டுபோக எண்ணினோம். பிறகு இவர் தங்களுடைய குமாரன் என்று அறிந்த மாத்திரத்தில் இங்கு கொண்டு வந்தோம்" என்றான். சுகுமாரனின் தாய் ஒன்றும் பேசமாட்டாதவளாக அசைவற்று நின்றாள். அவள் கண்களில் நீர் வடிந்தது.

இராஜகிரி மன்னன் அருகில் நிற்கும் தாஸனைப்

பார்த்து "மாளிகையில் எந்த அறை மேலானது?" என்று கேட்டான்.

தாஸன்.—உமமுடைய அறையே மேலானது.

வரே.—அப்படியானல் அங்குகொண்டுபோகட்டும் எனறு சொல்லி சுகுமாரனைத் தாங்கிவரும் ஆட்களைபபார்த்து "இவன் காட்டும் அறைக்கு கொண்டு போங்கள்,, என்று தாஸனைக் காட்டினன். தாஸன் முன்நடக்க இருவரும் சுகுமாரனைத் தாங்கி அவன் பின்னே போனர்கள்.

அழுது கொண்டிருந்த காளிந்தி திடுக்கிட்டு திரும்பிப் பார்த்தாள். அம்பாலிகை அசைவற்று நின்றுகொண் டிருந்தாள். அவள் கையில் காயம் பட்டிருப்பதும் தன் மகன் படுகாயப் பட்டிருப்பதும் காண அவளுக்குச் சந்தேக முண்டாகியது. கண்கள் சிவக்க தன் மருகியையும் வரேந்திரனையும் பார்த்தாள்.

இராஜகிரி மன்னன் அலட்சியமாக மறுபக்கம் திரும்பி நடந்தான். சுகுமாரனைக் கொண்டுபோனவர்கள் திரும்பி வந்தார்கள். காளிந்தி கோபத்துடன் தன் மகனைக் கொண்டுபோன அறையை நோக்கி நடந்தாள். அம்பாலிகையும் அவளைத் தொடர்ந்தாள்.



## 24-வது அத்தியாயம்

### பொறுமைப் பட்டவனுடைய அகோரமரணம்

முன் நாம் இராஜகிரி மன்னனைப் படுக்கையில் பார்த்த அறை இப்போது பிரகாசம் பொருந்திய விளக்குகளால் நிறப்பப்பட்டிருந்தது. ஏனெனில் முன் கரிய கடலில் குளித்தெழுந்த வரேந்திரனுக்குப் பதிலாக இப்போது செவ்விய இரத்தக் கடலில் மூழ்கிய சுகுமாரனைக் கொண்டிருந்தது.

நமக்கு முன்னமே அறிமுகமான மருத்துவர் அங்கு வந்திருந்தார். காளிந்தி கால்மாட்டிலிருந்து தன் மகனைப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் வருந்திய முகத்தினளாய் இருந்தாள் என்று நாம் கூறவும் வேண்டுமோ? அவளுக்கு அவன் ஏக புத்திரனல்லவா? மேலும் தன் குலத்திற்கு அவனையே முழுவதும் நம்பியிருந்தாள். பால்ய விதவை கணவனுக்குப் பிறகு தன்புத்திரனையே ஆறுதலாய்ப் பார்த்திருந்தாள். அவளுக்கு அவன் முதல் பிள்ளையாயும கடைப்பிள்ளையாயும் இருந்துவந்தான். சிறு பிராய முதல் கண்ணும் கருத்துமாய் வளர்க்கப்பட்ட தனது அருமை மகனுக்குத் தன் தம்பி புத்திரியை விவாகம் செய்வித்துக் கண்குளிரப் பார்க்கவேண்டுமென்று எண்ணியிருந்தாள். வெண்ணைதிரண்டு வரும்போது மத்து மொத்துண்டுடைந்ததுபோல அவள் அருமை மகனுக்கு ஆபத்து ஏற்படுமானால் அவள் மனம் எப்படியிருக்கும் என்பதை வாசகர்களே அறிய வேண்டும். காளிந்தி அம்மாள் தனது அருமைச் செல்

வன் ஸ்திரியைக் கண்டு அழுத கண்ணும் சிந்திய மூக்குமாய் இருந்தாள்.

அம்பாலிகை சுகுமாரன் தலைப் புறமாக நின்றிருந்தாள். அவன் மாசற்ற குணம் தனக்கு அவன் செய்த தீங்கையும் மறக்கச் செய்தது. அவன் காயம் பட்டதின் காரணத்தை அறியக் கூடாதவளாக அசைவற்று நின்று பார்த்துக் கொண்டிருந்தாள்.

பண்டிதர் பிணியாளன் தன்மையைக் கண்டு உணரும் முயர்சியில் இருந்து வந்தார். அவர் பரீக்ஷை செய்து கொண்டிருக்கும் போதே திடீரென அவர் முகம் மாறியது "ஆ! என்ன ஆச்சர்யம்! இவன் இரத்தத்தில் விஷம் கலந்திருக்கிறது. காயம் படு முன்னம் விஷம் ஊட்டப்பட்டானோ அல்லது காயம்பட்ட பிறகு விஷத்தைக் கொடுத்தார்களோ தெரியவில்லை. இவன் பிறரால் வஞ்சிக்கப்பட்டிருக்கிறான் என்பது உறுதி. காயம் சிறிதானாலும் உள்ளுக்குக் கொடுக்கப் பட்டிருக்கும் விஷம் கொடியதாயிருக்கிறது" என்றார்

இதனைக்கேட்ட காளிந்தி இடியோசை கேட்ட நாகம்போல் நடுங்கினாள். அவள் மெய் சிலிர்த்தது. "பண்டிதரே! இவனைக் காப்பாற்றும். என் உயிர் இவன் உடலில் இருக்கிறது" என்று கதறினாள்.

அம்பாலிகை ஒன்று மறியாதவளாக தன் அத்தையையும் பண்டிதரையும் மாறிமாறிப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

பண்டிதர்.—என் சாஸ்திர வல்லமை யாவும் இவன் விஷயத்தில் பலிக்காமல் போகுமோ வென்று

பயப்படுகிறேன். என்றால் கூடியதைச் செய்யாது விடப்போகிறதில்லை. முதலில் இவன் சுவாதீனத்திற்கு வருவானானால் பிறகு ஆகவேண்டியதைப் பார்க்கலாம். இவன் வாய்ப் பிறப்பில் காரியம் உணர்ந்த பிறகு நம்மால் செய்யக்கூடியதைச் செய்வது உத்தமமாகும் என்று சொல்லிக் கொண்டே *மிருத சஞ்சீவனி பிரயோகம் செய்யலானார்.

எங்கும் நிச்சப்தமாயிருந்தது. குருதி பருகும் சிறு கொசுக்கள் பறக்கும் சப்த முதலாய்த் தெளிவாய்க் கேட்டுக் கொண்டிருந்தது. சுகுமாரன் சிறிது கண் திறந்தான். அவன் கண்கள் நீல நிறமுடையனவாய் இருந்தன. சுற்றிலும் உள்ளவர்களை ஒருமுறை பார்த்தான். அவன் பார்வை பிறரைக் கண்டு பயங்கொள்ளும் நோக்க முடையதாயிருந்தது. தன் எதிரில் நிற்கும் வைத்தியரைக்காணவும் அவனுக்கு நினைவு வந்தது. கண்களைச் சுழற்றி மற்றும் ஒருமுறை சுற்றிலும் பார்த்தான். அம்பாளிகை தன் தலைப்புறமாக நின்றிருப்பதைக் கண்டான். அவன் முகம் மாறியது. வெண்ணிறம் கொள்ளவில்லை. ஆனால் கருகிய நிறம் கொண்டது.

இவன் செய்கை ஒவ்வொன்றும் உன்னிப்பாய்ப் பார்த்துக்கொண்டிருந்த பண்டிதர் மெதுவாய்த் தன் தலையைத் தடவிக்கொண்டார். பிறகு சுகுமாரனைப் பார்த்து, "உன் விஷயமாக நடந்தயாவும் இப்போது தெரிகிறதா?" என்று கேட்டார் அதற்குள் காளிந்தி அம்மாள் பரபரப்புடன் மருத்துவரைப் பார்த்து,

* மிருதசஞ்சீவனி = மூர்ச்சைதீர்த்து குற்று உயிர்தரும் மருந்து.

"பண்டிதரே, இப்போது அவன் உமது கேள்விகளுக்குப் பதில்கூறுவதைவிட அவனுக்கு நீர்செய்ய வேண்டிய யாவும் செய்வீராகுல் மிகவும் நலமாயிருக்குமென்று எண்ணுகிறேன்" என்ருள்.

இதனைக்கேட்ட பண்டிதர் முகத்தைச் சுளித்துக் கொண்டு, "அம்மா எனக்கு என் வேலை நன்ருய்த் தெரியும். அதற்கு உங்களுடைய ஆலோசனைவேண்டியதில்லை என்று எண்ணுகிறேன்" என்று பதிலுரைத்தார்.

இதற்கு அம்பாலிகை குளிர்ந்த முகத்துடன் பண்டிதரைப் பார்த்து, "பண்டிதரே, அத்தை சொல்லியதில் நீர் மனங்கலங்கவேண்டாம். அவர்கள் தன் மகன் மீதுள்ள பாசத்தாலும் சீக்கிரமாகக் குணப்படவேண்டு மென்கிற ஆவலாலும் அப்படி கூறுகிருர்கள். நீர் உமது கார்யத்தைக் குறைவில்லாது செய்வீராகுல் அவர்களும் மகிழ்ச்சியடைவார்கள்" என்று மணி யோசை போன்ற குரலுடன் மொழிந்தாள்.

பண்டிதர் முகம் வெட்கத்தால் சிவந்தது. தான் கடுமுகம் காட்டியதற்காக தன்னையே தான் கடிந்து கொண்டார். பிறகு சாந்தமாக அம்பாலிகையைப் பார்த்து, "தேவி, நான் என் கார்யத்தில் கவனமில்லாது இருப்பேனுகுல் என்னைப் பரிகாரி என்றழைப்பதைவிட மயிர்வினைஞன் என்றே கூப்பிடலாம். நான் என்ன அவ்வளவு அறிவில்லாதவனு ?.........மேலும் தாங்கள் என்குணத்தை நன்ருய் அறிந்திருக்கிறீர்கள். முன் உங்களுடைய பிணியாளனைக் குணப்படுத்தினபொழுதிலேயே நீங்கள் என்னை அறிந்திருக்கவேண்டும்.

இந்த அம்மாள் என்னமோ அறியாததன்மையால் பேசுகிருர்கள். அவர்கள் எண்ணுவதுபோல நான் அவசரத்தில் ஏதாகிலும ஒன்று விட்டு ஒன்று கொடுத்துவிட்டால பிணியாளனபாடு அதோகதி தான். அதற்காகவே நான் நோயின்தன்மை கண்டு ஔஷதம் கொடுக்க உத்தேசித்தப் பிணியாளனுடன் வார்த்தையாடத் துணிந்தேன். இவன் காயம் சாமானியமானதல்ல. ஏதோ ஒரு கொடிய விஷமும் உள்ளேயிருந்து வருகிறது. அதற்குத்தக்க பரிகாரம் செய்யவேண்டும். விஷத்திற்கு மாற்று கொடுக்க வேண்டுமானல் அந்த விஷம் இன்னதென்று முதலில் அறியப்படவேண்டும். ஏனெனில் ஒரு விஷத்திற்கு மாற்று மற்ருெரு விஷம். முதலில் கொடுக்கப்பட்ட விஷம் கண்டுபிடிக்கப்படாமல் பிறிது ஒரு விஷத்தை மாற்றாக எண்ணிக கொடுத்தல் இரண்டும் சேர்ந்து உடனே ஆளைக்கொன்றுவிடும். இதனை அறியாது அந்த அம்மாள் ஏதோ அவசரமாய்ப் பேசுகிருர்கள். ......மேலும் அவர்கள் எண்ணுவதுபோல வெளிக் காயத்தை ஆற்றவேண்டுமானல அது ஒரு பிரமாத மாகாது. சிறிது சல்லியகரணிவைத்து கட்டுவே ஞனல் விரைவில் குணமாகும். இப்போது இந்த மனிதன்ஸதிதியை நோக்கும்போது, வெளிக்காயத் தை ஆற்றமுயலுவது அவனைக்கொல்லும் முயற்சி யாகும்; என்று விடாது பேசத் துவக்கினர்.

அவர் வார்த்தைகள் ஒவ்வொன்றும் கேட்ட காளிந்தி வெருவாய் பயந்துபோனள். மறுபடியும் வாய்திறந்துபேச அச்சங்கொண்டாள்.

---

* சல்லியகரணி = வேல்தைத்த புண்மாற்றும் மருந்து.

அம்பாலிகை அவர் பேசசை அடக்க எண்ணி பிணியாளனை உற்றுப்பார்த்து, "பண்டிதரே, அதோ பாரும். பெருமூச்சு விடுகிறார். அதனைக் கவனியும்" என்றாள்.

உடனே பண்டிதர் குனிந்து நோயாளியைக் கவனிக்கலானார். அம்பாலிகை கூறியதுபோல சுகுமாரன் பெருமூச்சுவிட்டான். அவன் நிலை பரிதாபத்துக்குரியதாயிருந்தது. ஒளிமழுங்கிய பார்வையால் தன அம்மான்மகளைப் பார்த்தான். மறுபடியும் பெருமூச்சு விட்டான். பேசுவதற்கு வாய்திறந்தான் அவன் நா அண்ணரில் ஒட்டிக்கொண்டதுபோலிருந்தது. வார்த்தைகளொன்றும் புறப்படவில்லை. அவன் கருத்த கண்கள் அவளை ஊடுருவப்பார்த்தன.

சுகுமாரன் செய்கைகளனைத்தும் அவன் தாயைக் கலவரப்படுத்தியது. தன் மருமகளையும் மகனையும் மாறிமாறிப் பார்த்தாள். அவள் கலக்கமான எண்ணத்திற்குத் தக்கவாறு யாவும் அவளுக்கு விபரீதமாயிருந்தது. அவளுக்கு என்ன பேசுவதென்றும் என்ன யோசிப்பதென்றும் விளங்கவில்லை. கடைசியாகத் தன் மகன்மீதுள்ள பாசமே அவளை மேற்கொண்டது. சுகுமாரனைத் தன் கரங்களால் தழுவி, "மதலாய், உனக்கு என்னநேர்ந்தது விளம்பு? உன்னை யார் இப்படி வருத்தினார்கள்? மைந்தா! உன் ஸ்திதியை நினைக்கும்போதே எனக்கு துக்கம் மேலிடுகிறது. என் அருங் குழந்தாய்! உன்னை ஈன்றாள் மனம் தேறவாகிலும் வாய்திறந்து பேசு. உனக்குக் கொடிய விஷமும் கொடுக்கப்பட்டிருப்பதாகப் பண்டிதர் கூறுகிறாரே. அதுவென்ன

மாயம்" என்று அங்கலாய்த்துக் கேட்கவும் சுகுமாரன் பெருமூச்சு விட்டான். அவன் வாய் சில அர்த்தமில்லாத மொழிகளை வழங்கியது. அருகில் நின்றுகொண்டிருந்த மருத்துவர் அவன் நாவின் தன்மையைக் கவனித்தார் சுகுமாரன் நாவு கரிய நிறமுடையதா யிருந்தது. உடனே மனம் சலித்தவராகப் புஜத்தைக் குலுக்கினார்.

அம்பாலிகையின் முகம் வேறுபட்டது. "பண்டிதரே, என்ன விசேஷம்?" என்று மெதுவாய் விசாரித்தாள்.

பண்.—விசேஷமா?......எல்லாம் முடிந்தது.... என் முயற்சியாவும் பலனற்றதாய் முடிந்தது என்று சொல்லி வெளியேசெல்ல புறப்பட்டார்.

காளிந்தி, ஐயோ! என்று அலறினாள். அம்பாலிகை வெளியே செல்ல யத்தனிக்கும் மருத்துவரை குறுக்கிட்டு, "பண்டிதரே, எனக்காக நீர் இங்கிருகக வேண்டும். உண்மையைக் கூறும், என்ன விஷயத்தைக் கண்டு பின்வாங்குகிறீர்?" என்று கேட்டாள்.

பண்.—நான் என்னசெய்வேன். தேவி, என்னைப் போகவிடவேண்டும். இனி என்னால் ஒன்றுமாகாது, விஷம் தலைக்கு ஏறிவிட்டது என்று சொல்லி பிறகு மெதுவாய் "அவன் இன்னமும் ஒரு நாழிகைக்குள் இறந்துபோவான்" என்று கூறி வெளியே போய்விட்டார்.

காளிந்தி ஐயோ வைத்தியரே, என்று கதறி தன் மகனை வாரியெடுத்து மார்போடணைத்து, "அச்சோ -தமூலாய்! உனக்கு யாரடா இவ்விதக் கொடிய விஷத்தைக் கொடுத்தார்கள்? மைந்தா! வாய்திறந்து

பேசடா. என் செல்வக்குழந்தாய்! உன்னைக்கொல்ல யாருக்கு மனம் துணிந்ததடா? என் செல்வமகனே!" என்று பரிதவித்தாள்.

சுகுமாரன் கண்கள் மிரள மிரள விழித்துவானத்தைநோக்கின. அவன் வாயிலிருந்து இந்முறை தெளிவான வார்த்தைகள் கிளம்பியன. ஆனல் அவன் குரல் மெல்லிய சப்தமுடையதா யிருந்தது. அவன் கூறிய வார்த்தைகள் பின்வருமாறு த்வனித்தது :—

"என்னை ஒருவருமே கொல்லவில்லை. என்கொடிய பழக்கங்களே என்னை இக்கதிக்குள்ளாக்கியது. நான் கொல்லப்படவில்லை. ஆனல் நான் கொல்ல எண்ணியது உண்டு" என்று சொல்லும்போது பரிதாபத்துடன் தனது அம்மான்மகளைப் பார்த்தான். அவன் பார்வைகள் இரக்கத்தை உண்டாக்கின.

அமபாலிகை வருந்தினள். அவள் கரம் வருந்துவதை அவள் எண்ணவில்லை. சுகுமாரன் வருந்துவதைக் கண்டு வருந்தினள். அவள் ஏதோ பேச வாயெடுத்தாள். உடனே அடக்கிக்கொண்டாள்.

சுகுமாரன் கண்கள் அவளை நோக்குவதைவிட்டு அகலவில்லை. அவன அவளை இமைக்காது பார்த்துக் கொண்டிருந்தான். மறுபடியும் வாய்திறந்து, "நான் பேசுவதற்கு பலனற்றவனக இருக்கிறேன். உயிர் என் உடலைவிட்டுப் பிரியப்போகும் கடைசி நேரமாகிய இன்னேரத்திலாகிலும் என் வார்த்தைகள் நான் தீங்குசெய்தவர்களின் மன்னிப்பைக் கேட்கும் வாக்கியங்களாய் இருக்கவேண்டுகிறேன். என் ஜீவிய காலத்தை நான் வீணில்போக்கினேன் ..... போகட்டும். ஐயோ ! அம்பா, நான் உனக்கு செய்

குற்றத்தை மன்னி........ உன் தேகத்தின் இரத்தத் தாரைகளில் இரத்தத்தோடு விஷமும் ஓடிக்கொண் டிருக்கிறது..... பண்டிதரைப் போகவிடாதே...... என் குற்றத்தை மன்னிக்க ஈசுவரனைப் பிரார்த்தி. ஆ! என் ஆவி பிரிகிறது......அம்பா! காலதாமதம் செய் யாதே. உன்னைக் குத்திய கரம் என்னைக் கொன்று விட்டது. சீக்கிரம் என் ஆவி போகிறது...தேவா! உனது திருவடியில் என்னைச் சேர்த்தருள்" என்று கூறுவதற்குள் அவன் ஆவி பிரிந்தது.

காமினி "மைந்தா! மதலாய், சுதனே" என்று [illegible] மணற்கேணியின் நீர்போல அவள் துன்பம் எவ்வளவு பெருகியதோ அதன் அளவாக அவள் கண்கள் நீரைப் பெருக்கின.

அம்பாலிகை கண்ணீர் சொரிந்தாள். சுகுமாரன் கூறிய கடைசி வார்த்தைகள் அவள் புத்தியைவிட்டுப் போகவில்லை. ஆனால் அவன் கூறிய யாவும் அவ ளுக்கு செவ்வனே விளங்கவில்லை. அந்தப் பரிதாப மான இடத்தைவிட்டு வெளியே கிளம்பினான். அவ ளுக்கு முன் சென்ற பண்டிதர் போகிவாசத்தை விட்டு தன்வீட்டை அடைந்துவிட்டார். அம்பாலிகை முதலில் அவரைப்பார்க்க மனங்கொண்டாள். பிறகு ஒருவாறு மனம்செல்ல மெல்ல நடந்து தன் அறைக் குள் நுழைந்தாள்.

மாசற்ற அம்பாலிகை தன் அறையில் போடப் பட்டிருந்த சோபாவில் சாய்ந்தாள். அவள் அத்தை மகன் உயிர்துறந்தவிதம் அவள் கண்களிலேயேயிருந் தது. சுகுமாரன் கூறியகடைசிவாக்கியங்கள் இன்னமும் அவள் காதுகளில் ஒலித்துக்கொண்டிருந்தன.

## 25-வது அத்தியாயம்

### ஆ! அரசே, என்னை மறக்கவேண்டாம்.

அம்பாலிகை சோபாவில் சாய்ந்துகொண்டிருந்தாள். அவள் எண்ணம் பலவிஷயங்களை ஆராய்ந்துகொண்டிருந்தது. சற்றுமுன் இறந்துபோன தன் அத்தை மகனுக்காக வருத்தப்பட்டாள். ஆனால் அவள் அந்நேரத்தில் அவனைவிட வேறு ஒருவனைப்பற்றி சிந்தித்துக்கொண்டிருந்தாள். அவன்யார்? நமது இராஜகிரிமன்னனைவிட வேறு யாராய் இருக்கக்கூடும்? அம்பாலிகை வரேந்திரனுக்கும் சுகுமாரனுக்கும் இருந்த தாரதம்மியத்தைப் பற்றி யோசித்தாள். வரேந்திரன் இராஜகிரிக்கு மன்னனாய் இருப்பதால் அவனை அவள் உயர்வாக எண்ணவில்லை அவன் மேலான குணமும் அழகுமே அவனை சுகுமாரனுக்கு மேற்பட்டவனாக கருதச் செய்தது.

அவள் அத்தைமகன் அவளுடைய தளிர் நடையிலும் மழலைச்சொல்லிலும் ஒன்றாக இருந்து பழகியவன். சிறுபிராயமுதல் கூடி ஓடி ஆடி விளையாடியவன். பேதைப் பருவத்திலும் பெதும்பைப் பருவத்திலும் அவளுடன் இருந்துவிளையாடி உற்சாகப்படுத்தியவன். வரேந்திரனே சின்னாட்களுக்குமுன் தோன்றியவன். அன்னியன். அப்படியிருந்தும் அவன் சுகுமாரனைவிட அவள் மனதில் மிகுதியான இடம் சம்பாதித்துக்கொண்டானென்றால் அவனைப் பற்றி என்னவென்று சொல்லுவது?

அம்பாலிகை வரேந்திரனைப்பற்றி எண்ணிய போது அவள் மெய் புளகித்தது. நான் அவரை நேசிக்கிறேன். என்னையும் அறியாமலே இன்று நான் அவரிடம் அதுவிஷயமாகக் கூறிவிட்டேன். ஆ! நேசம்......நேசம். இந்த மூன்று எழுத்துக்களையுடைய சிறுவாக்கியம் என்ன மகிமையை மறைத்து வைத்திருக்கிறது: ஆ! நான் அவரை நேசிக்கிறேன். ஏன்?...... ..எப்படி?......என்னும் கேள்விகளுக்கு என்னால் பதில் சொல்லக்கூடவில்லை. ஆனால் அவரை நேசிப்பதை நான் அறிகிறேன் என்று தனக்குள் தானே சொல்லிக்கொண்டாள். தன்முகத்தில் முத்துபோல் வடியும் வியர்வையைத் துடைக்க கைதூக்கினாள். அவள் கரம் அவள் இஷ்டத்திற்கு இணங்கவில்லை. கரம் மரம்போலிருந்தது. அப்போதுதான் அவளுக்கு குத்துபட்டிருப்பதின் ஞாபகம் உண்டாகியது உடனே அக்காயத்திற்குக் காரணமாயிருந்த சுகுமாரனின் எண்ணம் உதித்தது. உடனே அவள் முகம் மாறியது. ஆ! என்ன மதியீனம்; இப்போது, என்வீட்டல் பெரியதொரு சாவு இருக்கையில் நான் என்ன நேசத்தைப் பற்றியும் இதன் ஆட்சியைப் பற்றியும் மனோராச்சியம் செய்கிறேன். என்ன பேதைமை! என் சிறு பிராயத்தில் தோழமை கொண்ட எனது அத்தை மகனிறந்துபோக நான் என்ன இப்படி அவரைப்பார்க்க மனமில்லாதவள் போல ஒதுக்கிடத்திலிருந்து வருகிறேன். நான் என்ன அவரை விரோதிக்கிறேனா?... விரோதமா?...அது ஒருபோதும் இல்லை. அவர் அறியாமையால் எனக்குச் செய்த தீமையை நான்

அப்போதே மறந்துபோனேன். இப்போது அவர் அருகிலிருந்து என் கடமையைச் செலுத்தவேண்டும் என்று தனக்குள் சொல்லிக்கொண்டே சோபாவை விட்டு எழுந்தாள்.

அவள் கால்கள் நிற்க பலமற்றவைபோல நடுங்கின. ஆனால் அதனை அவள் பொருட் படுத்தவில்லை. ஏகபுத்திரனைப் பறிகொடுத்த என அத்தை எப்படி வருந்துவார்கள். ஐயோ பாவம்! தாய் தந்தையர்களில்லாத நான் இறந்தாலும் பெரிதாக மாட்டாதே. அவருக்காக அவர்கள் படும துயரத்தைக் காண என் மனம் சகிககவில்லையே, என்று எண்ணிக்கொண்டே தன் அறையை விட்டு வெளியே வந்தாள்.

சுகுமாரன் சாகுந்தறுவாயில் தன்னை இரக்கமாய்ப் பார்த்து மொழிந்த வாக்கியங்கள் இப்போதும் அவள் காதில் ஒலித்தன. ஆ! அவர் சொல்லியது என்ன? தன் அறிவு சுவாதீன மற்ற நேரத்தில் கூறிய சில வாக்கியங்களாயிருக்கலாமோ? அவரைக் கொன்றது வெளியில்பட்ட காயம் அல்ல. உள்ளிருந்த விஷம் என்று பண்டிதர் கூறினார். சுகுமாரப் பிரபுவும் இறக்கும் தறுவாயில் அவரைக் கொன்ற விஷம் என் தேகத்திலும் ஓடிக்கொண்டிருக்கிறது என்று சொல்லியது என்ன? உண்மையாயிருக்கலாமோ?......சுகுமாரப்பிரபு கடைசி முறையாக என்னைப் பார்த்துக் கூறிய வார்த்தைகள் அவர் சுவாதீன மிழந்து கூறிய வார்த்தைகளாக எண்ண ஏதுவில்லை. அவருடைய கண்கள் சோர்ந்திருந்தபோதிலும் தெளிந்த பார்வையுடையனவாயிருந்தன. என்னைத் தன் குற்றங்கள் பொறுக்கும்

படியாகவும் வேண்டினார்......ஏழைமனிதர்! என்ன ஆச்சர்யம்! அவர் கூறியது உண்மையாயிருக்குமானால்?.....நான்—நான் என்று எண்ணும்போது அவள் கால்கள் சோர்ந்தன. உடல் நடுங்கியது. அப்படி நடுங்குவது பயத்தால் இருக்கக் கூடும் என்று எண்ணிக் கொண்டாள். திடீரென்று அவளுக்கு ஒரு எண்ணம் உண்டாகியது—அவர் என்னைக் குத்தியவாள் விடம்தோய்ந்ததா யிருக்குமானால்—என்று எண்ணும்போது அவள் தேகம் சிலிர்த்தது. மயிர்க்குச்செறிந்தது..... இல்லை, அப்படியிராது. இவ்வித சம்பவங்கள் வெறும்கற்பனைக் கதைகளில் தான் காணப்படுகின்றன. அவர் அவ்வித வாளை எங்கிருந்து சம்பாதித்திருக்ககூடும்?......ஆனால் இன்று அவர் கையில் கொண்டிருந்த வாள் அவருடையதல்ல......அது அவருக்கு எங்கிருந்து கிடைத்தது? ......உயிரைப் பருகும் அக்கொடிய கூற்றம் அவருக்கு எங்கிருந்து கிடைத்திருக்கும்?......ஓ! இந்த எண்ணம் என் புத்தியைப் பேதிக்கச் செய்கிறது. தெய்வமே! இனி என்ன நடக்கப்போகிறது? என்று தனக்குள் தானே யோசித்து வியர்வை வடியும தன் நெற்றியைத் துடைத்துக்கொண்டாள்.

அம்பாலிகை காயம்பட்ட தன் கரத்தை மற்றொரு முறை நோக்கினாள். சுகுமாரன் இறக்கும் போது அவன் உதடுகள் என்ன நிறம் கொண்டிருந்தனவோ அதே நிறம அவள் கரம் உடையதாயிருந்தது. அதனைக் காணவும் அவளுக்குப் பயம் உண்டாகியது. அம்பாலிகைக்கு இனி என்ன எண்ணுவது என்ன செய்வது என்று ஒன்றும் தோன்ற

வில்லை. அவள் கால்களும் நிற்கப் பலனற்றதாய் வளைந்து தாழ்ந்தன. உடனே மெதுவாய் ஊர்ந்து தன் அறைக்குள் புகுந்து சோபாவில் விழுந்தாள்.

இராஜகிரிமன்னன் சுகுமாரனைத் தன அறைக்கு கொண்டுபோகச் சொல்லி மறுபக்கமாய் நடந்தான் என்று நாம் முன்னம் கூறியுள்ளோம். வரேந்திரன் நடக்க பலனற்றவனாய் இருந்தபோதிலும மனோ திடத்துடன் நடந்தான். அவன் அந்த போகி வாசத்தை விட்டு வெளியில் போகவே முதலில் எண் ணினான் ஆனால் அவன் கால்கள அந்த மாளிகையை விட்டு வெளியே போக இசையவில்லை. அவன பல வீனமட்டிலும் அவனை அப்படிச செய்யத் தூண் டியதென்பதல்ல. அவன் மனமும் அப்படிச்செய்ய இசையவில்லை யென்றே சொல்லவேண்டும். வரேந் திரன் சிறிதுநேரம் அமைதியற்றவனாகமாளிகையைச் சுற்றி உலாவினான். அன்று மாலை பூந்தோட்டத்தில் அம்பாலிகை அவனிடம் கூறிய மொழிகள் அவன் மனதிலேயே இருந்தன.........அவள் என்னை நேசிக் கிறாள். 'மாசற்ற நேசம்' என்று தனக்குள்தானே சொல்லிக் கொண்டான். உடனே அவன் முகம் வேறுபட்டது. அவள் தன் வாக்கியத்தை முடிக்கு முன்னமே சுகுமாரன் கத்தியால் தன்னைக் குத்தியது அவன் மனதில் தோன்றியது. அந்த எண்ணம் அவன் இருதயத்தில் ஈயத்தைக் காய்ச்சி வார்த்தது போலிருந்தது. பெருமூச்சு விட்டான். முகத்தில் வடியும் வியர்வையை வழித்து நிலத்தில் தெரித்தான். —ஆ! கடைசியாக அந்த நிர்ப்பாக்கிய மூடனும் காயம்பட்டு வந்து சேர்ந்தான் என்று தனக்குள்

சொல்லிக்கொண்டே திரும்பினன். தலை சோர்ந்த வண்ணமாகப் பண்டிதர் போகி வாசத்தை விட்டு வெளியில் செல்லுவது அவன் கண்களுக்கு எட்டியன. மருத்துவர் செல்லும் நோக்கத்தைக் கண்ட வரேந்திரன் இவர் என்ன விரோதிக்குப் பயந்து புறங்காட்டிச்செல்லும் சுத்தவீரன்போல் செல்லுகிறரோ, இது வென்ன விபரீதம் என்று எணணினன். உடனே அவரைக் கூப்பிடலாம் என்று முன் நடந்தான். அவன் அப்படி அவரை நாடிசசென்றது காரியத்தை யறியும் நோக்கத்தினல் மட்டும் அல்ல. தன்னைக் காக்க தான் காயம்பட்ட அம்பாலிகையின் சமாசாரத்தை யறியவே அவன் வைத்தியரை நாடினன். அம்பாலிகை தன் காயத்தை அலட்சியம் செய்து அதுபற்றி கவனியாம லிருந்திருக்கக்கூடும். பண்டிதரைத் தான் கண்டு பேசி அவள் விஷயத்தில் கவனிக்கச் செய்யவேண்டும் என்று ஆலோசித்துக் கொண்டே மருத்துவர் சென்ற வழியே சென்று வெளியில் பார்த்தான். ஒருவரையும் காணவில்லை. வீதி ஒரே இருளாயிருந்தது. சிறு சப்தத்திற்கு அஞ்சி குரைக்கும் நாய்களின் சப்தமே அவன் காதுகளுக்கு எட்டியது.

இராஜகிரி மன்னன் சற்றுநேரம் அங்குமிங்கும் பார்த்துக் கொண்டிருந்தான். துஷ்டர்கள் மனம் போன்ற கரிய இருளைவிட வேறு ஒன்றும் அவனல் காணக்கூடவில்லை. திடீரென்று மாளிகையுள் அழும் சப்தம் கேட்கப்பட்டது. திடுக்கிட்டுத் திரும்பினன். காளிந்தி ஓலமிடும் குரலோசை அவன் செவிகளுக்குத் தெளிவாய்க் கேட்டது. அவன் இறந்தானே?

என்று தனக்குள் சொல்லிக்கொண்டான். பிறர் வருந்துவதை இங்கிருந்து பார்த்துக் கொண்டிருக்க நான் என்ன நிர்ப்பாக்கியனு யிருக்கவேண்டும் என்று எண்ணிக்கொண்டே சப்தம்வரும் அறையை நோக்கி வந்தான் அங்கு வாயற்படி யண்டையில் வந்து நின்று உள்ளே பார்த்தான். காளிந்தி தலைவிரி கோலமாகப் பிணத்தைத் தழுவி அணைத்து ஓலமிட்டுக் கொண்டிருந்தாள். ஆ! என்ன பரிதாபமான காக்ஷி! இப்போது நான உள் நுழைவேனுனல் அவளுக்கு எப்படி இருக்கும்? நான் சாகக்கிடந்த படுக்கையில் தன் மகன் செத்துக்கிடக்க நான் நின்று பார்த்துக்கொண் டிருக்கக்கண்டால் அவள் மனம் எப்படியிருககும்? என்று தனக்குள் சொல்லிக் கொண்டே அறைக்குள் நுழையாது வெளியில் நின்று பார்த்துக்கொணடிருந்தான்.

அம்பாலிகை அங்கு இல்லாதது அவனுக்கு ஆச்சர்யமாயிருந்தது. தன் பால்ய தோழனை ஒருகால் மறந்துபோனுளோ வென்று எண்ணினுன்......சீ! அப்படி அற்ப அன்புடையவள் அவளல்ல என்று தனக்குள் தானே சொல்லிக்கொண்டு மறுபடியும் தனது கண்களால் அறை முழுவதும் உற்றுப்பார்த்தான். அவள் எங்கே?......ஒருவேளை தன் கை வருத்தம் தாளாதவளாக தன் அறையிலேயே இருக்கிறுளோ என்று எண்ணினுன். அப்படியானுல்... அவள் என்று எண்ணிக்கொண்டே அவள் அறையை நோக்கி நடந்தான்.

எங்கும் நிச்சப்தமா யிருந்தது. பிணத்தை மூகர்ந்து ஊளையிட்டுத் திரியும் ஓநாய்களின் சப்தமே

தூரத்தில் கேட்டது. இராஜகிரி மன்னன் அம்பா லிகை அறையைக் குறுகினன். அவளோ சோபா வில் சாய்ந்த வண்ணமாக இருந்தாள். அவள் கரம் அவளது முகத்தை மூடி யிருந்தது. அம்முகமோ கரிய நிறமுடையதா யிருந்தது. "அமபா, என் இப்படி இருக்கிறாய்?" என்று கேட்டுக்கொண்ட அவ னுக்கு அருகே சென்று தரையில் முழந்தாளிட்டு அவள் முகத்தில் ஊன்றிய காத்தை தன கையால் விலக்கினன். மறுபடியும் "அம்பா!......அம்பா! உனக்கு என்ன வந்துற்றது?" என்று சகிக்கக் கூடாத துக்கத்துடனும் அன்புடனும் அனுதாபத் துடனும் கேட்டான். அவன் குரல் கம்மியது. "அம்பா!—என்னை அனபுடன் போற்றி ஆதரித்த காம் எங்கே? என்னை விருப்பத்துடன் உபசரித்த உனது மதுரமொழி எங்கே போயிற்று?......... அம்பா! உன் செவ்வறி படர்ந்த அழகிய கண்கள் எங்கே போயிற்று? அம்பா! என்னைப் பார்" என்று சொல்லி அவள் முகவாயை தனது காத்தால் தடவினன்

அம்பாலிகை மெல்ல கண் திறந்தாள். தன் னெதிரில் முழந்தாளிட்டிருககும வரேந்திரனைப் பார்த் தாள். இருவருடைய பார்வையும் சந்தித்தன...... ...ஆ! அவர்கள் பார்வைகளில் உண்டாகிய அன் பையும் அனுதாபத்தையும் என்னவென்று கூறுவது? ஒருநிமிஷம் இருவர் கண்களும் இமைக்காது ஒன்றை ஒன்று பார்த்துக் கொண்டிருந்தன. அம்பா, நீ என் இப்படி இருக்கிறாய்? என்று கேட்க வரேந் திரன் மெல்ல வாய்திறந்தான். ஆனல் அவன் வாயி

லிருந்து வார்த்தைகள் புறப்படவில்லை. இப்படி சற்றுநேரம் சென்றது.

அம்பாலிகை வரேந்திரனை எழுந்து தன்னருகில் உட்காரும்படி அனுதாபத்துடன சமிக்கை செய்தாள். இராஜகிரி மன்னன் அவள வேண்டுகோளுக்கு இணங்க எழுந்து அவளருகே உட்கார்ந்தான். சற்று நேரம் இருவரில் ஒருவரும் பேசவில்லை. திடீரென்று அம்பாலிகை வாய்திறந்து, "பிரபு, கடைசியாக உம்மைப் பார்க்கிறேன்" என்று மெல்ல கூறினாள். அவள் குரல் கம்மியிருநதது வரேந்திரன் திடுக்கிட்டான். "என்ன அம்பா, கடைசியாக வென்கிறாயே ?"

அம — ,,ஆம பிரபு, கடைசியாகத்தான். இனி நான் உம்மை இவ்வுலகத்தில் காணப்போவதாக எண்ணவில்லை......என் வேலை முடிந்தது.........நான் இவ்வுலகை விட்டு விண்ணுலகை யடையவேண்டிய காலம் கிட்டி விட்டது" என்று புகலும்போது வரேந்திரன," அம்பா !"என்று கூறி வேறு கூறாமலே அவளை உற்று நோக்கினன. அவள் முகம மாறியது. கண்களில் நீர் பெருகியது. அவள் ஏன் அழுகிறாள் என்பதை அவன் அறியவில்லை.

பிறகு அவளை அனபுடன் பார்த்து "அம்பா ! நீ ஏன் அப்படிக் கூறுகிறாய்? உனக்கு என்ன ?... ......" எனறான்.

அம்.—பிரபு, என்னை நமபவேண்டாம் ......... ஆம். என் வார்த்தைகளை நம்பும். நான் இனி வெகு நேரம் ஜீவிக்கப் போகிறதாக எண்ணவில்லை.

வரே.—அம்பா !......

அம்.—பிரபு என்ன செய்வேன்! நான் இனி உம்மை இவ்வுலகத்தில் காணவிட்டாலும் மறுலோகத்தில் காண்பேன். இம்மையில் காணுதுபோனாலும் மறுமையில் காண்பேன்......

வரே.—அம்பா, நீ இப்படி கூறுவதின் காரணம் என்ன? உனக்கு என்ன இப்போது அவ்வளவு பெரிய ஆபத்து ?..............அவ்வளவு பெரிய ஆபத்து வந்துற்றது.

அம்.—ஆபத்தா ?......இல்லை பிரபு என் உயிரைக் கொண்டுபோகும் காரணம் வந்துற்றது. என் தேகத்தில் விஷம் பரவி விட்டது.

வரே.— ஆ என்ன விஷமா ?............அம்பா! என்று கூவி வரேந்திரன் துடிதுடித்து எழுந்தான்.

அம்.—பிரபு, என்னை மன்னிக்க வேண்டும். அது எவ்வாறு நேர்ந்தது என்பதை என்னைக் கேட்க வேண்டாம்.

வரே.—அம்பா நீ கூறுவதொன்றும் எனக்கு விளங்கவில்லையே. உன் தேகத்திலா ? .....விஷமா ?

அம்.—ஆம், பிரபு, நான் எவ்வளவு அமைதியாய் இருக்கிறேன் என்பதைக் கவனியும்.........நீர் வீணில் வருத்தவேண்டாம்.

வரே.—அம்பா, நீ ஏன் அப்படிச் சொல்லுகிறாய்? தக்ஷணம் பண்டிதரைக் கூப்பிடச் செய்கிறேன்......

அம்.—வேண்டாம் பிரபு.........எல்லாம் முடிந்தது. நீர் வீணில் முயலவேண்டாம். என்முகம் கரியநிறம்கொண்டிருப்பது உங்களுக்கு விளங்கவில்லையா ?.........எனக்கு அது நன்றாய்த் தெரிகிறது.

அதோ அந்தக்கண்ணாடியில் என் உருவம் பதிந்திருக்கிறது பாரும் என்றாள். வஜ்ரேந்திரன் அம்பாலிகையை உற்றுநோக்கினான். அவள் கூறிய யாவும் உண்மை என்று அறிந்துகொண்டான். தன்கை விரல்களை முறித்துக்கொண்டான். இனி என்ன செய்வான்......சற்றுநேரம் அவளை உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தான். அம்பாலிகை பெருமூச்சு விட்டாள்.

கடைசியாக தன் மனோபலத்தால் வாய்திறந்து, "ஆ! அரசே......என்னை மறக்கவேண்டாம்" என்று கூறினாள். அதுதான் அவள் கடைசி மொழியாயிருந்தது.

அம்பாலிகை பிணமானாள்.



# 26--வது அத்தியாயம்

---

## இனி இந்த மாளிகையில் நமக்கு என்ன இருக்கிறது?

போஜகிவாசத்திற்கு வெளியில் மழை பெய்து கொண்டிருந்தது. மேகங்களால் நிறையப்பட்ட கருத்தவானம் மின்னி இடித்துக்கொண்டிருந்தது. எங்கே பார்த்த போதிலும் வானம் அழுதுவடித்த கண்ணீரென கால்வாய்கள் தோறும் ஜலம் ஓடிக்கொண்டிருந்தது.

மாளிகையுள் அம்பாலிகையின் அறையில் இராஜகிரிமன்னன் புன்கண்கூர்ந்து சவமாய்க் கிடக்கும் நாகேந்திரன் மகளை அழுகையில் சிவந்த தன் கண்களால் பார்த்துக்கொண்டிருந்தான். "என்னை மறக்கவேண்டாம்" என்று கூறி தன் மார்பை தொட்டுக்காட்டிய அவள் கரம் இன்னமும் என்னை மறக்கவேண்டாம் என்று கூறிக்கொண்டே இருப்பதுபோல அதேவிடத்தில் பதிந்திருந்தது. இதனைக்கண்ட வரேந்திரன் மனம் தடுமாறியது. தன் நெற்றியில் வடியும் வியர்வையைத் துடைத்தான். ஓ ஈசா! கடைசியாக அவள் என்னைப் பார்த்த பார்வை இன்னமும் என் கண்முன் நிற்கிறதே. அவள் கண்களை மூடிக்கொண்டாள். ஆனால் அவள் எனக்காக திறந்துவைத்த மனதை மூடிக்கொள்ளவில்லை. அவள் கரத்தை தன்மனதில் இருத்தியதின் தன்மையை இப்போதுதான் அறிகிறேன். தேவா!

—என்ன அன்பு! அவள் என்னை * நினைக்கவில்லை ......அவள் என்னை மறக்கவில்லை ஆதலால் அவள் என்னை † நினைக்கவுமில்லை.

ஓ! அழகிய மாதே! என் வாய்மொழி உன் மாசற்ற செவிகளில் புகவொண்ணாது என்றெண்ணியோ? உன் காதுகளின் கேட்கும் சக்தியை நீ எடுத்துக்கொண்டு போய்விட்டாய்.........ஆ நான் சபிக்கப்பட்டவன். என் துரதிஷ்டமே அவளைக் கொன்றுவிட்டது. மேலும் என்னை நேசிக்கிறேன் என்று மாலை தெரிவித்தாள். இதோ சவமாயிருக்கிறாள். என்னை அன்புடன் காதலித்த என் மனைவி. மரகதவல்லி, நான் அவளை மணம் செய்துகொண்ட மாலையே களவாடப்பட்டாள். என்ன நிர்ப்பாக்கியம். ஆ! தேவா! நான் பாவியாயிருப்பேனாகில் என்னைத் தண்டியும். என்னை நெருங்கி வருபவர்களை உபத்திரவம் செய்யவேண்டாம். என் நிர்ப்பாக்கியம் பிறர் வருத்தத்திற்கு காரணமாயிருக்கவேண்டாம் என்று தனக்குள் சொல்லிக்கொண்டே பிண

* அவள் என்னைவிட்டு இறந்துபோனாள். ஆதலால் என்னை நினைக்கவில்லை என்பது கருத்து.

† மறந்த பொருளையே நினைக்கவேண்டுமாதலால் அவள் என்னை மறக்கவில்லை. ஆதலால் நினைக்கவுமில்லை என்பது கருத்து......இதனை

"உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியே
னொள்ளமர்க் கண்ணாள் குணம்."

"உள்ளினே னென்றேன்மற் றென்மறந்தீ ரென்றென்
புல்லாள் புலத்தக் கனள்." [னைப்

என்னும் செய்யுட்களாலறிக.

மாய்க் கிடக்கும் அம்பாலிகையை மறுபடியும் பார்த்தான். அவன் மனம் பழையஞாபகத்தாலும் புதிய சம்பவத்தாலும் அலக்கழிக்கப்பட்டு ஒன்றும் தோன்ருதவனாக அழுதுகொண்டே யிருந்தான். திடீரென்று ஒருக்களித்து வைக்கப்பட்டிருந்த கதவுதிறந்தது. காளிந்தி உள்ளே வந்தாள்.

அவள் முகம் வாடியிருந்தது, குழல் சோர்ந்திருந்தது. அந்த அறைக்குள் நுழையும்போது அவள் முகத்தில் கவலைக்குறிமட்டிலும் அல்லாது கலவரக்குறியுமிருந்தது. உள்ளே வந்தவுடன் வரேந்திரனைப் பார்த்தாள். அவள் முகம் வெளுத்தது. பிறகு தன்மருமகளை நோக்கவும் பயந்து அலறினள்.

இராஜகிரி மன்னன் நிமிர்ந்து பார்த்தான். அவள் கோலம் உண்மையில் பரிதாபப்பட வேண்டியதாயிருந்தது. அவள் பார்வை இவனுக்கு எப்போதும் பிடிக்கிறதில்லை என்ருலும் இந்தவேளை அவளுக்காக அனுதாபப்பட்டான். ஆனல் அவளிடத்தில் இப்போது என்ன கூறுவது என்று அறியாதவனாக சற்று கலங்கினன்.

காளிந்தி ஆத்திரத்தோடு "என்ன?......அவளுக்கென்ன" என்று கேட்டாள். அவள்மொழி வரேந்திரன் காதுகளுக்கு அவ்வளவு இனிமையாயிருக்கவில்லை. ஆனலும் அவளுக்குப் பதில்கூருமலிருக்கவும் கூடவில்லை. "அவளுக்கா"......என்று வாய் திறந்தான். வேறுசொல்ல அவனல் கூடவில்லை. இறந்தவள் தனக்குக் காட்டிய அன்பும் அனுதாபமும் அவன்மனதில் தோன்றி அவன் வாயைமூடிவிட்டது.

காளிந்தி விகார முகம் கொண்டவளாக தன்

மருமகளை அணித்து கூர்ந்து பார்த்தாள். ஆ! அவள்! என்று பரிதாபமான குரலோடு கத்தினாள்.

வரே.—ஆம். அவள் இறந்துபோனாள் அவள் சற்குணமே அவளைக் கொன்றுவிட்டது என்று கூற வேண்டும்..........

காளி.—முடிந்தது. முடிந்தது. முடிந்துவிட்டது.

வரேந்திரன் பெருமூச்சுவிட்டு, "சற்குணமுடையவர்களுக்கு இவ்வுலகம் பிடித்தமானதல்ல அவர்களை இக்கொடிய உலகம் வெகுகாலம் ஜீவிக்கச் செய்கிறதில்லை........."

காளி.—"என்ன இப்போது நீர் நீதிசாஸ்திரம் ஓதுகிறீர்? என் மருமகள் இறந்ததின் காரணம் உரைக்கவேண்டு மென்பதை நீர் மறந்தீரோ?" என்று வெறுப்போடும் கேட்டாள்.

வரேந்திரன் முகம் மாறியது. அவள் கேட்ட விதம் அவனுக்குக் கோபத்தை உண்டு பண்ணியபோதிலும் உடனே தன் சீற்றத்தை அடக்கிக்கொண்டான். அம்பாலிகையின் விஷயமாக அவள் அத்தைக்குப் பதில் கூறவேண்டிய நியாய மிருக்கிறது என்பதை உணர்ந்தவனாக, "அவள் இறந்ததின் காரணம் அவ்வளவு சுலபமாய் அறியக் கூடியதல்ல. ஆனால் அவள் இக்கொடிய உலகத்தில் வசிக்க இணங்காது இறந்துபோனாள் என்பது பொருந்தும்" என்று சாந்தமாய்ப் பதிலுரைத்தான்.

காளி.—என்ன? அவள் தற்கொலை செய்துகொண்டாள் என்று நீர் சொல்லுகிறீரா?

வரே.—இல்லை. அப்படி நான் எண்ணவுமில்லை.

காளி.—அப்படியானல் ?

வரே.—அப்படியானல்......அவள் மரணத் தறுவாயில் நான் இங்குவந்தேன். அவள் கூறிய கடைசி மொழிகள் மட்டிலும் என் காதுகளுக்கு எட்டின. ஏதோ கொடிய விஷத்தில் மாண்டு போவதாகக் கூறினுள். அவள் அதன் விவரத்தை விளக்க மனங்கொள்ளவில்லை..........*...அதிகம் வளர்த்துவானேன். அவள் விஷத்தினல் இறந்துபோனுள்.

இவையாவும் கேட்ட காளிந்தி வெடி ஓசை கேட்ட பறவைபோல நடுங்கினுள் ஆ விஷமா......! இருவருமா!......என்னமோசம்! அவள்......அவன் ......என்று அர்த்தமில்லாத வசனங்களை வழங்கிச் சவமாய் கிடக்கும் தன் மருமகளை நோக்கினுள். அம்பாலிகையின் முகம் கறுத்திருந்த போதிலும் புன் சிரிப்பு தவழ அழகிய தோற்ற முடையதாய் காணப் பட்டது. அவள் இளமையும் அழகிய வதனமும் கல்மனதி னரையும் கலங்கச் செய்யும் தோற்றத்தைக் கொண்டிருந்தது. சவமாய்க்கிடக்கும் தன் மருமகளைப் பார்ப்பதைவிட்டு காளிந்தி வரேந்திரனை வெறுப் புடன் நோக்கினுள். அவள் எண்ணம் வேறு விதமாய் மாறியது. கோபத்துடன் பார்த்தாள். இவள் பார்வையைக் காணச் சகியாத வரேந்திரன் அலட்சியமாக மறுபக்கம் திரும்பினுன். “ஆ! இந்த மனிதன் வீட்டில் கால் வைத்த நாள் முதல் என் குடித்தனம் சீர் குலைந்து விட்டது” என்று வெறுப்போடு சொன்னுள்.

இதனைக்கேட்ட இராஜகிரி மன்னன் மனம் தடுமாறியது. முகம் சிவந்தது. வருத்தம் ஒரு புறமும் கோபம் மற்றொரு புறமும் தலைகாட்டியது. “அப்

படியா? மகனுக்கு ஏற்றதாய் நீ என்று நான் இது காறும் அறியாமல் போனேன். அதுவும் என் பிழை தான்" என்றான்.

காளி.—என் மகனைப்பற்றி என்ன? என்று இடி யோசை போல் முழங்கி "ஆ, நிர்ப்பாக்கிய பாவி! சகல கஷ்டங்களும் உன்னால் ஏற்பட்டதே........... உன்னை வீட்டில் சேர்க்கவேண்டாமென்று நான் பல முறைக் கூறியும் அவள் கேட்கவில்லை.........ஐயோ! இவ்விதம் சம்பவிக்குமென்று நான் முன்னமே அறிந் திருப்பே னானால்..........." என்று சரமாரி பேசிக் கொண்டே யிருந்தாள்.

இராஜகிரி மன்னன் கோபத்துடன் எழுந்தான். அவள் அறிவில்லாது பேசுவது தன் கோபத்தை மூட்டுவதாய் இருந்தபோதிலும் நிர்ப்பாக்கிய முள்ள அந்த ஸ்திரீயை கடிந்து பேசவும் வேறு செய்யவும் அவனுக்கு இஷ்டமில்லை. பிறகு அங்கு நிற்கவும் அவனுக்கு மனமில்லை. அறையைவிட்டு வெளியே. வந்தான். சீ, இனி இந்த மாளிகையில் நமக்கு என்ன இருக்கிறது?......அவளும் போய்விட்டாள் என்று தனக்குள் சொல்லிக் கொண்டே போகி வாசத்தை விட்டு வெளியே வந்தான். மணிழையும் நின்று விட்டது. படியிறங்கிப் பாதையில் வந்த வுடன் திரும்பிப்பார்த்தான். இறந்து போன அம் பாலிகையின் அழகிய வதனம் அவன் கண் முன் தோன்றுவது போலிருந்தது. அவள் நம்மைக் கருணையோடு பாதுகாத்தாள். அவளுக்கு அந்திய கிரியை முடிக்காது வெளியில் போவதா? என்று தன துள்ளத்தை கேட்பவன்போல தனக்குள் சொல்லிக்

கொண்டான். அவளே இறந்து போனாள் இனி அவளுக்கு வேண்டிய கிரியை செய்தாலென்ன செய்யாவிட்டாலென்ன என்று தனக்குள் தானே சமாதானம் சொல்லிக் கொண்டு பாதையில் நடந்தான்.

சற்று முன் மழை பெய்ததால் வீதி யெல்லாம் சேராய் இருந்தது. அம்பாலிகையை விட்டுப் போகிறோமே என்று எண்ணும்போது அவனால் நடக்கக் கூடவில்லை, கால்கள் நடுங்கின. தன் மனைவி மரகத வல்லியின் எண்ணம் தோன்ற ஆ! அவளை மீட்டுவர வேண்டும். என்னைக் காணாது அவள் உயிர் தரித்திருப்பாளோ ?......ஓ!நான் எப்படியும் அவளைக் காண்பேன்? என்று தனக்குள் சொல்லிக் கொண்டான். அவன் பிரிய மனைவியின் ஞாபகம் அவனுக்கு பலம் கொடுத்தது. தளர்ந்த தேகத்தையும் மனோ வல்லமையால் திடப்படுத்திக் கொண்டு நடந்தான்.

இப்போது எந்தத்திக்கை நோக்கிச் செல்லுகிறோ மென்பதை அவகா அறிய வில்லை. அவன் எண்ணிய தெல்லாம் தன் காதலி மரகதவல்லியே. கால்களில் சேர்படிய துரிதமாய் நடந்தான், சுமார் ஒருமணி நேரம் நடந்தபிறகு எங்கே போகிறோ மென்று ஆலோசித்தான். அவ்வூர் அவனுக்குப் புதிதாகையால் இவனுக்கு ஒன்றும் விளங்கவில்லை, நாம் எந்தத்திசையை நோக்கிச் செல்லுகிறோம் என்று அறியக் கூட வில்லையே எனவே எண்ணியவனாக சுற்றுமுற்றும் பார்த்தான், வீதி இரு புறத்திலும் சிறு வீடுகள் மட்டிலும் இருப்பதாக அறிந்து கொண்டான். இப்போது நாம் ஊரின் கடைபுறம்

வந்து விட்டோம் என்று தனக்குள் எண்ணிக் கொண்டு வீதியின் கோடியில் ஒரு சிறு வெளிச்சம் காணப்படுவதைக் கவனித்தான்.

அவன் அந்த வெளிச்சத்தை நோக்கிச் செல்ல அது ஒரு பழமையான சத்திரமாக விருந்தது. பற் பல தேசாந்திரிகளும் அங்கு தங்கி யிருந்தார்கள். வரேந்திரன் நேராகச் சத்திரத்துள் நுழைந்து கம் பீரமாக நாற்புறமும் நோக்கினன். அப்போது ஓர் வயோதிக அந்தணன் அவனருகில் வந்தான்.

வரே.—நீர்தான் இச்சத்திரத்தில் இருப்பவரோ என்று தெளிவாய்க் கேட்டான்.

அந்தணன்.—ஆம். நான் வெகுகாலமாக இதி லேயே வசித்து வருகிறேன். என் கைபாகத்தை உருசிபார்த்த வழிப்போக்கர்கள் பலரும் என்னைச் சிலாகித்துப் பேசுவார்கள்.

வரே.—நல்லது அந்தணரே, இப்போது எனக்கு சிறிது சூடான தேயிலை பானம் கொண்டு வாரும்.

அந்த.—ஏன்? சாப்பிட வில்லையா? உம்மைப் பார்த்தால் பசியால் மெலிந்தவர் போல காணப் படுகிறீரே.

வரே.—வேண்டாம்.........எனக்குச் சாப்பாடு வேண்டாம். நான் வேண்டியதைக் கொண்டு வாரும். பிறகு நீர் எனக்கு உதவிசெய்யக்கூடுமானல்.

அந்த.—அநேகம் ......நீர் வேண்டியதை இதோ கொண்டுவருகிறேன். ஏன் நீர் விரும்பினல் தனி அறையில் உமக்கு யாவும் சித்தப்படுத்துகிறேன்.

வரே.—ஆம். ஓர் தனி அறை மிகவும் நல்லது.

அக்.—அப்படியானால் என்னோடு கூட வாரும் என்று முன் நடந்தான். வீரேந்திரன் பின்னே சென்று அந்தணன் குறித்த அறைக்குள் நுழைந்தான். அங்கு ஒரு சிறு கட்டிலும் மேஜை நாற்காலியும் மற்றொரு சாய்வான நாற்காலியு மிருந்தன. இராஜகிரி மன்னன் அலுத்தவனாக சார்வான நாற்காலியில் சாய்ந்தான்.



# 27-வது அத்தியாயம்

பொன் சங்கிலி நாணயமாவது

அந்தணன் இராஜகிரி மன்னனுக்குத் தேயிலை பானம் கொண்டுவரும்போது மணி பதினென்றடித்தது. சூடான தேயிலை பானம் உள்ளுக்குப் போகவே வரேந்திரனுக்குப் புதிய எண்ணங்கள் உண்டாயின. "அந்தணரே, இங்கிருந்து இலங்கைக்குப் போவதென்றால் எப்படிப் போவது" என்று கேட்டான்.

அந்.—ஐயா, நீர் ஒரு நூதன யாத்திரைவாசிபோ லிருக்கிறது. வழி துறை தெரியாது பிரயாணப்பட்டு விட்டால் எப்படிப்போவது? இப்படிப்பட்ட கேள்வி என்னைக் கேட்டதைவிட மற்றொருவனைக் கேட்டிருப்பீரானல் அவன் உண்மையில் ஆச்சரியம்படுவான். ஆனல் நான் பலவித யாத்திரைவாசிகளைக் கண்டிருக்கிறேன், மேலும் நான் சகல தேசத்திற்கும் சுலபமாய்ப் போகக்கூடிய மார்க்கம் அறிவேன்.

வரே.—அப்படியா?—உம்போன்ற ஒரு அனுபோகமுடையவரே எனக்கு வேண்டியது. என் கேள்வி?......

அந்.—ஆம். இங்கிருந்து ரயில்வெ ஸ்டேஷனுக்குப் (Railway Station) போக ஏழு மைலிருக்கிறது. அங்கு ரயிலேறி தூத்துக்குடி சென்றால் பிறகு கப்பலேறி இலங்கையை அடையலாம்.

வரே.—அப்படியா? இங்கிருந்து ரயில்வே ஸ்டேஷனுக்குப்போக வண்டி அகப்படுமோ?

அந்.—ஆஹா. அடுத்தவீட்டு முருகனுக்கு ஒரு ரூபா கொடுத்தால் சந்தோஷமாய்க் கொண்டுபோய் விடுவான் என்றான்.

அந்தணன் ரூபா என்று கூறும்போது வரேந்திரன் தன் மடியைத் தொட்டுப்பார்த்தான். சொற்ப காசும் அவனிடமில்லாததை உணர்ந்தான். இதனை அந்தணனிடம் கூறினால் அவன் தன்னை நாணய மில்லாதவன் என்று மதித்துவிடுவான் என்று நினைத்துக்கொண்டே சற்றுநேரம் மௌனமாயிருந்தான்.

அந்தணன் இராஜகிரி மன்னனைப்பார்த்து தனக்குள் எண்ணுவானாயினன். இவன் இளம்வயதுடையவனாய் இருந்தபோதிலும் மிகவும் வருத்தமுற்றவனாய் விளங்குகிறான். ஸ்ரீராமன் பாரியை * அரக்கர்கோன் இலங்கைக்குக் கொண்டுபோன பிறகு அவர் அடைந்த கோலத்தைப்போல இவன் கோலமும் இருக்கிறது. இவனும் இலங்கைக்கே போகிறான். இவன் பாரியையை எவன் கொண்டுபோனான்? என்று தனக்குள் எண்ணிக்கொண்டே வரேந்திரனைப் பார்த்தான்.

வரே.—அந்தணரே. இங்கு அருகில் யாரேனும் நகைகள் வாங்குகிறவர்கள் கிடைப்பார்களா? நான் என் சங்கிலியை விற்றுவிட உத்தேசிக்கிறேன். கைவசமிருந்த பணம் செலவாகிவிட்டது என்று சொல்லும்போது அந்தணன் அவனைக் கூர்ந்துபார்த்தான், பிறகு, ஆம். சற்றுதூரத்தில் வசிக்கும் அருணசல செட்டியார் வாங்குவார். ஆனால் ......

* அரக்கர்கோன் = இராவணன்

வரே.—ஆனல் என்ன? என் நகைகளையே நான் விற்கப்போகிறேன். நாளை காலை எத்தனை மணிக்கு ரயில்வண்டி புறப்படுகிறது?

அங்.—சரியாய் 5-10-க்கு.

வரே.—அப்படியானல் நானிப்போதே என் நகையை நாணயமாக்கவேண்டும். அந்தணரே, சிரமத்தைப் பார்க்கவேண்டாம். இப்போதே அவரை இங்கு அழைத்துவாரும். என்றவுடன் மறையவன் தயங்குபவன்போல் நடித்தான்.

அருணசல செட்டியார் பகலில் வியாபாரம் செய்வதைவிட இரவில் அதிகம் செய்பவர் என்றறிவான். எந்நேர வேளையாயினும் சிரமம் பாராமல் வியாபாரப் செய்யும் அருணசல செட்டியாரைப் பற்றி அவன் ஆலோசிக்கவில்லை. ஆனல் அவன் ஆலோசித்ததெல்லாம் தனக்கு தரகு ஒருபுறம் கிடைக்குமோ இரு புறத்திலேயும் கிடைக்குமோ வென்பதுதான்.

வரே.—காலதாமதம் செய்யவேண்டாம் அந்தணரே, நான் கோரியதைச் செய்யும். உமது சிரமத்திற்கு நான் மறந்துபோக மாட்டேன்.

அங்.—என் வழியில் வியாபாரம் செய்பவர்கள் எனக்கு 100-க்கு 5-வீதம் தரகுகொடுப்பது வழக்கம் மேலும் என் சிரமத்தைக் கவனிக்கவேண்டும் என்று மெதுவாய்க் கூறினன்.

இரு பிறப்பாளன் பேராசையைக் கண்ட இராஜகிரி மன்னன் தனக்குள் சிரித்துக்கொண்டு, "அப்படியே யாகட்டும்" என்று பதில் கூறினன். பிராமணன் துரிதமாய் வெளியேசென்று சற்றுநேரத்திற்

கெல்லாம் செட்டியாருடன் அறைக்குள் நுழைந் தான்.

வரேந்திரன் ஒன்றும் பேசாமல் தன் பொன் சங்கிலியைக் கழற்றி அவனிடம் கொடுத்தான் அருணசல செட்டியார் மூக்குக்கண்ணுடியைத் துலக் கிப் போட்டுக்கொண்டு உரைக்கல்லை எடுத்து சங்கலி விகிதம் உரைக்கத் தலைப்பட்டார். செட்டி யார் உரைக்கப் புகுந்து ஏழுதரம் பொடியை உறிஞ்சி விட்டு கடைசியாக சற்று சலித்தவர்போல நாக்கைத் தட்டிக்கொண்டு இராஜகிரி மன்னனை நோக்கினர்

வரேந்திரன் தெளிந்த குரலுடன், "வாணிபரே, வீண்பேச்சில் காரியத்தை வளர்த்தவேண்டாம். உம்முடைய மதிப்பின்படி பணத்தைச் செலுத்தி விட வேண்டுகிறேன். தங்கள் மதிப்புக் குறைவாய் இருப்பதாக எண்ணிஞல் நகையின்பேரில் குறை சொல்லுவது வாணிபரின் இயல்பு. அப்படி நீர் என் நகைக்குக் குறை சொல்லவேண்டாம். உம் முடைய மதிப்பிற்குக்கொடுத்துவிட நான்முன்னமே சம்மதித்திருக்கிறேன் என்பதை அறியும்" என்ற வுடன் அருணசல செட்டியார் நெற்றியைச் சுளித் துக்கொண்டு அப்படியா......ஆனல்...என்று ஆரம் பித்தார்.

வரே.—உடனே அப்படி இப்படி யொன்றும் வேண்டாம். முன்னுரை யில்லாமலே உம்முடைய நோக்கத்தை வெளிப்படுத்தலாம் என்று பதிலுரைத் தான்,

அங்.—ஏன் செட்டியார்வாள். யோசிக்கவேண் டியதில்லை. அவர்தான் முன்னமே சம்மதித்துக்

கொண்டதாகக் கூறவில்லையா? நீர் கூறும் மதிப்பு அவருக்குச் சம்மதமானால் யோசிப்பானேன்?

செட்டியார்.—யோசனை ஒன்றும்மில்லை சுவாமீ, நகை நாணயமாக செய்யப்பட்டது. அழகாயிருக்கிறது. ஆனால் என்போன்ற பொன் வியாபாரிகள் பொடி அதிகம் என்று கூறுவார்கள்.

வரே.—அவர்கள் சொல்லுவது போகட்டும். நீர் என்ன சொல்லுகிறீர்? நீர் போட்டுக்கொண்ட பொடிதான் அதிகமானது. என் நகையிலும் அப்படிப்பட்ட பொடி கலந்திருக்க வில்லையே என்றான்.

இதனைக் கேட்டவுடன் செட்டியார் சிரித்துக் கொண்டு, "ஐயா, நன்றாய்ப் பேசுகிறார். பொடி என்றதைச் சிலேடையாகக் கூறுகிறார். நீர் கூறுவது போன்ற பொடி கலந்திருக்கவில்லை."

வரே.—போகட்டும். வளர்த்தவேண்டாம். உம்முடைய மதிப்பென்ன?

செ.—சங்கிலி நூறு வருகனிடை இருக்கிறது. என் மதிப்பின்படி முந்நூறு ரூபாய்கள் பெறும். பொடி விஷயமாகச் சற்று தள்ளிப்பார்க்கவேண்டும்.

வரே.—ஐயா செட்டியாரே, நீர்தான் அப்படிப்பட்ட பொடி இல்லையென்று சொல்லிவிட்டீரே. மேலும் இந்த தள்ளுபடி விவகாரம் எல்லாம் என்னிடம் ஏன் கூறுகிறீர்? நீர் ரொக்கமாய் இவ்வளவு கொடுக்கக்கூடும் என்பதைத் தெரிவியும்.

செ.—ஐயா, தாங்கள் சுருக்கமாய்க் கேட்கிறபடியால் நான் 275-ரூபாய்கள் கொடுக்கக்கூடும்......

வரே.—உமக்குத் திருப்தியானால் அந்த ரூபாய்களைக் கொடும் என்று அலட்சியமாகப் பதில் கூறவும்

அருணாசல செட்டியார் மறுபடியும் உரைத்துப் பார்க்கத் தொடங்கினார்.

வரே.—ஐயா செட்டியாரே, உம்முடைய உரைக் கல் தேய்ந்துவிடப் போகிறது.

செ.—இல்லை, ஐயா, எதற்கும் முன் சாக்கிரதை அவசியம் என்று சிரித்துக்கொண்டே பணத்தை எண்ணிக் கொடுத்தான்.

வரே.—இப்பொது திருப்திதானே?

அந்.—இல்லாமல் என்ன. அவர் மதிப்புதானே நீர் ஒப்புக்கொண்டது என்று பதில் கூறும்போது செட்டியார் தான் வாங்கிய நகையையும் மிகுதியான பணத்தையும் தன் ஆடையில் முடிந்து கக்கத்தில் அடக்கிக்கொண்டு வெளியிற் போக யத்தனித்தார். அந்தணன் செட்டியாரை வெளியில் அழைத்துக் கொண்டுபோய் தனக்குச் சேரவேண்டிய தரகு பணத்தைப் பெற்றுக்கொண்டு அருணாசல செட்டியாருக்கு வழி காட்டிவிட்டு வரேந்திரனிடம் வந்தான்.

இராஜகிரி மன்னன் 13-ரூபாய்களை அந்தணரிடம் கொடுத்து, "மறையவரே, உமக்கு இது தரகு பணமாகும். வேறு கணக்கு வழங்குகளை நாளைக் காலை தீர்த்துவிடுகிறேன்.........நான் வைகறையில் ரயில்வே ஸ்டேஷனுக்குப் போகவேண்டுமென்பதை மறந்துவிட வேண்டாம்" என்றான்.

அந்.—முருகன் வண்டி அவசியமானதோ?

வரே.—ஆம். இப்போதே அவனுக்குத் தெரியப்படுத்தும். வைகறையில் என்னைப் பிரயாணப் படுத்தும்.

அந்.—நல்லது. காலை நான்கு மணிக்கு வந்து

உம்மை எழுப்புகிறேன்...இப்போது வேறு யேதேனும ஆகாரம் தேவையா யிருக்குமோ ?

வீரே.—ஆம். ஒரு பாத்திரத்தில் கொஞ்சம் பாயசம் கொண்டுவாரும். காலையிலும் சூடான ஆகாரமே வேண்டும்.

அந்.—உம்முடைய விருப்பத்தின்படி சில உண்டிகளும் கொண்டுவருகிறேன் இப்போது நீர் வேண்டியதுபோல் பாயசம் கொண்டுவருகிறேன் என்று கூறி அந்தணன் வெளியே சென்றான்.

வீரேந்திரன் நாற்காலியில் சாய்ந்தவண்ணமாக இனி தான் செய்யப்போகும் காரியங்களைத் தன்புத்தியில் ஒழுங்குபடுத்திக் கொண்டிருந்தான். சிறிது நேரத்திற்கெல்லாம் அந்தணன் பாயசம் கொண்டுவர இராஜகிரி மன்னன் அதனை அருந்திய பிராமணனைக் [illegible] பரிகரித்து அனுப்பிவிட்டு [illegible] எழுந்து கட்டிலிலேபோய்ச் சாய்ந்தான்.

மணி பன்னிரண்டு அடித்தது. தன் உத்தேசத்தை ஒழுங்குபடுத்திக் கொண்டே வீரேந்திரன் நித்திரை போனான்.



# 28-வது அத்தியாயம்.

---

## இலங்கையை நோக்கிப் புறப்படுவது.

**வை**கறையில் சத்திரத்துப் பிராமணன் இராஜகிரி மன்னன் அறையிற்போய்த் தட்டி எழுப்பும்போது வீரேந்திரன் அயர்ந்து நித்திரை புரிந்துகொண்டிருந்தான். அந்த உறக்கத்தில் அரிய கனவு கண்டுகொண்டிருந்தான். அச்சொப்பனத்திலேயே புன்னகை புரிந்து கொண்டிருக்கும்போது அரவம் கேட்டு திடுக்கிட்டு விழித்தான். தன் அருகில் வீற்றிருந்த மனைவியைக் காணவில்லை. ஆ! மரகதவல்லி, எங்கே போனாய்?......அரிய காதலி, என்னை மறந்தனையோ? என் கண்ணுள் கரந்தனையோ?......ஆ! பிராணகாந்தி! உன்னை உண்மையில் காண்பேன். இதோ வந்துவிட்டேன் என்று சொல்லிக்கொண்டே எழுந்து கதவைத் திறந்தான்.

அந்தணன் "யாவும் சித்தமாயிருக்கிறது" என்று சொல்லி தான் கொண்டுவந்த சிற்றுண்டிகளையும் சூடான காப்பித் தண்ணீரையும் மேஜையின்பேரில் வைத்தான். வீரேந்திரன் துரிதமாய் இரண்டொன்றைப் புசித்துக் காப்பியும் குடித்து எழுந்து பிரயாணமானான். வீரேந்திரன் வெளியில் வந்து வண்டி ஏறும்போது சேவல் கூவியது. அந்தணனுக்குப் பத்து

ரூபாய்கள் கொடுத்து விடையளித்துப் போகவிடுத்து வண்டியைத் துரிதமாகச் செலுத்தச் சொன்னான்.

வண்டி ரயில்வே ஸ்டேஷனை நாடியது. வரேந்திரன் வண்டிக்காரனுக்கு சேர வேண்டியதைக் கொடுத்து இறங்கும்போது புகைவண்டியும் பிளாட்பாரத்தில் (Platform) வந்து நின்றது. வரேந்திரன் சீட்டு பெற்றுப் புகைவண்டியில் உட்கார்ந்தான். வண்டி புறப்பட்டது. வரேந்திரன் தான் இனி செய்யப்போகும் காரியத்தில் கருத்தைச் செலுத்தியவனாக ஆழ்ந்த சிந்தனையிலிருந்தான். புகைவண்டி வேகமாய்தான் சென்று கொண்டிருந்தது. ஆனால் வரேந்திரனுக்கு அந்த வண்டி அடிக்கடி ஸ்டேஷனுக்கு ஸ்டேஷன் நின்றுபோவது பிடிக்கவில்லை. பிரயாணம நீண்டதாகக் காணப்பட்டது. கடைசியாகப் புகைவண்டி தூத்துக்குடி ஸ்டேஷனை அடைந்தது.

தன் போன்ற பிரயாணிகளில் பலர் கப்பலை நோக்கிப் போவதை கண்டு அவர்களில் தானும் ஒருவனாகக் கூடிக்கொண்டு போனான். மணம் என்ற பெயர் கொண்ட கப்பல் இலங்கைக்குப் போகத் தயாராயிருந்தது பிரயாணிகள் யாவரும் அதில் தங்களுக்கு இடம் தேடிக்கொண்டார்கள். வரேந்திரன் மணம் என்று தன் வாயுக்குள் சொல்லிக்கொண்டே கப்பலில் ஏறினான்.

கடல் நோயற்றமாக்களின் மனம்போல சாந்தமாயிருந்தது. குளிர்ந்த காற்று வீசிக்கொண்டிருந்தது. மரக்கலமும் துறைமுகம்விட்டு மணியடித்து வெளி பிரயாணமானது.

வீரேந்திரன் போகிவாசத்தில் விட்டுவந்த ஏழை அம்பாலிகையை நினைந்து சோர்வு அடைவான். பிறகு தன் காதலி மரகதவல்லியை நினைத்து தேறுவான்.

இவன் இப்படியிருக்க நாம் முன்னம் நெருக்க மான சந்தர்ப்பத்தில் விட்டுவந்த மரகதவல்லியையும் அவள் தந்தையைப்பற்றியும் கவனிப்போம்.

வீரேந்திரன் பிரயாணமான மணம் என்னும் மரக்கலம் நடுக்கடலில் சென்றுகொண்டிருந்தது.



## 29-வது அத்தியாயம்

---

### திடுக்கிட்டுத் திரும்பினாள்.

நமது கதாநாயகியான மரகதவல்லியும் அவள் தங்கையும் துரிதமாய் நடந்து கொண்டிருந்தார்கள். மரகதவல்லி கொண்டிருந்த திகிலில் அவளால் மூச்சுவிடக் கூடாமலிருந்தது. அவள் பேச வாயெடுத்தாள். அவள் நாவினின்றும் வார்த்தைகள் புறப்படவில்லை.

மாரமார்த்தாண்டப் பிரபு "கொஞ்சம் தைரியம். மகளே, நாம் அக்கொடியர்கள் கையிலிருந்து தப்பித்துக்கொள்வோம். கலக்கமடைந்த உன் மனதைத் திடப்படுத்திக்கொள். சற்று துரிதமாய் நட" என்றார்.

மர.—அப்பா !

மார.—இன்னமும் சற்றுதூரமே.

மர.—அப்பா ! என்னால் கூடவில்லை.

மார.—மகளே !......

மர.—முடியாது அப்பா.

மார.—ஆ ! என் நேச மகளே, உன் தங்கையின் அபவாதத்தை நீக்க நீ செய்துவந்த முயற்சியானது ஒரு ஆடவன் திறத்துக்கு மேற்பட்டதாயிருந்ததே மகளே, அப்படிப்பட்ட தைரியம் இப்

டோது உனக்கு எங்கே போயிற்று? சற்று உன் மனதைத் திடப்படுத்திக்கொள். துரிதமாய் நட, நாம் ஜனநெருக்கமான பாதையை அடையும் வரையில் ஆபத்திலிருந்து விலகிறோமில்லை.

மர.—என் கால்கள் நடக்க பலனற்றுப் போக வில்லை. அப்பா, நான் அதைரியம கொள்ளவில்லை. இன்னமும் நூறுமைல் தூரம் நடக்க எனக்கு சக்தி உண்டு. நான் ஒரு அரசிளங்குமரியாக போற்றி வளர்க்கப்படவில்லை என்றும் ஏழை சிங்களக் குடியானவன் மகளாக வளர்க்கப்பட்டேன் என்பதையும் நீங்கள் அறியாத தல்லவே. அப்பா, நான் நடக்க சக்தியற்றுப் போகவில்லை. ஆனால் நடந்த சம்பவங்கள் என் மனதைப் பலக்குறைப்படுத்துகிறது. அப்பா, வேல் தாங்கும உங்கள் அழகிய கரத்தில் இன்னமும் இரத்தம் வடிகிறதே!

மார.—அது ஒன்றுமில்லை. மகளே, உன் ஆபத்து வேளையில் நான் வந்து உதவியதே என் பாக்கியமாகும். இல்லாது போனால் என் அரிய செல்வியாகிய உன்னை நான் எப்படிக் காண்பேன். அக்கொடிய ஓநாய்கள் மாசற்ற செம்பரி போன்ற உன்னை இரையாகக் கொள்ளமாட்டார்களா? என் பிரிய அழகு, நான் உன்னைக் கண்டதே என் பாக்கியம்.

மர.—அப்பா, தாங்கள் வயோதிக பருவம் அடைந்து விட்டதாக எண்ணியிருந்தேன். நீங்கள் அந்தச் சண்டாளன் கண்டகன் பேரில் புலிபோல் பாய்ந்தபோதுதான் உங்களிடத்தில் இளம் அரசசிங்

கத்தின் தைரியம் உண்டு என்பதை அறியலானேன் அப்பா, அந்தக் கொடியன் உங்களேயும் கொல்ல யத்தனித்தானே ?

மார.—என் அரிய குழந்தாய், நீ அந்நேர வேளையில் அவன் கால்களைப பற்றி இழுத்து கீழே வீழ்த்தாதிருப்பாயாஞல் என் கதி அதோகதியாய்ப் போயிருக்கும். என்னை சிம்மம்போன்ற தைரியமுடையவன் என்று புகழ்ந்து பேசுகிருய். அந்த தைரியம் உன்னிடத்தில் உள்ளதென்று யாவரும் ஒப்புக்கொள்ளுவார்கள்.

பர.—ஆ !.........

மார.—அதுகளெல்லாம் போகட்டும். மகனே, நாம இன்னமும் சிறிது தூரம் சென்று விட்டால் நாம ஆபத்திலிருந்து தப்பினவர்களாவோம்.

பர.—அப்பா, இந்த வழிகள் எனக்குப் புதிதாகக் காணப்படவில்லை. இப்பகுதியை முன்னொரு காலத்தில் பார்த்ததாக ஞாபகமிருக்கிறது.

மார.—ஆம். குழந்தாய், நாம் முன்னம் வசித்து வந்த ஏகாந்த வாசமானது. இன்னமும் ஒருகா வழியில்தா னிருக்கிறது. சற்றுத் துரிதமாய் நட என்னருங் குழந்தாய், நாம் பிழைத்தவர்களாவோம் என்றுகூற இருவரும் சிறிதுநேரம் பேசாமல் வேகமாய் நடந்தார்கள்.

கதிரவன் கடுமையாய்க் காயத் தலைப்பட்டான் இருவரும் மௌனமாய் நடந்துகொண் டிருந்தார்கள். அவர்கள் இருவரும் பேசிக் கொண்டு

விருந்து நம் வாசகர்கள் நடந்த விஷயத்தை ஒரு வாறு உணர்ந்திருக்கலாம். நேயர்கள் இன்னமும் சில விபரம் வேண்டுவார்களானால் சில வார்த்தைகளில் விளக்குகிறேன். நாம் பதினோராவது அத்தியாயத்தில் கூறியது போல மரகதவல்லியும் அவள் தந்தையும் சந்தித்துத் தப்பியோட யத்தனிக்கையில் கண்டகன் எதிர்ப்பட்டான். கள்வர் தலைவன் *பூஜ்ஜியமாய் கொண்டு வந்த பொருள் †பூஜ்ஜியமாய் போய் விடுவதென்றால் அவர்கள் மனம் எப்படிச் சகிக்கும்? கண்டகன் பித்தேறிய நாய்போல் குரைத்து அவளுக்கு உதவி புரிய வந்த அவள் தந்தை கருங்குயில் குன்றத்தரசன் மேல் பாய்ந்தான். கள்வர் எப்போதும் கையில் கொண்டிருக்கும் கூரிய கத்தி அவன் கரத்திலிருந்தது. அவன் மாரமார்த்தாண்டப பிரபுவை நெருங்கியவுடன் அந்தக் கூரிய ஆயுதத்தால் அரசனை ஓங்கிக் குத்தினான். அந்த தருணத்தில் அவன் தலைகீழாகப் பூமியில் குப்புற வீழ்ந்து மண்ணைக் கவ்விக் கொண்டான். கண்டகன் குத்திய குத்தைக் கையால் தடுத்த அரசனுக்குக் கரத்தில் சிறு காயம் உண்டாகியது. கண்டகன் பூமியில் விழுந்தவுடன் விஷப்பாம்பை நசுக்குவதுபோலக் கருங்குயில் குன்றத்தரசன் அவன் கையில் வைத்திருந்த கூரிய ஆயுதத்தைப் பிடுங்கி அவனை ஒரே குத்தாக மார்பில் குத்திவிட்டுத் தன் மகளின் கரத்தைப்பிடித்து அழைத்துக்கொண்டு வேகமாய நடக்கலானான். கண்டகன்

*பூஜ்ஜியமாய் = அருமையாய்.
†பூஜ்ஜியமாய் = வெறுமையாய்.

சாருநாருவாயில் கூவிய சப்தங்கேட்டு அவன் கூட்டத்தவர்கள் எங்கே வந்துவிடப் போகிறார்களோ என்று பயந்திருந்த அரசன் அதி வேகமாக மரகதவல்லியை நடத்திக்கொண்டு சென்றான். கண்டகன் சாகக்கிடக்கும் இடத்திற்கு அப்பால் இரண்டு காத தூரம் சென்ற பிறகு தான நம்மவர்கள் பேசத் தொடங்கினார்கள். அவர்கள் சம்பாஷணையே நாம் இந்த அத்தியாயத்தின் தலைப்பில் கூறியிருப்பதால் இப்போதும் கூறுவது அனுவசியமாகும்.

கருங்குயில் குன்றத்தரசனும் அவன் மகளும் சிறிது தூரம் சென்ற பிறகு மரகதவல்லி மலர்ந்த முகத்தினளாய், "அப்பா, நாம் தப்பித்துக் கொண்டோம்" என்றாள்.

மார.—மகளே, இன்னமும் திட்டமாய்ச் சொல்லுவதற்கில்லை. அக்கொடிய [illegible] கள்வர்களின் ஆட்சிக்குட்பட்ட எல்லையை நாம் இன்னமும் கடந்து விடவில்லை. எல்லைப் புறத்தில்தான் பலத்த காவற்காரர்களிருக்க வேண்டும் என்பது என் எண்ணம் என்று மாரமார்த்தாண்டப் பிரபு கூறும்போது மரகதவல்லியின் முகம் காற்றினால் அலைவுண்டு நிறம் மாறும் புஷ்பம்போல் மாறியது. உடனே "அப்பா! அப்படியிருக்குமானால் நாம் எப்படி........"

மாரமார்.—உன் மனோதைரியம் எங்கே போயிற்று! என் அருங்குழந்தாய், உன் தந்தையின் அபவாதத்தை நீக்க முயலும்போது உனக்கிருந்த தைரியம் இப்போது எங்கே போயிற்று? என் செல

மகளே, வல்லாள உக்கிரம சிங்கத்தினிடமிருந்து இராஜகிரி மன்னனை மீட்கச் சென்றபோது உனக்கிருந்த வல்லமை இப்போது எவ்விடம் சென்று பதுங்கியது?

மரகத.—உண்மையைச் சொல்லவேண்டுமானால் அப்பா, என் தீரம் அவ்வித காரியங்களைச் செய்யத் தூண்டவில்லை. உங்கள்மீது நான் கொண்டிருந்த அளவு கடந்த நேசமே எனக்கு நேரக்கூடிய ஆபத்துக்களைப் பொருட்படுத்த செய்யவில்லை. உங்கள் மீது அனியாயமாய் சுமத்தப்பட்ட அபவாதத்தை நீக்க வேண்டும் என்கிற அவா என் சிரமத்தை நோக்க அவகாசம் கொடுக்கவில்லை. நான் அது சந்தர்ப்பத்தில் செய்த சொற்ப காரியத்தைக் கொண்டு என்னைத் தீர ஸ்திரீயாக மதித்துவிடவேண்டாம். அப்பா, என்னவென்றாலும் நான ஒரு ஸ்திரீ ஜாதிதான் என்பதை மறந்துவிட வேண்டாம்.

மாரமார்.—நீ மோசம் போகிறாய். மகளே, பெண்கள் அஞ்சும் சுபாவ முடையவர்களாய் இருப்பது இயல்புதான். ஆனால் அது மேன்மையான குணம் ஆகமாட்டாது. அச்சம், நாணம, மடம், பயிர்ப்பு, என்கிற நான்கு லக்ஷணங்களும் ஸ்திரீகளுக்கு இருக்க வேண்டிய உயர்வான லக்ஷணங்கள் என்று ஓதும் சாஸ்திரமும் பொய்யாக மாட்டாது. ஆனால் அந்த லக்ஷணங்களைப் பற்றி உணர்வோரும் உணர்த்துவோரும் மோசம் போகிறார்கள். பழி பாபங்களுக்கு அஞ்சவேண்டுமென்பதும், பொய், குறளை, வன்சொற்களுக்கு நாணி பின்னடையவேண்டுமென்பதும், பிறர்

தனக்கு செய்யும் தீங்குகளை மறந்து அவர்கள் குற்றங்களை அறியாது எல்லோருக்கும் இதம் புரிய வேண்டுமென்பதும், தன் புருஷனிடத்திலில்லாத பிற புருஷனிடத்தில் அனுபவிக்கக் கூடிய சுகத்தில் அருவருப்பு இருக்கவேண்டும் என்பதுவுமாகிய இந் நான்கு அரிய லக்ஷணங்களையே சாஸ்திரத்தில் உயர்வு படுத்திக் கூறியிருக்கிறது. கேளாய் மகளே, ஆபத்து காலத்தில் அச்சங்கொள்வது மேன்மையான குணமல்ல. என் அரிய குழந்தாய், தைரியமாயிரு. மன தைரியம நமக்கு வல்லமை கொடுக்கும்.

மாரகத.—அப்பா, நாம் செல்லும் வழி குறுகிவிட்டது என்று எண்ணுகிறேன். இதோ நம் கண் முன் தோன்றும திராக்ஷைத் தோட்டமும் தனிய வீடும்தான நம்முடைய ஏகாந்தவாசமா யிருந்தது என்று எண்ணுகிறேன்.

மாரயார்.—ஆம். அதுதான் மகளே, நம்முடைய ஏகாந்தவாசமானது இப்போது ஒரு ஜனபழக்கமான வீடாக மாறியிருக்க வேண்டும். நான் நேற்றிரவு ஒரு சத்திரத்தில் தங்கியிருந்தேன். அந்த சத்திரமும் நீ அறிந்தவிடமே யாகும். நாம் முன்னம் உக்கிர சிங்கனுக்குத் தப்பிச் செல்லும்போது தங்கிய சத்திரந் தான். அந்த சத்திரத்தில்தான் முதல் முதல் உனக்கு என்னுடைய பழைய விருத்தாந்தங்களைக் கூறினேன். அன்று நடந்த சம்பாஷணை யல்லவா நீ இந்திய தேசம் செல்ல காரணமாயிருந்தது? [illegible] ம மார மார்த்தாண்டப்பிரபு ஒவ்வொரு விஷயமா[illegible]ல்ல மாரகதவல்லியின் உயிர் தடுமாறியது. ப

களுக்கள் ஒவ்வொன்ருய் அவள் மனதில் தோன்றிக் கொண்டு வந்தன. அவள் இருதயம் பருத்துவிட்டது போல் தோன்றியது. அவள் கணவன் இராஜகிரி மன்னனைப்பற்றி எண்ணிஞள். அவரைப்பற்றி முன் கேட்டபோது அவள் தந்தை வாய் அடக்கிவிட்டது அவள் ஞாபகத்திலிருந்தது. அப்போதிருந்த சந்தர்ப்பம் ,அவரை அப்படிச் செய்யத் தூண்டியதோ? அல்லது அவருக்கு ஏதேனும வந்துற்றதோ? என்று எண்ணிஞள். தன் கணவனுக்கு ஆபத்து என்று எண்ணும்போதே அவள் தேகம் நடுங்கியது. தன் காதலன் விஷயமாக அறியவேண்டும் என்கிற ஆசை அவள் மனதில் உதித்தபோதே தன் தந்தையைக் கேட்க வாய்திறந்தாள்.

அதே சந்தர்ப்பத்தில் பின்புறம் ஏதோ சப்தம் கேட்டது. திடுக்கிட்டுத் திருப்பிஞள். அவள் தந்தையும் திரும்பிப்பார்த்தார்.



## 30-வது அத்தியாயம்.

---

### சீதை.

மாரமார்த்தாண்டப் பிரபுவும் அவர் மகளும் பின்புற மிருந்துவந்த சப்தத்தை நோக்கினார்கள். ஒரு கரிய மனிதன் இவர்களைத் துரத்துபவன்போல ஓடி வந்தான். அவனைக் கண்ட அவ்விருவரும் சற்று பயந் திருந்தபோதிலும் நடப்பதை நிறுத்தவில்லை. விரை வாய் ஓடிவந்தவன் திடீரென்று திரும்பி ஓடினான். அவன் ஓடிவந்த விரைவையும் பிறகு திரும்பி ஓடும் சமிதியையும் கண்ட அரசனுக்கு ஒன்றும் விளங்க வில்லை. அந்தக் கரிய மனிதன் ஓடிக்கொண்டே ஒரு ஊதுகருவியால் ஊதினான். உடனே அவன் உக்கிரம சிங்கன் கூட்டத்தைச்சேர்ந்த கள்வர்களில் ஒருவன் என்று மாரமார்த்தாண்டப்பிரபு அறியலானார். ஆனால் அவன் முதலில் ஓடிவந்ததும் பிறகு திரும்பி ஓடியது மான காரணம் அவரால் உணரக்கூடவில்லை. அந்தக் கள்வன் ஊதும் சப்தத்தைக் கேட்ட வேறு இருவர் அவனுடன் வந்து கூடினார்கள். மாரமார்த்தாண்டப் பிரபு திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே வேக மாய் நடந்தார். கள்வர் மூவரும் நம்மிருவரையும் காட்டி தங்களுக்குள் பேசிக்கொண்டார்கள். அவர் கள் பேசியது நம்மவர்கள் காதுகளுக்கு எட்டவில்

ஆனால் அவர்கள் காட்டும் ஜாடையில் தங்களைப்பற்றியே பேசிக்கொள்ளுகிறார்கள் என்பதை உணர்ந்து கொண்டார்கள். அவர்கள் தங்கள் இருவரையும் பிடிக்க எத்தனிப்பார்களானால் நாமென்ன செய்யக் கூடும் என்று மாரமார்த்தாண்டப்பிரபு யோசிக்கலானார். அவர் ஆலோசனை முடிவதற்குள் மூவரும் நம்மவர்களை நோக்கி வந்தார்கள்.

அதே தருணத்தில் இவர்களுக்கெதிரில் வெள்ளை உடைதரித்த ஓர் உருவம் தோன்றியது. இனி நாம் தப்பும் மார்க்கமில்லை என்று மாரமார்த்தாண்டப்பிரபு கைகளைச் சோரவிட்டார். மரம் அசைந்தால் இலைகள் உதிர்வதுபோல அரசன் சோர்வடைவதைக் கண்ட மரகதவல்லி "ஐயோ! அப்பா," என்று கூக்குரலிட்டாள்.

வெள்ளிய உடைதரித்த உருவமும் இவர்களை நெருங்கியது. திருடர்கள் முன்வைத்த கால்களை பின் வைக்கத் தலைப்பட்டார்கள். மாரமார்த்தாண்டப்பிரபு அந்த வெள்ளுடை தரித்த ரூபத்தைக் கவனித்தார். அது ஒரு பெண் உருவமாயிருந்தது. சற்றுநேரத்திற்கெல்லாம் திருடர்கள் இருந்தவிடம் தெரியாமல் ஓடிவிட்டார்கள். கருங்குயில் குன்றத்தரசர் முன் வரும் பெண்பிள்ளையை நோக்கினார். அவர் ஆச்சரியத்திற்கு அளவு இல்லை. "ஆ சீதை! நீயா இங்கு?" என்று கூறுமுன்னம் அம்மாது ஓடிவந்து மரகதவல்லியின் கால்களில் விழுந்தாள். நம்படைவாள் சிங்களமாதை அன்புடன் தூக்கிவிட்டு "ஆ சீதை! உன்னைக் கண்டா

அக்கொடியர்கள் பயந்து ஓடினார்கள்?" என்று கேட்டாள்.

சீதை அலமுவின் கேள்விகளுக்குப் பதில் கூறாமலே மாரமார்த்தாண்டப் பிரபுவைப் பார்த்து "ஐயனே, தாங்கள் இந்த சிங்களதேசத்தை விட்டுப் போய்விடவில்லையா? தாங்களும் தங்கள் செல்வியும் இந்தியதேசம் போய்விட்டதாகக் கூறினார்களே. அதுகளெல்லாம் வெறும் பொய் என்று எனக்கு இப்போது தெரிகிறது. தங்களும் தங்கள் மகளும் உக்கிரமசிங்கனால் கைது செய்யப்பட்டு அவன் குகையில் அடைக்கப் பட்டிருந்தீர்கள் போலும். இப்போது தான் அவன் கையிலிருந்து தப்பி வருகிறீர்களல்லவா?" என்று அதிவிநயத்துடன் கேட்டாள்.

இவள் கேள்விக்கு மாரமார்த்தாண்டப் பிரபுவால் பதில் சொல்லக் கூடவில்லை. தன் மகளைப் பார்த்தார். தனது பழைய எஜமானன் தயங்குவதைக்கண்ட பிரமாணிக்கமுள்ள சீதை பாதகவல்லியைக் கருணையுடன் பார்த்து "அம்மா, இனி நீங்கள் அக்கொடிய கள்வர்களுக்குப் பயப்படவேண்டியதில்லை. அவர்கள் இனி உங்களைத் தொந்தரைசெய்ய முன்வரமாட்டார்கள். உங்களுக்கு நேர்ந்த ஆபத்து இனி உங்களை அணுகாது" என்று திட்டமாய்க் கூறுவதைக்கேட்ட மாரமார்த்தாண்டப் பிரபு ஆச்சரியப்பட்டார்.

கொடிய கள்வர்களுக்கும் தன் பழைய வேலைக்காரிக்கும் இருக்கக்கூடிய சம்பந்தம் எப்படிப்பட்டதாயிருக்கலாம் என்று தனக்குள் தானே யோசிக்கலா

னார். எஜமானன் ஆலோசனையைக்கண்ட சீதை புன்சிரிப்புடன், "ஐயனே, அக்கள்வர்கள் என்னை ஓர் கொடும் தேவதையாக மதித்துவருகிறார்கள். அவர்கள் அப்படி எண்ணியதின் காரணத்தைக் கேட்டால் நீங்கள் சிரிப்பீர்கள். அது போகட்டும். இப்போது தாங்களும் தங்கள் செல்வியும் எங்குபோக விரும்புகிறீர்கள்? உங்களுக்குப் பிரியமானால் உங்களுடைய பழைய வீட்டிலேயே கொஞ்சகாலம் தங்கிப்போகலாம். அந்த ஏகாந்த வீட்டை உம்மிடமிருந்து வாங்கிய மார்வாடி ஒரு சிங்களச் சீமானுக்கு விற்றுவிட்டான். நான் இப்போதும் அங்குதான் இருந்துவருகிறேன். விருத்த எஜமானன் மிக்க நல்லவர். உங்களைத் தன் இல்லத்தில் விருந்தினர்களாய் ஏற்பார் என்பதில் சந்தேகமில்லை. நானும் உங்களுக்காகப் பரிந்து பேசுவேன்" என்று விநயமாகக் கேட்டுக்கொண்டாள்.

மாரமார்த்தாண்டப் பிரபு பதில் ஒன்றும் சொல்லவில்லை. பெண்மானின் மருண்ட பார்வையைக் கொண்ட தன் மகளை நோக்கினார். அப்பார்வையால் அவள் மனதில் தோன்றும் எண்ணங்கள் பலவும் அவருக்கு விளங்கின. அவளால் பதில் ஒன்றும் கூறமுடியவில்லை. இருவரும் சிறிதுநேரம் ஆலோசித்துக்கொண்டேயிருந்தார்கள்.

அன்பும் அனுதாபமும் பிரமாணிக்கமுமுள்ள சீதை அவர்களை வெகுநேரம் யோசிக்கச்செய்யவில்லை. மாரமார்த்தாண்டப் பிரபுவைப் பார்த்து, "ஐயனே, என் மனோபீஷ்டத்தைக் கெடுக்கவேண்டாம். என்

வார்த்தைகளைக் கேட்டதற்காக நீங்கள் என்றும் வருத்தப்படமாட்டீர்கள். தற்போது உங்களுக்கு அரிய உறைவிடமாய் இருக்கக்கூடிய வாசம் இராமைக்கத் தோட்டத்தின் மத்தியிலுள்ள உங்கள் பழைய ஏகாந்த வாசமல்லது வேறு வாசம் கிடையாது. ஐயனே, ஜன நெருக்கத்தாலும் படை நெருக்கத்தாலும் சூழப்பட்ட குளம்பு (Colombo) முதலாய் உங்களை அக்கொடிய கள்வர் கையிலிருந்து காக்க வனையறிய மாட்டாது. நான் இப்படி இட்டமாய்க் கூறுதற்குக் காரணம் உண்டு. என் வேண்டுகோளை தடுக்கவேண்டாம்" என்று அன்புடன் வேண்டினாள்.

மாரமார்த்தாண்டப் பிரபு சிறிதுநேரம் ஆழ்ந்த சிந்தனையிலிருந்து பிறகு ஒரு முடிவுக்கு வந்தவர் போல சீதையைப்பார்த்து, உன் மனதின்படியாகட்டும்" என்று மெதுவாய்க் கூறினார். சீதை உள்ளம் பூரித்தவளாக இருவரையும் அழைத்துக் கொண்டு ஏகாந்த வாசத்தைக் குறுகினாள்.

இருபக்கமும் உயர்ந்த மலைகள் சூழ்ந்த துருக்கத்தின் வழியாக மூவரும் சென்று ஏகாந்தவாசத்தின் தோட்டத்தை யடைந்தார்கள். சீதை இருவரையும் விட்டு, "இதோ எஜமானனையும் அழைத்துவருகிறேன்." என்று வீட்டுக்குள் ஓடினாள்.

தோட்டத்தில் பரிமளித்து வீசும் சுகந்த காற்று சம்பவர்கள்மீது பகரந்தப் பொடிகளைத் தூவி உற்சாகப்படுத்தியது. ஏகாந்த வாசியான அனந்தராலால் தண்ணீர் வார்க்கப்பட்டு அவன் அரிய மகளோடு அன்பாய் வளர்ந்த பெரிய விருக்ஷங்கள் இப்போது இவர்

களுக்கு அரிய நிழலைக்கொடுத்துதவின. நம் மடவாள் கவலையுடன் போற்றி வளர்த்த சில அரிய செடிகள் நறிய பூக்களை ஈன்று நமது சுரிகுழல் மாதரசிக்கு புன்முறுவல் காட்டுவதுபோல இருந்தன. சிறு வயதில் தனிமையைத் துணையாகக்கொண்டு ஓடி ஆடிக் களித்த தனது ஏகாந்தவாசத்தின் சோலையைக் கண்டவுடன் நமது பழைய அனந்தரான் மகள் பெருமூச்சு விட்டுத் தந்தையை நோக்கி "அப்பா," என்றாள். மாரமார்த்தாண்டப் பிரபு நீர்பெருகும் கண்களால் தன் மகளைப் பார்த்தார். அவர் கண்கள் மழை சொரிவதுபோல நீர்மாரி சொரிந்தது.

இதனைக் கண்ணுற்ற அவர் மகள் தடுமாற்றத்துடன், "அப்பா!.........அப்பா! ஏன் அழுகிறீர்கள்?" என்று மெலிந்த குரலில் கேட்டாள்.

அனந்தரான் பெருமூச்சுவிட்டு "என் செல்வக் குழந்தாய், மூந்நாளில் நாம் இச்சிறு ஏகாந்தவாசத்தில் நிம்மதியாய் வாழ்ந்துவந்தோம். அக்காலத்தில் நீ ஒரு மாசற்ற சிறுமியாய் இருந்தாய். சோலையின் மத்தியிலுள்ள இந்த ஏகாந்தவாசமே உனக்கு முழு புவனமாயிருந்தது. என் அன்பே உனது மாசற்ற நெஞ்சத்தில் வாசமாயிருந்தது. என் செல்வக் குழந்தாய், அந்நாளில் நாம் பாக்கியமுள்ளவர்களா யிருந்தோம்" என்று நடுங்கிய குரலுடன் மொழிந்தார்.

மரகதவல்லி முகம் வேறுபட்டது. அவள் மனம் தடுமாறியது. "அப்பா, ஏன் இப்படிச் சொல்லுகிறீர்கள்? துன்பத்தைப் பொறுமையோடு சகிக்கும் சக்தியுடைய உங்களுக்கு இப்போது என்ன புதிய துன்பம்

நேர்ந்தது? அப்பா!......என் நேச அப்பா, எனக்கு மறைக்கவேண்டாம். அவருக்கு என்ன நேர்ந்தது?"

மாரமார்த்தாண்டன் முகம் திடீரென்று வெளுத்தது; தன் மகளைத் தழுவி முத்தமிட்டு, "அது ஒன்றுமில்லை. என் குழந்தாய், நான் சிறிதுநேரம் என் பழைய சிந்தனையில் இருந்துவந்தேன். அது என் பலஹீனமேயாகும். அது ஒன்றுமில்லை......"

மர.—அப்பா, எனக்குச் சொல்லித்தான் ஆகவேண்டும். எனக்கு மறைக்கவேண்டாம்.

மார.—அலமு, எதுபற்றிக் கேட்கிறாய்?

மர.—என் கணவரைப்பற்றி......என் பதியைப் பற்றி, எனக்கு மறைக்கவேண்டாம். அப்பா, அவருக்கு என்ன நேர்ந்தது? அக்கொடிய கள்வன் பாறையின் உச்சியிலிருந்து தள்ளியதில் என்ன தீங்கு நேர்ந்தது? அப்பா, எனக்கு உரைக்கவேண்டும். அவர் நோயாயிருக்கிறாரோ?

மார.—அப்படிக்கொன்றுமில்லை. மகளே, அவர் சௌக்கியமாய்த்தானிருக்கிறார். அதுபற்றி இப்போது என்ன? ........

மர.—இல்லை அப்பா. நீங்கள் முதலில் அவரைப் பற்றித்தான் கூறினீர்கள். பிறகு எனக்கு அதனை மறைக்கிறீர்கள். இப்போது சொல்லியதுபோல அவர் சுகஜீவியாய் இருப்பாரானால் அவர் உங்களை மட்டிலும் தனியாகப் போகவிட்டிருப்பாரோ? அப்பா, அவருக்கு என்மீதில் அன்பு குறைந்துவிட்டதா? அவர் ஒருபோதும் என்னை மறவார். அவருக்கு என்ன நேர்ந்தது? அப்பா, கொடிய [illegible]

வனுக்கு ஒளி இல்லையென்றாலும் நான் நம்புவேன். ஆனால் அவர் சுகஜீவியாய் இருந்து உங்களுக்குத் துணை வராதிருப்பாரானால் அதனை என்னால் நம்பமுடியாது. அவருக்கு என்ன நேர்ந்தது? அப்பா, அவர் ஏன் உங்களோடு வரவில்லை?" என்று பரிதாபத்தோடு கேட்கவும் மாராமார்த்தாண்டப் பிரபு பெருமூச்சு விட்டார். இனி ஒளிப்பதில் காரியமில்லை என்று கண்டு கொண்டார். ஆனால் அப்பரிதாபமான சம்பவத்தை அவளுக்கு எப்படிச் சொல்லுவார். அவள் கணவன் கடலுக்கு இரையானான் என்பதைத் தன் மகளுக்கு எவ்வாறு உரைப்பார்? சற்றுநேரம் ஒன்றும் பேசாமல் அசைவற்று நின்றார்.

பிறகு சகலமும் அவளுக்குச் சொல்லித்தான் ஆக வேண்டும் என்று எண்ணி பேசவாரம்பித்தார். ஆனால் அவர் வாயிலிருந்து சப்தம் புறப்படவில்லை. பின்னும் சற்று நிதானித்து ஒருவாறு கூறத் தொடங்கினார். அவர் பேச்சு தொடர்பாகவரவில்லை. இடையிடையே தான் பேசுவதை நிறுத்தி யோசித்து ஒவ்வொன்றாய்க் கூறப் புகுந்தார். "திடங்கொள், மகளே, உன் மனதைத் தைரியப்படுத்திக்கொள். நான் கூறப் போவதை முடிக்குமுன்னம் கலங்கவேண்டாம். என் அன்பான செல்வமே, நீ தீரச்சிறுமி என்னும் பெயர் படைத்தாய். அதுபோல திடமாய் இரு. நான் கூறப் போகும் காரியம் முதலில் உன்னைக் கலக்கப்படுத்தக் கூடும். ஆனால் முடிவுபரியந்தம் கவலைபடாமல் கேள்" என்று கூறி மறுபடியும் பேசத்தொடங்கினார்.

மரகதவல்லியின் முகம் வேறுபட்டது. ஒன்று மில்லாத காரியத்திற்கு இத்தனை முகவுரைகள் வேண்

டுமோ? என்று தனக்குள்தானே எண்ணிக்கொண்டாள். ஆனால் அதுபற்றி ஒன்றும் பேசவில்லை. தன் தந்தை சொல்லியதுபோல முற்றிலும் கேட்போம் என்று தனக்குள்தானே தீர்மானித்துக்கொண்டு கருங்குயில் குன்றத்தரசரைக் கவனமாய்ப் பார்த்தாள்.

மாரமார்.—மகளே, நான் உன்னை அந்த வல்லாள உக்கிரமசிங்கனிடமிருந்து மீட்கப் படைவீரர்களோடு பிரயாணமானபோது உன் அருமைக் கணவரும் எனக்குத் துணையாகவே வந்தார். இடையில் நடந்த ஓர் அசம்பவம் எங்களைப் பிரித்துவிட்டது.........

மரகத.—அப்பா, அசம்பவமா!......என்ன?... ......என்று ஆத்திரத்தோடு கேட்க அவள் தகப்பன் மீண்டும் கூறுவானாயினன்.

மாரமார்.—நாங்கள் கமடம் என்னும் ஒரு கப்பலில் பிரயாணமானோம். புயல்காற்றினால் கமடம் மூழ்கியது........என்று முடிக்கு முன்னம் மரகதவல்லி அடியற்ற பனைபோல சாய்ந்தாள்.

மாரமார்த்தாண்டப் பிரபு சவம்போலான தன் மகளைத் தோள்மீது சாய்த்துக்கொண்டார். தன் அரும் செல்வியின் கோலத்தைக்காண அவருக்கு அழுதுதெளிந்ததேயல்லது வேறுசெய்ய அவரால் ஆகவில்லை.



## 31-வது அத்தியாயம்.



### அதே கட்டிலில் அதே சீதை.

சீதை தன் புதிய எஜமானனோடு பழைய எஜமானனைக் காண அவர்களை விட்டுவந்த தோட்டத்தின் பக்கமாய் நடக்கலானாள். அவள் உள்ளம் பூரித்திருந்தது. பிரமாணிக்கமுள்ள ஊழியக்காரிக்குத் தன் எஜமானனையும் அவர் மகளையும் கண்டதே ஆனந்தமாயிருந்தது. அவள் புதிய எஜமானனை சிங்களன் ஓர் வயோதிகன் என்று முன்னமே கூறியுள்ளோம்.

அவன் பெயர் சாமிசினேந்திரன். அவன் சுபாவத்தில் சற்குண முடையவன்! ஏழைகளுக்கு * முகில்போல் வழங்குபவன். நரைத்த மயிர் உடையவனாயினும் அழகிய தோற்றமும் திடகாத்திரமுமுடையவனாயுமிருந்தான். சாமிசினேந்திரன் பால்ய பருவத்தில் மூர்க்க குணமுடையவனாக இருந்தான் என்று பலரும் [illegible]வார்கள். ஆனால் அவன் அப்படி இருந்[illegible] [illegible]குலத்தவரால் கருதப்பட்டானே யல்லாது அவன் அப்படிப்பட்ட சுபாவமுடையவனல்ல என்பதை நாம் உறுதியாக நம்பலாம். அவன் அறிவு அறியும் பருவத்திற்குமுன் அவன் தந்தை அவனை விட்டு விண்ணுலகை அடைந்தார். பேதைப் பெண்

* முகில் = கரியமேகம்—தப்பாமல் கொடுப்பவன் என்பது கருத்து.

பாலாகிய அவன் தாய் அவனை அன்புடன் வளர்த்து வந்தாள். இளமைப் பருவத்திலேயே கல்விக்கு காரணிகளாகிய தந்தையைப் பறிகொடுத்தவனாகையால் அவன் சிறந்த கல்விமானாக விளங்கவில்லை என்பது ஆச்சரியமானது. சாமிசினேந்திரன் சுபாவத்திலேயே தன் அறியாமையை அறியும் அறிவுடையவனாயிருந்தான் என்பதிற் சந்தேகமில்லை.

அவன் 18-வது வயது அடையுமுன்னமே ஜீவிய வழிப்பாட்டில் கவனம் செலுத்தியவனாக வியாபாரஞ் செய்ய முயன்றான். அவன் துரதிர்ஷ்டம் அவனை முன்னுக்குவரச் செய்யவில்லை. 22-வது பிராயத்திற்குள்ளாக மூதாதைகளின் சொத்தை எல்லாம் தொலைத்துவிட்டான். அவன் மறவினர் அவனை மூர்க்கனாகக் கருதியதும் அவன் செல்வம் குன்றியதினால் என்றே சொல்லவேண்டும். பிறர் தன் ஏழைமையை ஓர் குற்றமாக மதித்துத் தன்னைவிட்டு விலகுவதைக்கண்ட சாமிசினேந்திரன் வருந்தினான் என்றாலும் அதைரியப்படவில்லை. அவன் பலஹீனமே அவனுக்கு ஓர் பலமாயிருந்தது. அவன் 24-வது பிராயத்தில் சிங்கள அரசாங்கத்தின் இராணுவத்தில் புகுந்து சொற்பகாலத்துக்குள் உயர்ந்த உத்தியோகத்தில் அமர்ந்தான். அக்காலத்தில் அவன் உறவினர்கள் அவனைப் போற்றிக் கொண்டாடினார்கள். ஆனால் அவன் அவர்கள் போற்றுவதையும் தூற்றுவதையும் கவனித்தானில்லை. அவன் சுற்றத்தார் அவனுக்கு விவாகம் செய்விக்க முயன்றார்கள். சாமிசினேந்திரன் அவர்கள் மொழிகளுக்குச் செவிசாய்த்தானில்லை. பிரம்மசாரியாகவே காலங்கழித்தான். நாளடைவில் அவன் பதவியில் உய

காரசம்பளம் பெற்றுத் தனியே வசிக்க ஒரு ஏகாந்த வாசம் தேடினன். அப்போதுதான் நமது பழைய அனந்தரானின் ஏகாந்தவாசம் அவனுக்குச் சொந்தவாசமாக ஏற்பட்டது. சாமிசினேந்திரனைப்பற்றி அறிய வேண்டிய சில முக்கிய விஷயங்களைக் கூறினோம். இங்கு அவன் தாயும் முன்னமே காலம் சென்றுவிட்டாள் என்பதைக் குறிப்பிடுவோம். இப்போது சீதை அவனுக்கு வேலைக்காரியாக அமைந்தது எப்படி என்றால் குளம்பு ஏஜண்டு மூலமாக அனந்தரன் ஏகாந்த வாசத்தை அரைவிலைக்கு வாங்கிய மார்வாடி அந்த வீட்டிற்குக் காவல்வைக்க ஓர் அனுபோகமுள்ள ஆள் தேடினன். அப்போது சீதை அனந்தரன் வேலையில் இருந்துவந்தவளாக ஏற்பட்டவுடன் அவளையே அந்த இல்லத்திற்குக் காவற்காரியாக ஏற்படுத்தினன். இப்படியாக சீதை அந்நாள்முதல் இந்நாள்வரைக்கும் ஏகாந்தவாசத்திலேயே இருந்துவந்தாள். இனி சீதையைப்பற்றி அறியவேண்டியதை அவள் வாய்மொழியிலிருந்து அறிந்துகொள்ளுவோம்.

கதிரவன் உச்சிநோக்கி வந்துகொண்டிருந்தான். பகல் வெப்பமாக யிருந்தபோதிலும் அனந்தரனால் வளர்க்கப்பட்ட மரங்கள் அரிய நிழலைக்கொடுத்து சுகந்த காற்றுக்கு இடமளித்து மனேவியாதி கொண்டவர்களுக்கும் உற்சாகம் ஊட்டும் விதமாய் இருந்துவந்தன.

சீதை தன் எஜமானனுக்கு வழி காட்டிக்கொண்டு முன் நடந்தாள். "சீதா, அவர்களை நமது தோட்டத்திற்கு அப்புறத்திலா கிறுத்திவந்தாய்?" என்று சாமிசினேந்திரன் மெல்லிய குரலாய்க் கேட்டான்.

சிதை.—" இல்லை எஜமானனே, அவர்கள் நமது தோட்டத்தில் புகுந்த பிறகே நான் உங்களைநோக்கி வந்தேன்" என்று கூறி "அதோ இருக்கிறார்கள் பாரும்" என்று தன் விரலால் சுட்டிக்காட்டினாள். இருவரும் நம்மிருவரை நெருங்கிவந்தவுடன் சிதேனந்திரன் முகம் மாறியவனாக, "இது என்ன சிதா?" என்று பயந்து கேட்டான். சிதை ஒன்றும் தோன்றாதவளாக ஓடி அலமுலைவத் தன் கரங்களில் தாங்கினாள்.

மாரமார்த்தாண்டப்பிரபு குழந்தைபோல் விம்மி யழுதார். தந்தையும் மகளும் இருந்த தோற்றம் ஒரு பரிதாபமான காட்சியாக விருந்தது. சிதை நமது அரசியை ஒரு குழந்தைபோல் தூக்கிக்கொண்டு வீட்டைநோக்கி நடக்கலானாள்.

சிதேனந்திரன் அரசனைப்பார்த்து, "பிரபு, தாங்கள் என் ஏழை இல்லத்தில் வந்து அடியேனைக் கனப்படுத்தக் கோருகிறேன்" என்று உருக்கத்தோடு வேண்டினான்.

மாரமார்த்தாண்டப்பிரபு அவன் அன்பான மொழியைக் கேட்டபோதிலும் அவனுக்குப் பதில் கூறாமலே கன்றை நோக்கிச் செல்லும் பசுபோலத் தன் பிரிய மகளைக் கொண்டுபோகும் திக்கை நோக்கி நடக்கலானார்.

மாரகதவல்லி ஏகாந்த வாசத்தின் விருந்தினர் அறையில் மஞ்சத்தில் வளர்த்தப்பட்டாள். அந்த அறைதான் முன் இராஜகிரி மன்னனுக்கு உதவியாயிருந்தது. வாதரோகத்தால் பீடிக்கப்பட்ட விரேந்திரன் எந்தக் கட்டிலில் கிடத்தப்பட்டிருந்தானோ

அந்த கட்டிலில்தான் இப்போது நமது அரசி வளர்த்தப்பட்டிருந்தாள். அவளுக்கு எந்த சிதை சிகிச்சை செய்தனளோ அதே சிதைதான் இப்போதும் அவளருகிலிருந்து மிருத சஞ்சீவினி கொண்டு உதவி செய்துகொண்டிருந்தாள்.

இராஜகிரி மன்னனின் மனைவி மூர்ச்சைதெளிந்து கண்திறந்து பார்க்கும்போது அவள் தந்தை அவளருகிலிருந்தார். மரகதவல்லி இக்கற்ற பார்வையால் தன் தந்தையைப்பார்த்தாள். அவள் அப்படி பார்க்கும் நோக்கமானது கருங்குயில்குன்றத்தாசனைப் பெரிதும் கலக்கமுருத்தியது. தன் மகள்மீது வைத்திருந்த பாசமட்டிலும் அவரை அப்படிச் செய்யவில்லை. அவள் பார்வை அவருக்கு மற்ெருரு பரிதாபமானசம்பவத்தை நினைவு மூட்டியது. உடனே அவர் முகம் சவம்போல் வெளுத்தது. மாரமார்த்தாண்டப்பிரபு தன் மகளைத் தேடும்பொருட்டு கருங்குயில் குன்றத்து மாளிகையை விட்டுக் கப்பலில் பிரயாணமாகுமுன்னம் தன் மனைவி கற்பகவல்லியைக் காணச் சென்றுர் என்பதை நம் வாசகர்கள் மறந்திருக்கமாட்டார்கள். அப்போது கற்பகவல்லி தன் பதியை மருண்ட பார்வையால் பார்த்து, "இவர் யார்? மாணிக்கவல்லி, ஆ கனவு! கனவு! மாணிக்கவல்லி" என்று பிதற்றியது திடீரென்று அவர் ஞாபகத்தில் வந்தது. தனது இருகரத்தையும் முகத்தில் ஊன்றி கண்ணீர் சொரிந்தார்.

அப்போது அவர் அரிய மகள் மெல்லிய குரலால் "அப்பா,......அப்பா," என்று கூப்பிட்டாள். உடனே மாரமார்த்தாண்டப்பிரபு தன் வருத்தத்தை வெ

ளிக்குக் காட்டாது "என் கண்ணே, நீ வீணில் வருந்துகிறாய். தைரியமாயிரு. நமக்கொன்றும் கெடுதி சம்பவிக்கவில்லை" என்று தணிந்த குரலில் பதில் கூறினார்.

இதனைக் கேட்ட மரகதவல்லி சிறிதுநேரம் மௌனமாயிருந்து "பிறகு, என்ன நேர்ந்தது அப்பா" என்றாள்.

மார.—பிறகா? எதுபற்றி யோசிக்கிறாய்? என் செல்வக் குழந்தாய், வேறொன்றுமில்லை.

மர.—அப்பா கப்பல் மூழ்கியது. பிறகு?.........

மார.—பிறகு......அதுகளையெல்லாம் பின்பேசிக் கொள்ளலாம். மகளே, அதுகளை யெல்லாம் யோசிக்கும் வேளை இதுவல்ல.

மர.—அப்பா, நீங்கள் அப்படிச் சொல்லுவது நியாயமல்ல. நான் சகலமும் அறியவேண்டும்.

மார.—என் அரிய குழந்தாய், நீ வீணில் காரியத்தை விபரீதப்படுத்துகிறாய்.

மர.—அப்படியானால் நடந்ததைத்தான் கூறுமே என்றவுடன் மாரமார்த்தாண்டப்பிரபு சற்றுநேரம் சாந்தமாயிருந்து, "மகளே, நாங்கள் எல்லோரும் கமடத்தில் பிரயாணமானோம். கப்பல் மூழ்குவதற்கு முன்னம் நாங்கள் இருவரும் பிரிந்து வெவ்வேறு படகுகளில் இறங்க நேர்ந்தது. நான் இறங்கியிருந்த படகில் பதின்மர் இருந்தார்கள். அனைவரும் என் வயதுடையவர்களாகவே இருந்தார்கள். படகுகள் காற்றின் வல்லமையால் வெவ்வேறு திசையாகப் பிரிந்துபோயிற்று. என் படகிலிருந்த விருத்தர்களில் மூவர் குளி

ரால் மாண்டுபோனார்கள். அநேகவிசை படகும் கவிழ பார்த்தது. காற்று ஓய்ந்து மூன்று நாழிகைகளுக்குப் பிறகு மறு துறைமுகத்திலிருந்த கப்பலில் ஒன்று வந்து எங்களை ஆதரித்தது. அந்தக் கப்பலில் ஏறிய வர்களில் சிலர் இலங்கைவந்து சேர்ந்தோம். நான் இலங்கை அடைந்தவுடனே விடியற்காலையில் உன்னைத் தேடிததிரிந்து வரும்போதுதான் உன்னையும் உன் காவற்காரியையும் சந்தித்தேன்" என்று முடிப்பதற் குள் மரகதவல்லி, "அப்பா,—அவர்" என்றாள்.

மார—நான் பிறகு வரேந்திரனைக் காணவில்லை. என்னை மீட்டுவந்த கப்பலில் அவன் இருக்கவில்லை. ஆனால் அவனை வேறு கப்பல் ஆதரித்திருக்கவேண்டும் என்பது நிச்சயம்.

மர.—ஆ! அவர் பிறரால் ஆதரிக்கப்பட்டதில் என்ன நிச்சயம்? என்று மெதுவாகச் சொல்லிப் பெருமூச்சுவிட்டாள். அப்போது அவள் முகம் கொண் டிருந்த கோலத்தை யாரால் புகலக்கூடும்?

மாரமார்த்தாண்டப்பிரபு சிறிதுநேரம் மௌனமா யிருந்தார். பிறகு ஒருவாறு துணிந்து தன் மகளைப் பார்த்து, "குழந்தாய் நீ வீணில் துன்பப்படுகிறாய். அவன் சுகஜீவியாயிருக்கிறான். அதனை நான் உறுதி யாகச் சொல்லுவேன். ஈசன் நீதியுள்ளவராயிருக் கிறார். மகளே, நாம் என்ன செய்தபோதிலும் வரு வது வந்தேதீரும். நாம் துன்பம் அனுபவிப்பதற்கு நாம் பிறருக்கு என்ன தீமைசெய்தோம்? நான் கொலை பாதகனாகக் கருதப்பட்டு ஒதுக்கிடத்தில் பதுங்கிவந் தேன். ஆனால் கடவுள் நீதியுள்ளவராயிருந்தார். என்

பிரிய அலமு, உன் வல்லமையால் என் துன்பம் மறந்தோடிவிட்டது. நாம் பாக்கியமுள்ளவர்களா யிருந்தோம். என் செல்வக் குழந்தாய், இப்போது நாம் வருந்துகிறோம் என்பது உண்மையே. ஆனால் கடவுள் நீதியுள்ளவர். நாம் மறுபடியும் பாக்கியமுள்ளவர்களாகவே இருப்போம். கடவுள் நீதியுள்ளவர்'' என்று திறந்தவாய் மூடாமலே மூச்சுவிடாது பேசிமுடித்தார்.

மாரமார்த்தாண்டப்பிரபு தன் மகளுக்குச் சொல்லிய வாக்கியங்கள் அவருக்குச் சற்று ஆறுதல் அளித்ததே யல்லது அவர் வார்த்தைகள் ஒன்றும் மரகதவல்லியின் காதில் விழவில்லை. அவள் காதுகள் செவிடுபட்டுப் போகவில்லை. ஆனால அவர் கூறிய வார்த்தைகளில் அவள் செவிசாய்க்கவில்லை. கண் திறந்துள்ளவர்களுக்கே வெளிச்சம் தெரியும். கேட்பதில கவனம் செலுத்துபவாகளுக்கே காது பலனைத் தரும். மரகதவல்லி தன் தந்தைசொல்லிய விஷயங்களில் கவனம் செலுத்தவில்லை. அவள் எண்ணமெல்லாம் வேறிடத்தில் சென்றிருந்தது.

சிதை மறுபடியும் தன் எஜமானியைத் தொட்டுப் பார்க்கும்போது சுரம் அகோரமாயிருப்பதாக தெரிந்துகொண்டாள். அவள் தன் எஜமானிக்கு வந்துற்ற புது வியாதிக்கு மருந்தை யோசித்துக்கொண்டிருக்கும்போது மாரமார்த்தாண்டப்பிரபு அந்த அறையை விட்டு வெளியேபோனார்.



# 32-வது அத்தியாயம்.



## பிரமாணிக்கமுள்ள ஊழியக்காரி.

ஏகாந்தவாசத்தின் தாழ்வாரத்தில் சாமிஜினேந்திரன் சாய்வான நாற்காலியில் உட்கார்ந்திருந்தான். மாரமார்த்தாண்டப் பிரபு மரகதவல்லியின் அறையை விட்டு வெளியேவரும் தோற்றத்தைக்கண்டு எழுந்து அரசனை அணுகி, "பிரபு, தங்கள் மகளுக்கு என் வீட்டில் யாதொரு சங்கடமும் நேராது என்று நம்புகிறேன். சீதை சொல்லியதுபோல இந்த வாசம் அவள் மனதிற்குத் திருப்தியை கொடுக்குமென்பதில் சந்தேகமில்லை. சிறுபோதில் வளர்ந்துவந்த வீடு மன சமாதானத்திற்கு இருப்பிடமானது என்பது யாவரும் அறிந்த விஷயமே. பிரபு, இப்போது உங்களுடைய மகள் எப்படியிருக்கிறாள்?" என்று உருக்கத்தோடு கேட்டான்.

மாரமார்.—இப்படி என்று சொல்லுவதற்கில்லை. ஜினேந்திரரே, அவளுக்கு சுரம் கண்டிருப்பதாக சீதை சொல்லுகிறாள்: அவள் தைரியமுள்ள சிறுமியானாலும் மெல்லிய தேகமுடையவளாகையால் மிகவும் வருந்துகிறாள்.

ஜினேந்திரன்.—அவள் வெகுகாலமாக நோயாயிருந்து வருகிறாளா?

மார.—இல்லை. இன்றுதான் அவளுக்கு இப்படிப்பட்ட வியாதி வந்துற்றது.

சினே.—அதற்குக் காரணம்......என்று சொல்லி பிறகு மெல்ல சும்மா யிருந்துவிட்டான். சற்றுநேரம் இருவரும் பேசாமலிருந்தார்கள். அப்பொழுது சிதையும் அங்குவந்து சேர்ந்தாள்.

மார.—ஏன் சிதை, இப்போது உன் எஜமானி எப்படியிருக்கிறாள்.

சிதை.—இப்போதுதான் சற்று கண் மூடினார்கள். இந்த நோய்க்குத் தூங்குவது நல்ல குறியாகையால் நான் சந்தடி செய்யாது வெளியே வந்துவிட்டேன்.

மார.—மருந்து ஏதாகிலும் கொடுத்தாயோ ?

சிதை.—கொடுத்தேன். ஆனால், அந்தக் காய்ச்சல் முறைக் காய்ச்சலாக அடிக்கடி வரக்கூடுமோ என்று பயப்படுகிறேன் என்றாள்.

இதனைக் கேட்டவுடன் கருங்குயில்குன்றத்தரசன் முகம் வாடியது. பதில் கூறாமலே மௌனமாயிருந்தான். சற்றுநேரம் செல்ல சிதை பேச்சை வேறு விதத்தில் மாற்ற எண்ணி, "எஜமானனே, என்னைக் கண்டு கள்வர்கள் பதுங்கி ஓடுவதின் காரணம் கேட்டீர்களே அதனைப் பின் சொல்லுகிறேன் என்றேனே அந்தக் கதையைக் கேட்க விரும்புவீர்களானால்........"

இதற்கு மாரமார்த்தாண்டப் பிரபு ஆம் ஆம், என்று கூறுவதுபோல தலையை அசைத்துக்கொண்

டார். சாமிசினேந்திரன் பகற் போஜனம் அங்கு கொண்டு வரும்படியாக உத்திரவளித்தான். இரு வருக்கும் ஒரு மேஜைமேல் பரிமாறப்பட்டது. இதற் குள் சீதையும் தன் கதையைத் தொடங்கினுள். "எஜ மானனே, தாங்களும் தங்கள் மகள் அலமுவும் இந்த வீட்டைவிட்டு கொளம்பை நோக்கிச் செல்லும்போது உக்கிரமசிங்கனும் அவன் கூட்டத்தவர்களும் இங்கு வந்து தோன்றினுர்கள். கள்வர் தலைவன் என்னை அறிந்தவனுகையால் என்னிடம் வந்து உன் எஜமானி எங்கே என்று கேட்டான். நான் அவர்கள் இஙகு இருப்பதில்லை. கொளம்புக்குப் போய்விட்டார்கள் என்று பதில் கூறியவுடன் அவன் கண்கள் நெருப் புப் பொறிகளைக் கக்கின. கோபாவேசத்துடன் என்னைப் பார்த்தான். ஆனுல் அவன் எனக்கு யா தொரு கெடுதியும் செய்யத்துணியவில்லை. உடனே வீட்டில் எங்கும் தேடும்படி தன் கூட்டாளிகளுக்கு உத்திரவளித்தான் கள்வர்கள் வீட்டிலுள்ள யாவும் சோதித்துப் பார்த்து பிறகு தோட்டத்திலேயும் தேடினுர்கள். அவர்கள் எண்ணம் பலிக்கவில்லை உக் கிரமசிங்கன் வீட்டைச்சுற்றி தீ வைக்கும்படி உத்தர வளித்தான். ஒருமணி நேரம் அரக்கர்கள் போலக் கூவி ஆர்ப்பாட்டம் செய்தார்கள். பிறகு அனைத்தவர் களாய்ச் சலிப்போடு போய்விட்டார்கள்." நானும் மற் றவர்களும் நெருப்பை அணைக்க முயன்றோம்.

சிலநாட்களுக்குப் பிறகு உம்முடைய கொளம்பு ஏஜெண்டு ஒரு மார்வாடிச் செட்டியை அழைத்துக் கொண்டுவந்து தோட்டம் வீடு முதலிய யாவும் காண் பித்தார். செட்டியாரும் அவருபாகச் சற்றுநேரம்

பேசிக்கொண்டிருந்தார்கள். கடைசியாக அவர் வீட்டை வாங்கிக் கொள்ளுவதாக ஒப்புக்கொண்டார். பிறகு செட்டியார் என்னிடம் வந்து தன் சம்பளத்தில் இந்த வீட்டைப் பாதுகாத்து வரும்படியாக இட்டம் செய்தார். நான் அவருடைய சம்பளமில்லாமலே அவருக்கு அந்த வேலையைச் செய்திருப்பேன். ஏனென்றால் நான் உங்களுக்குத் தீமை செய்த கள்வர் கூட்டத்திற்கு எப்படியாவது கெடுதி செய்யவேண்டுமென்று சமயம் பார்த்துக்கொண்டிருந்தேன். என் எண்ணம் நிறைவேறுவதற்குக் கடவுளும் அநுக்கிரகம் செய்தார். அது எப்படியென்றால் கொஞ்சகாலத்திற்கெல்லாம் இதோ உங்கள் அருகிலிருக்கும் எஜமானன் இந்த வீட்டை வாங்கி இங்கு குடியேறினார். அவரால்தான் எனக்கு வெண்தேவதை யென்று கள்வர்கள் புகழ்ந்து கூறும் பெயரும் கிடைத்தது" என்று கூறவும் சாமிசினேந்திரன் ஆச்சர்யங் கொண்டவனாகச் சீதை சொல்லுவதை அறியாது அவளைப்பார்த்தான். சீதை புன்னகையுடன், "எஜமானனே, தாங்கள் என்னை மன்னிக்கவேண்டும். தாங்கள் அறியாத சில காரியம் செய்துவிட்டேன்" என்பதற்குள் சினேந்திரன் அவள் செய்த காரியத்தை மன்னிப்பதோடு அந்த காரியத்தைக் கூறும்படி அவளைக் கேட்கவும் சீதை பின்னும் கூறுவாளாயினள்.

"என் எஜமானனையும் சிறிய எஜமானியையும் வருத்தத் துணிந்த அந்தக் கள்வர்களை எப்படியாவது வருத்தவேண்டுமென்று நான் கங்கணங்கட்டிக்கொண்டிருந்தேன். அப்போது எனக்கு ஒரு புதிய எண்ணம் தோன்றியது. அது என்னவென்றால் சினேந்

திரர் பட்டாளத்தில் பழகிய துப்பாக்கிகள், கைத்துப் பாக்கிகள், அதற்கு ஆகவேண்டிய மருந்து, தோட்டாக்கள் முதலிய சாமான்கள் ஏராளமாய் வைத்திருந்ததை நானறிந்திருந்தேன். அதில் நானொரு உயர்ந்த கைத்துப்பாக்கியையும் அதற்கு வேண்டிய கெட்டித்த தோட்டாக்களையும் எடுத்துக்கொண்டேன். சிறிது காலத்திற்கெல்லாம் குறிப்பாய்ச் சுட தேர்ந்து விட்டேன். உடனே என் வேலையை ஆரம்பித்தேன்.

"நான் என் வேலை நேரங்கள் போக மற்ற நேரங்களில் காட்டிலும் மேட்டிலும் பாறைகளிலும் திரிந்து கொண்டிருப்பேன். அப்போது கள்வர்கள் என் கண்முன் தோன்றுவார்களானால் தாக்ஷண்யமில்லாது அவர்களைச் சுட்டு வீழ்த்துவேன். இப்படியாக சில காலத்தில் வெகுபேரைச் சுட்டிருக்கிறேன். மூடநம்பிக்கையுள்ள சோரர்கள் இப்படித் தங்களை வதைப்பது ஒரு தேவதையாக இருக்கவேண்டும் என்று எண்ணினார்கள். அவர்கள் அப்படி எண்ணுவதற்கும் காரணமிருந்தது. என் கைத்துப்பாக்கிக்கு தப்பி ஓடிய கள்வர்கள் என் வெள்ளை உடையைப்பற்றியும் மற்ற அடையாளங்களைப்பற்றியும் தங்களுக்குள் பேசி நான் அவர்களை வதைக்கவந்த வெண்தேவதை யென்பதாக முடிவு செய்து கொண்டார்கள். அந்நாள் முதல் கள்வர்கள் வெள்ளை உருவத்தைக் கண்டவுடன் ஓட்டம் பிடிப்பார்கள். இப்படி நான் செய்துவந்த விஷயமே இன்று உங்களை அவர்கள் கையிலிருந்து காப்பாற்றியது" என்று கூறி முடித்தாள்.

இவை யாவும் கேட்ட சினேந்திரன் ஆச்சரியத்தால் ஆரவாரித்தான். மாரமார்த்தாண்டப் பிரபு பிர

மாணிக்கமுள்ள தன் வேலைக்காரியைப் புகழ்ந்து கொண்டாடினார். இதற்குள் சாப்பாடு முடிந்தது.

சிவேனந்திரன் எழுந்து தன் அறைக்குள் போனான். கருங்குயில் குன்றத்தரசர் தன் மகளைக் காண அவள் அறையை நாடினார்.

சீதையும் தன் வேலைகளை முடித்துக்கொண்டு தன் நோயாளியைக் கவனிக்கச் சென்றாள்.



# 33-வது அத்தியாயம்.

## மணம் மலரைவிட்டுப் பிரிந்தது.

மரகதவல்லி குணப்படுவதற்கு சில நாட்கள் சென்றன. அவள் வியாதி முற்றும் குணமாகவில்லை. என்றாலும் அவள் கருங்குயில் குன்றம் செல்லப் பிரயாணப்பட்டாள். அவள் அப்படிச் செய்வதற்கு அநேக காரணங்கள் இருந்தன. அதுகளில் இதுகாறும் அங்கு தன் கணவர் வந்து சேர்ந்திருக்கவேண்டுமென்பது ஒன்றாகும்.

பிரயாணத்திற்குக் குறிக்கப்பட்ட காலையில் சீதை தன் எஜமானிக்கு செய்யக்கூடியதை செய்து முடிக்கும்போது மாரபார்த்தாண்டப் பிரபு தன் வேலை யாவும் முடித்துக்கொண்டு அவ்விடம் வந்தார். மரகதவல்லி மெதுவாய் எழுந்து தந்தையின் கரத்தைப் பிடித்து நின்றாள்.

பிரமாணிக்கமுள்ள சீதை தன் எஜமானி நடக்க பலனுள்ளவளாய் இருப்பதைக் காண மகிழ்ச்சியடைந்தாள். ஆனாலும் அவள் தன்னைவிட்டு பிரயாணமாகப் போவதை எண்ணி வருத்தத்தோடு அறையின் கதவைப் பிடித்து நின்றாள். அப்போது கருங்குயில் குன்றத்தரசர் தன் மகளைப் பார்த்து "குழந்தாய், சீதை உனக்குச் செய்த உபகாரங்களுக்காக நீ முற்றும் கடமைப்பட்டவள். அவள் உன [illegible] நன்மை

களை எண்ணில் கணக்கில் அடங்காது" என்று தனக்கு அவள் கூறிய யாவும் சொல்லி, "மகளே, நீ அவளுக்கு என்ன நன்றி செலுத்தப் போகிறாய்?" என்று கேட்டார்.

மரகதவல்லி உள்ளம் பூரித்தவளாக ஓடி சீதையைக் கட்டிப்பிடித்து, "உனக்கு நான் என்ன நன்மை செய்யப் போகிறேன்? சீதா, என் அன்பு தவிர வேறு கொடுக்க இப்போது என்னிடத்திலில்லை" என்று கூறி அவள் மார்புறத் தழுவி அளவளாவி நின்றாள்.

அப்போது சீதைக்கு உண்டாகிய சந்தோஷத்தையும் துன்பத்தையும் யாவராலே சொல்லக்கூடும்? சீதை தன் பிரிய எஜமானியின் அன்பிற்கு மகிழ்ந்தாளாயினும் அவளைப் பிரியவேண்டியதை எண்ணி துக்கித்தாள். அவள் சோகத்தைக் கண்ட மரகதவல்லி, "சீதா, நான் உன்னை விட்டுப் போவேன் என்று எள்ளளவும் எண்ணாதே. என்னுடன் வருவாயானால் நீ என்றும் என் அரிய தோழியாய் இருக்கலாம்" என்றாள்.

சீதை அழுதுகொண்டே, "அம்மா அலமு, நான் உன்னுடன் வரக்கூடாதவளாயிருக்கிறேன். உன் தந்தைக்குப் பிறகு என்னை அன்புடன் ஆதரித்த எஜமானன் சினேந்திரரை விட்டுவர என்னால் ஆகாது. அவர் மெத்த நல்லவர். அவரைத் தனியே விட்டுவர என் மனம் எப்படி சகிக்கும்? என்ன செய்வேன்" என்று அழுதாள்.

அந்நேரத்தில் சினேந்திரனும் அங்கு வந்து "பிரபு, பிரயாணத்திற்கு யாவும் சித்தமாயிருக்கிறது'

என்று கூறி தன் வேலைக்காரியைக் கவனித்தான். அவள் விசனத்திற்குக் காரணம் வினவினான். மரகதவல்லி அவளுக்கு அனுசரணையாகச் சீதை சொல்லிய யாவும் கூறினாள். சினேந்திரன் சிரித்துக் கொண்டே, "சீதா, எனக்காக நீ அவர்களின் பிரியத்தைக் கெடுக்கவேண்டாம். அவர்களுடன் போக எனக்குப் பூரண சம்மதம்" என்றான்.

இதனைக் கேட்ட வேலைக்காரி அழுதுகொண்டே, "இல்லை எஜமானே. நான் ஒருபோதும் தங்களைத் தனியாக விட்டுப் போகமாட்டேன்" என்று உறுதியாகச் சொன்னாள். வேலைக்காரியின் பிரமாணிக்கத்தைக் கண்ட யாவரும் மனமகிழ்ந்தவர்களாக வேறு பேசக்கூடாது சிறிதுநேரம் மௌனமாயிருந்தார்கள்.

சினேந்திரன் தன் விருந்தினர்கள் பிரயாணமாக இன்னமும் என்ன குறைவிருக்கிறது என்று கவனிக்கச் சென்று மறுபடியும் திரும்பிவந்து, "யாவும் சித்தமாயிருக்கிறது புறப்படலாம்" என்றான். தந்தையும் மகளும் பிரமாணிக்கமுள்ள சீதையை அரிதினில் பிரிந்து தோட்டத்தின் வழியாக நடக்கலானார்கள். சினேந்திரன் சற்று முன் நடந்தான். மரகதவல்லி அவள் தந்தை தோள்மீது சாய்ந்து மெதுவாய் நடந்தாள்.

காலை சூரியன் தனது செழிய கிரணங்களால் அடர்ந்த மரங்களுக்கு இடையே பொன்னிறத்தைப் பரப்பிக்கொண்டிருந்ததின் தோற்றம் எப்படியிருந்த தென்றால் மெல்லிய பாதங்களையுடைய மரகதவல்லி பனியில் நனைந்து பூமியில் நடந்தால் சுரம் வந்து விடுமோ என்று பயந்து ஈரத்தை உலரவைக்கும் நோக்கம் கொண்டதாகக் காணப்பட்டது.

கருங்குயில் குன்றத்தரசன் தன் மகளை ஆதரவாய்த் தாங்கி நடத்தியபோதிலும் அவள் மனம் பழைய சிந்தனையில் ஆழ்ந்துகிடந்தது. சற்றுதூரம் சென்றவுடன் ஒரு பருத்த மரத்தைத் திரும்பிப் பார்த்தாள். அவள் செய்கையால் அவள் எண்ணியதை அறிந்த மாரமார்த்தாண்டப் பிரபு, "மகளே, அங்கு என்ன பார்க்கிறாய்?" என்றார்.

மரா:—ஒன்றுமில்லை அப்பா என்று மெதுவாய் பதிலுரைத்தாள்

மார.—சற்று நிதானித்து, ஏன் மறைக்கவேண்டும். குழந்தாய், நான் ஒன்றும் அறியாதவனா?..........

மரா.—அப்பா, அன்று நாம் உக்கிரமசிங்கனுக்குப் பயந்து வீட்டை விட்டு ஓடும்போது கள்வர்கள் எதிர்ப்பட நாம் இந்த மரத்தில் ஒளிந்தது இப்போது என் ஞாபகத்தில் வந்தது. என்று சொல்லும்போது நமது பழைய அனந்தரன் மெதுவாய்த் தலையை அசைத்தான். "ஆம் அப்பா அந்த விஷயம் என் ஞாபகத்தில் இன்று நடந்ததுபோலவே இருக்கிறது. அந்நாள் இன்றுபோல் பிரகாச முடையதாய் இருக்கவில்லை. சந்திரனும் கரிய மேகத்தினுள் மறைந்திருந்தான். இரவு கருத்திருந்தது....

மார.—போகட்டும். அது பற்றி இப்போது ஆகவேண்டியது என்ன? மகளே, அந்த எண்ணத்தை விட்டுவிடு. ஆனால் அந்த கார் இருளே நம்மைக் காப்பாற்றியது அல்லாது போனால் நாம் அந்த மரத்தின் சார்பில் ஒளிந்து மூச்சுவிடவும் பயந்திருந்தபோது அவர்கள் நம்மைப் பிடித்துக் கொண்டிருப்பார்

கள்...........போனது போகட்டும். ஆனால் அன்று நான் குற்றவாளியாகவும் சபிக்கப்பட்டவனாகவும் கருதப்பட்டிருந்தேன். என் செல்வமே, உன் வல்லமையால் இன்று நான் பாக்கியமுள்ளவனா யிருக்கிறேன். என் மனக்கவலையை மாற்றிய என் அரிய மரகதமே, உனக்கு நான் தந்தையாயிருப்பதில் என்ன பாக்கியம் பெற்றவன் என்பதைப் பார்.

மா.—அப்பா, அதுகளையெல்லாம் இப்போது எண்ணவேண்டாம். இப்போது நாம் கடற்கரையை கிட்டிவிட்டோம். சினேந்திரர் படகு அண்டையில் நிற்கிறார். அவர் நமக்காகவே காத்திருக்கிறார்.

மார.—ஆம. அந்த மனிதன் மிகவும் மரியாதையுள்ளவன்.

மா.—ஆம அப்பா. மிக்க அன்புள்ளவர் என்று பேசிக்கொண்டே இருவரும் படகண்டையில் சென்றார்கள்.

மூவரும் படகில் ஏறியவுடன் படகுஓட்டி பாய் விரிததும் வலித்தும் கொளம்புத் துறைமுகத்தை நோக்கி படகைச் செலுததினான். சினேநதிரன் முன்னமே சென்னைக்குப் பிரயாணமாக விருக்கும் மலர் என்னும் கப்பலில இரண்டு சீட்டுகள் வாஙகி வைத்திருந்தான். படகு கொளம்புத் துறைமுகம் வந்தவுடன் மாரமார்ததாண்டப் பிரபுவையும் அவர் மகளையும் கப்பலில் ஏற்றிச் செலவுபெற்றுக்கொண்டு வருத்தத்துடன் பிரிந்தான்.

மலர் என்னும் கப்பல சென்னைக்குப் பிரயாணமானது. காலை சூரிய பிரகாசததில் கடல நீரெல்

லாம பொன்னிறமாய் பிரகாசித்தது. கப்பலும் நடுக் கடலிற் சென்றது.

மரகதவல்லி கப்பல் சாளரத்தின் வழியாக வெளியே பார்த்துக்கொண் டிருந்தாள். கடலில் வீசும் குளிர்ந்த காற்று அவள் மனதுக்கு ஆறுதல் கொடுப்பதுபோ லிருந்தது. தண்ணீரில் துள்ளிக் குதிக்கும மச்சங்களின் களிப்பு அவளுக்கு நிம்மதி யைக் கொடுத்தது. சாரளத்தின் வழியாகத் தலையை நீட்டி நாற்புரமும் பார்த்தாள். வானமும் நீரும் சேர்நது எங்கும் ஒரே நீல நிறமாயிருநதது. சற்று நேரத்திற் கெல்லாம் இவர்களுக் கெதிராக ஒரு கப் பல் வருவதைக் கவனிததாள். நேரம செல்லசசெல்ல அந்தக் கபபல் இவாகளுக்கு நேரே வந்தது. மரகத வல்லி தன்னை எதிர்ப்பட்டுவரும் கப்பலின் பெயரை வாசித்தாள். மணம் என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள். சிறிது நேரததிற் கெலலாம கப்பலு கருக் கபபல் விலகி வழிவிட்டு ஒதுங்கிச் சென்றது. மணம் என்னும் கப்பல் சற்று தூரம் செல்லவும் ஒரு மனிதன் அநதக் கப்பலின் மேல்தட்டிலிருந்து தலையை நீட்டிப் பார்த்தான். அவனை மரகதவல்லியும் கவ னித்தாள். ஆனல் அவனை இன்னுனென்று அவள்

அவன் யார் என்பதை நமது வாசகர்கள் அறியக் கூடும். இராஜகிரி மன்னனுகிய வரேந்திரனே. மர கதவல்லி அவனைக்கண்டு நாதா, என்று கூவியிருப்பா ளானல் அவன் காதலி, என்று பறநதோடி வந்திருப் பான். ஆனல் கபபல் இரண்டும் பிரிநது விட்டன.

மணம் மலரை விட்டுப பிரிந்து வேறு திசையில் சென்றது.

# 34-வது அத்தியாயம்.

## உக்கிரமசிங்கனின் மரணம்.

இராஜகிரி மன்னன் இலங்கைத் துறைமுகத்தை நாடியபோது மாலை நான்குமணி நேரமாயிருந்தது. வீரேந்திரன் நம்பிக்கையுடன் கப்பலை விட்டிறங்கி நாற்புறமும் நோக்கினான். தன் காதலியை எண்ணும்போது பலனற்றவனாயிருந்தான். கொடிய கள்வர் தலைவனான உக்கிரமசிங்கனிடமிருந்து அவளை மீட்க வேண்டும் என்று எண்ணும்போது அவன் ஆண்மையுடையவனாக விளங்கினான். உடனே உற்சாகத்துடன் நடந்தான். அவன் நடக்கும் நோக்கத்தைக்கண்ட ஒவ்வொருவரும் அவன் மக்களில் சிறந்தவன். ஆண் உக்குணம் நான்கும் பொருத்தமாய் அமைந்தவன் என்று கூற பின் வாங்கார். வீரேந்திரன் சிறிதுநேரம் வேகமாய் நடந்தான். பிறகு ஒரு புதிய எண்ணம் பிறந்தவன்போல் நின்று சுற்றுமுற்றும் பார்த்தான். ஒரு வாடகை வண்டி அந்தப் பக்கமாய் வருவதைக்கண்டு அந்த வண்டிக்காரனுக்கு சமிக்கைசெய்து கூப்பிட்டு அதில் ஏறிக்கொண்டு காலிக்குப் போகும் குறுக்குப் பாதையில் வண்டியை விடும்படியாக உத்திரவு அளித்தான்.

சாரதி வண்டியை செலுத்திக்கொண்டே, "ஐயா, நான் காலி வரையிலும் உம்மைக்கொண்டுபோய் விட முடியாது" என்றான்.

வஜ்ர.—ஏன், பின் எதுவரையிலும் செலுத்து வாய்? உன் குதிரை அவ்வளவு பலமற்றதாக விளங்க வில்லையே.

சாரதி.—ஆம். ஐயா, நீர் கூறுவது உண்மை தான். என் குதிரை உலகத்தை வேண்டுமானாலும் ஒரு நொடியில் தாண்டிவிடும். ஆனால் அப்படி செல் லுவதற்கு அதன் கால்கள் அவசியமா யிருக்கிறது என்பதை நீர் அறியாததல்லவே என்றான்.

இதனைக் கேட்ட வஜ்ரசந்திரன் சற்று நேரம் யோசித்தான். அவன் கூறியதில் ஒன்றும் விளங்காத வனாக "ஏன் உன் குதிரை கால்கள் இல்லாமலா ஓடு கிறது?" என்று கேட்டு நகைத்தான்.

சாரதியும் நகைத்துக்கொண்டே "ஐயா, நீர் இவ் வூருக்கு அன்னியர்போல விருக்கிறது. ஆகையால் தான் இப்படி வேடிக்கையாக பேசுகிறீர். காளிக்குப் போகும் இடைவழி காட்டு மார்க்கமானது என்பதை நீர் அறியீர்போலும்" என்றான்.

வஜ்ர.—இல்லை. அதனை நான் அறிவேன்.

சாரதி.—அப்படி நான் எண்ணவில்லை. நீர் அறிந்திருந்தால் என்னை இந்நேரவேளையில் அந்தவழி யாகப் போகச் சொல்லமாட்டீர். மேலும் அந்தக் காட் டில் வசிக்கும் கள்வர்களைப்பற்றி நீர் அறிந்திருக்கவே மாட்டீர். அவர்களின் தலைவன் ஓர் தலைமைப் பேய் போன்றவன். அவனைப்பிடிக்க அரசாங்கத்தார் எடுத் துக்கொண்ட பயன்கள் வீணாயின வென்றால் அவன் சிங்கள இராஜாங்கத்தாரைவிட வன்மையுள்ளவன் என்பது விளங்கவில்லையா? மேலும் அக்கள்வனுக்கு எங்கள் போன்ற வாடகை வண்டி ஓட்டிகள் பயப்பட

வேண்டிய முக்கிய காரணம் என்ன என்று நீர் ஆச்சரியப்படலாம். அவன் கையில் தப்பித் தவறி நாங்கள் அகப்பட்டுக் கொண்டால் முதலில் வண்டியைச் செலுத்தா திருக்கும்படி குதிரைகளின் கால்களையே வெட்டிவிடுவான். பிறகுதான் வண்டியிலுள்ளவர்களைக் கவனிப்பான்'' என்று வண்டியோட்டி சொல்லவும் வரேந்திரன் அவனுக்குப் பதில் சொல்லவில்லை. யோசனை செய்துகொண்டிருந்தான். மாலை மயங்கிய நேரமானவுடன் வண்டியும் ஒரு புறம் நின்றது. சாரதி வண்டியை விட்டிறங்கி, "ஐயா, இனி வண்டியைச் செலுத்த நான் வகையறியேன். என் காதில் ஒன்று துணிந்துக் கொள்ள விரும்பினாலும் எனது அரிய குதிரையின் கால்களைப் பறிகொடுக்க ஒருபோதும் சம்மதியேன்,'' என்றான்.

இராஜகிரி மன்னன் பதில் பேசாமலே வண்டியைவிட்டிறங்கி சாரதிக்குக் கொடுக்கவேண்டியதைக் கொடுத்து இனி நீ போகலாம் என்று சொல்பவன் போல தலையசைத்தான். வண்டிக்காரன் தனக்குக் கூலி கொடுத்த மனிதனின் தயாளத்தையும் இளமையோடு கூடிய வனப்பையும் கண்டு மனமிரங்கியவனாக "ஐயா, என் ஆலோசனையைக் கேட்க விரும்புவீர்களானால் என் சொல்லை தட்டாது இன்றிரவு இங்கு தங்கி நாளை காலை உமது பிரயாணத்தைத் தொடங்கும்'' என்றான். வரேந்திரன் சாரதிக்கு வந்தனமளித்து மெதுவாய் நடக்கலானான்.

ரவிமன்னன் செங்கோல் வழுவிய காலை தன் ஆட்சியைப் பலப்படுத்த எண்ணி குறுநிலவேந்தாகிய இருள் எங்கும் பரவத் தலைப்பட்டது. செவ்வானமும் கலைந்து யாவும் இருளமயமாகியது.

இராஜகிரி மன்னன் நேரே நடந்துகொண்டிருந்தான். தனியே ஆபத்திற்கு இடமான வழியில் செல்லுவதைப்பற்றி அவன் யோசிக்கவில்லை. அவன் எண்ணமெல்லாம் அவன் அரிய மனைவியைக் காண்பதிலும் அவளை மீட்பதிலேயுமே சென்றிருந்தது. இராவணனால் களவாடப்பட்ட சீதையை மீட்க இராமர் யுத்த சன்னத்தராய் போகும்போது அவருக்கு வானரப்படைகள் துணை நின்றது. கொடிய கள்வர் தலைவனால் கொண்டுபோகப்பட்ட மரகதவல்லியை மீட்கச்செல்லும் அவள் கணவனுக்கோ தனிமையும் தைரியமுமே துணை நின்றது. காரிருளையும் கள்வர் கூட்டத்தையும் கருதாது காதலியைக் காணச்செல்லும் வீரேந்திரன் முன்வைத்த காலை பின்வைக்காது க்ஷத்திரிய ஆணவத்துடன் உடைவாளை கரத்தில் பிடித்து முன் நடக்கலானான். அவன் கால்கள் நடந்ததுபோல அவன் மனமும் யோசனையென்னும் பாதையில் துரிதமாய் நடந்துகொண்டிருந்தது.

அவன் நடக்கும் பாதை அவனுக்கு பழைய ஞாபகங்களை மூட்டியது. தான் முன் விக்கிரமவீரன் சுந்திரதீரன் விசுவாசதாஸன் முதலானவர்களோடு பிரயாணப்பட்டதும் கள்வர்கள் கூட்டத்தால் தாக்கப்பட்டதும் அவன் மனதைக் கலக்கப்படுத்தியது. ஆ! இப்போது அவ்வரிய நண்பர்களும் வேலைக்காரனும் எங்கே என்று தனக்குள் தானே சொல்லிக்கொண்டு பெருமூச்சுவிட்டான். அவன் முகம் கோபத்தால் சிவந்தது. அவர்கள் எனக்கு உதவிபுரிய வந்தவர்க ்............பாவற்றிற்கும் அந்தக் கொடிய கள்வர் தலைவனே காரணம் என்று தன் வாய்க்குள் சொல்லிக்

கொண்டே முகத்தைத் துடைத்துக்கொண்டான். ஆ! அவன் என் கரத்தால் தண்டிக்கப்பட்டாலொழிய என் மனம் நிம்மதியடையாது. ஆ! என் பழிவாங்கும் சக்தி அவனை எங்கே காணவேண்டும் என்பதை அறியும். நான் அவனைக் காண்பேன் என்று முணு முணுத்துக்கொண்டே விரைவாய் நடந்தான்.

அவனை அறியாமலே அவன் கால்கள் சோர்ந்து நின்றன. வயேந்திரன் அங்கு காணப்படும் பெருத்த மரத்தை உற்றுப்பார்த்தான். இருளிலும் கனவாய் மலைத்தொடர்கள் அவன் கண்களுக்குப் புலப்பட்டது. நான் இங்கேதான் அவனைச் சந்தித்தேன் இந்த விடமே நான் அவன் வசத்தில் சிறைப்பட்டவிடமாகும் என்று தனக்குள் தானே சொல்லிக்கொண்டு சுற்றி லும் பார்த்தான். இருளில் மரங்களும் மலைகளும் ஆள் உருவுபோல் அவன் கண்களுக்கு எட்டியதே யொழிய வேறு ஒன்றும் அவனால் காணக்கூடவில்லை. பின்னும் நடக்க யத்தனித்தான். அப்போது ஒரு சிறு சப்தம் அவன் காதுகளுக்கு எட்டியது.

இராஜகிரி மன்னன் சப்தம்வரும் திசையில் செவி கொடுத்தான். ஒரு குரல் சப்தம் கேட்டது. மெல் லிய சப்தம். அதுவும் ஒரு பெண்பிள்ளையின் குரலா யிருக்கலாம் என்று எண்ணினான். அவன் மனம் படபட வென்று துடித்தது. அவனுக்கு இன்ன செய்வதென்று தெரியவில்லை. ஆனால் யாவற்றிற்கும் துணிந்திருந்தான். மறுபடியும் அந்தப் பெண் கூக்கு ரல சப்தம் கேட்டது. சாகுந் தறுவாயிலிருக்கும் ஒரு பெண் பிள்ளை என்று தனக்குள் தானே சொல் லிக்கொண்டான். உடனே முன்பின் எண்ணாமல் அத்

திசையை நோக்கி நடக்கலானான். வீரேந்திரன் சப்தம்வரும் திசையை நோக்கிச் செல்லவே ஓர் வெளிச்சமும் அவன் கண்களுக்கு எட்டியது. அந்த வெளிச்சத்தின் காரணம் என்னவென்று கூர்ந்து பார்த்தான். சற்று தூரத்தில் ஒரு பெண்பிள்ளை மரத்தில் கட்டப்பட்டு அவள் கரங்களில் கந்தையைச்சுற்றி எண்ணெய் வார்த்து தீ வைக்கப்பட்டிருப்பதைக் கண்டான். அவளைச் சுற்றி நான்கு ஐந்து பேர்கள் நின்று சிரித்துக்கொண்டும் ஆத்திரமாயப் பேசிக்கொண்டும் இருப்பதைக் கவனித்தான். அவனை அறியாமலே அவன் கரம் கைத்துப்பாக்கியை எடுத்து ஒருவனைச் சுட்டு வீழ்த்தியது துப்பாக்கி வெடி கேட்டவுடன ஒருவன் "வெள்ளை உருவம் வெள்ளை உருவம்" என்று கத்தினான். உடனே எல்லோரும் முன்பின் பாராமல் ஓட்டம் பிடித்தார்கள் ஓடியவர்களில் ஒருவன் பட்டினும் சற்று தைரியமுடையவனாகத் திரும்பிப் பார்த்தான். அவனை வீரேந்திரனும் கவனித்தான் ஆ! அவன் உக்கிரம சிங்கன்......தப்பி ஓடுகிறான். என்று தன்னையுமறியாமலே வாய்விட்டுக்கூறி அவன் ஓடும் திசையை நோக்கி ஓடினான். திடீரென்று அவனுக்கு ஓர் எண்ணம் வந்தது. கையில் பந்தம் சுற்றப்பட்ட பெண்பிள்ளையைக் காப்பாற்றவேண்டும் என்பதே. உடனே தன் ஓட்டத்தை நிறுத்தி அந்தப் பெண்பிள்ளையை நோக்கிவந்து அவள் கரத்தில் கொளுத்தியிருக்கும் பந்தங்களை விலக்கினான்.

அவள் மெலிந்த தேகமுடையவளா யிருந்தாள். அவள் குரல் அவளைப் பேசவோட்டாது தடுப்பதை வீரேந்திரனும் கவனித்தான். அவளை இன்னுமென்று

அவன் அறியவில்லை. ஆனால் அவள் யாரென்று நமது வாசகர்கள் அறிவார்கள். அவள்தான் மரகதவல்லிக்கு காவற் பெண்ணாயிருந்த கோகிலம். அவள் அக்கதிக்கு உள்ளாகியதின் காரணம் அவள் வாயால் கூறக் கேட்போமாகையால் இங்கு குறிப்பிடுவது அனாவசியமாகும்.

வரேந்திரன் மரத்தில் பிணிக்கப்பட்டிருந்த கோகிலத்தை விடுவித்து, "நீ யார்? இவ்வாறு அவர்கள் உன்னை உபத்திரவப் படுத்தவேண்டிய காரணம் என்ன?" என்று கேட்குமுன் துப்பாக்கி வெடிக்கும் சப்தம் கேட்டது. ஒரு குண்டும் அவன் தலைக்கு அருகே சீறிக்கொண்டு போனது. இராஜகிரி மன்னன் திரும்பிப்பார்த்தான் உக்கிரமசிங்கன் நெருப்புப் பொறிகளை கக்கும் கண்களால் பார்த்து பேய்போல் பின்புறத்தில் நின்றுகொண்டிருந்தான். இராஜகிரி மன்னன் அவனைப் பார்த்தவுடன் அவன்கையில் வைத்திருந்த துப்பாக்கியை தரையில் போட்டுவிட்டான். அது மருந்து கெட்டித்து ஒருமுறை சுடக்கூடிய பழமையான ஆயுதமானதால் அதனைச் சிங்களக் கள்வன் வெறுப்போடு எறிந்துவிட்டான். அவன் செய்கையைக்கண்ட வரேந்திரன் கோபம் தாளாதவனாக, "உன் ஆயுதத்தை ஏன் எறிந்துவிட்டாய்? அற்ப மனிதனே. எனக்குமுன் உன் வீரத்தன்மை செல்லாது என்று பயந்து அப்படிச் செய்தாயோ? பேதைப் பயலே, உன் திறம் ஆதரவற்ற ஏழைப்பெண்களிடம் தான் செல்லும் என்பதை இப்போதாகிலும் உணர்வாயாக. உக்கிரமசிங்கா, நீ மகா கொடியன். உன்னைக் கொல்லுவது பாதகமாகாது. நீ சாவதற்கு

தயாராயிரு. உன்னால் துன்பப்பட்ட ஆன்மாக்கள் இப்போது உன்னைக் கணக்குக்கேட்க வந்திருக்கின்றன” என்று வீரேந்திரன் பேசிக்கொண்டே யிருக்கும்போது சிங்களக்கள்வன் கலகலவென்று நகைத்து, “எனக்குப் பூச்சி காட்டுகிறாயா? அடா தீரவீர சிகாமணியே, நீ என்னால் இருமுறை தோற்கடிக்கப்பட்டவனென்பதை மறந்து போனாயோ?” என்றான்.

வீரே.—கள்ளப்பயலே, உன் காரியத்தை நீதான் சிலாக்கித்துப் பேசவேண்டும். நீ கொடியவன். உன்னை எச்சரிக்கை செய்யாமலும் சமான போர் செய்யாமலும் ஒரு புலியைக் கொல்லுவதுபோல நான் உன்னைக் கொன்றுவிடலாம். ஆனால் நான் அப்படிச் செய்ய எண்ணவில்லை. உன் ஆயுதங்களை எடுத்துக்கொள். உன்னால் ஆனதைப்பார் என்று சொல்லிக் கொண்டு துப்பாக்கியை எறிந்து சொம்மையாய்ப் பார்த்துக் கொண்டு நின்றான். திடீரென்று உக்கிரம சிங்கன் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து வீரேந்திரனை இறுகப் பிடித்துக்கொண்டான்.

இராஜகிரி மன்னன் தன் சத்துருவின் கொலைத் தன்மையைக் கண்டு வெகுண்டவன் தன்னைக் கட்டிப் பிடிக்க கள்வனை உதறிவிட்டு தன் கை வாளால் அவனை ஓங்கிக் குத்தினான். வீரேந்திரன் வாள் உக்கிரம சிங்கனின் மார்பில் ஊடுருவிச் சென்றது. கள்வர் தலைவன் சப்தம் போடவில்லை. வேரற்ற மரம்போல நிலத்தில் சாய்ந்தான். பாவங்கள் அவனைச் சூழ்ந்து நின்றதுபோல் இரத்தவெள்ளம் அவனைச் சூழ்ந்தது.

இப்படியாக கொடிய சிங்களதேசத்தின் கள்வர் தலைவனை உக்கிரம சிங்கன் இராஜகிரி மன்னனால்

கொலைபபட்டு மரிததான. கொடிய இராவணனைக கொன்றதில ஸ்ரீ ராமருடைய வில் எபபடி புகழ்பெற்றதோ அப்படியே உக்கிரம சிங்கனைக் கொன்றதில் வீரேந்திரனுடைய வாளும் புகழ்ந்து ஏற்றபட்டது.



அசைவற்று நின்றான். என்ன சொல்லுவான். திகைத்து நின்றான்.

கோகிலம்.—இவ்வித கார் இருளில் தனியாய்ப் புறப்படத் துணிந்த நீர் ஏதேனும் அவசியமான காரணம் இல்லாது இப்படிப்பட்ட ஆபத்துக்கிடமான பாதையில் நடக்கமாட்டீர் என்பதை நான் உறுதியாகச் சொல்லக்கூடும். ஐயனே, நீர் என்னிடம் உமது காரியத்தைக் கூறுவீரானால் ஒருகால் நான் உமக்கு உதவி புரியக்கூடும் என்று எண்ணுகிறேன்.

வீர.—என் காரியத்தில் உதவியா? மாதே, நீயா? அது உன்னால் கூடாத காரியம். என் காரியம் இன்னதென்று நீ அறிவாயோ?

கோ.—திட்டமாய்ச் சொல்லுவதற்கில்லை. ஆனால் நீர் ஒரு பெண் நிமித்தமாக இங்கு வந்தீர் என்று எண்ணுகிறேன் என்றாள்.

அவள் பெண் என்ற வார்த்தையைக் கூறும்போதே வீரேந்திரனின் முகம் மாறியது. ஆச்சரியத்தோடு, "மாதே, நீயா? நான் ஒரு பெண் நிமித்தமாக வந்தது உனக்கு எப்படித் தெரியும்?" என்று கேட்டான்.

கோ.—நான் அதனைத் திட்டமாய்க் கூறவில்லையே, ஆனால் அப்படி உத்தேசித்தேன். நீர் தேடிச் செல்லும் பெண் ஒரு இந்தியள், யௌவன வயதுடையவள், சுருண்ட கூந்தலுடையவள், அழகிய தோற்றமும் தெளிந்த பார்வையும் உடையவள். என்று கோகிலம் முடிக்கு முன்னமே, "ஆம். அவளே ஆ! எனக்கு வழிகாட்டியாக வந்த வானதூதனோ? ஆம்.

வானதூதன் என்றே எண்ணுகிறேன். ஆ! அவள் தானா. மாதே, நீ யார்? அவளை நீ எங்கு கண்டாய்? என் அரிய காதலியை நீ எவ்விடத்தில் பார்த்தாய்? மாதே, கூறு... கூறு... அவள் எங்கே?" என்று ஆத்திரத்துடன் கூவி வேண்டிக் கேட்டான்.

இவ்வா கூறிய பாவுர் கேட்ட கோகிலம் சற்று நேரம் பேசாமலிருந்து வசந்தனைப் பார்த்தாள். அவன் கா [illegible] விடையும் ஒன் [illegible] தீர பொழுது பதுமையாய், [illegible] ஆ [illegible] உன வாயினின்று [illegible] புறப்பட்ட [illegible] வார்த்தையில் என சீவன் [illegible] தானா இல்லையா? தாமதம் செய்யாதே... அவள் எங்கே இருக்கிறாள்?"

கோ.—ஐயனே, ஆத்திரப்படவேண்டாம். நீர் விரும்பி வந்த மாது இப்போது இங்கு இல்லை. அவள்.........

வச.—மாதே, நீ கூறுவது இன்னதென்று உனக்கு விளங்குகிறதா? நான் வேண்டும் கன்னிகை என் அரிய காதலி என்பதை மறந்துபோகாதே. அவள்......

கோ.—அவர்கள் சுகஜீவியாய்த்தான் இருக்க வேண்டும். ஆனால் நீர் எண்ணிவந்ததுபோல அவர்கள் இப்போது இதோ சவமாய்க் கிடக்கும் கொடியனின் காவற்குட்பட்டிருக்கவில்லை என்பதை உறுதியாகக் கூறுவேன்

வச.—அப்படியானால் அவள் இப்போது எங்கே இருக்கிறாள்? அவளை நான் எப்படிக் காணக்

மூச்சுவிட்டு மீண்டும் கூறுவாளாயினள். "ஐயனே, என்னை அடைத்துவைத்த பூமிக்குள்ளிருக்கும் குகையைப்பற்றி நான் எப்படிச் சொல்லுவேன். குளிரினாலுண்டாகும் உபாதை......" என்று கூறும்போது வீரேந்திரன் தன் முகத்தில் வடியும் வியர்வையைத் துடைத்துக் கொண்டான். தான் முன் அவ்விதக் குகையில் அடைக்கப்பட்டிருந்ததும் பிறகு தொடர்பாக நடந்த யாவும் அவன் மனதில் உதித்தது. பிறகு கோகிலம் சொல்லியது ஒன்றிலும் செவி சாய்க்கவில்லை. அவன் எண்ணமே அவனுக்குப் பெரிதாயிருந்தது.

வெகுதூரம் சென்றவுடன் தன் உடன்வரும் பெண் பிள்ளையைக் கவனித்தான். அப்போதுதான் அவனுக்கு ஞாபகம் வந்தது. உடனே சற்று தெளிந்தவனாக அவளைப் பார்த்து, "மாதே, நீ இன்று எப்படி அவர்களால் மரத்தில் கட்டப்பட்டு உபத்திரவம் செய்யப்பட்டாய் என்பதைக் கூறவில்லையே" என்றான்.

கோ.—ஐயனே, நான் முன்னமே கூறினேன். நீர் ஏதோ ஆலோசித்துக்கொண்டிருந்ததால் பிறகு சும்மாய் இருந்துவிட்டேன்.

வீரே.—ஆம். நான் கவனிக்கவில்லை. உன்னை ஏன் அவர்கள் அப்படிச் செய்தார்கள்?

கோ.—ஐயனே, நான் அநேக நாட்கள் அந்தக் குகையில் அடைக்கப்பட்டு வந்தேன். ஒவ்வொரு நாளிலும் கள்வர் தலைவன் என்னிடம்வந்து அவர்களைப் பற்றி கூறும்படியாகக் கேட்பான். நான் முதலில் சில நாள் ஒன்றுமே சொல்லவில்லை. பிறகு எனக்கு ஒரு வேளைக்குமட்டிலும் போஜனம் கொடுத்துவந்தார்கள் பின் மூன்றுநாள் சென்று அவன் என்னைக் காணவந்த

போது நான் அவனிடம் உண்மையைக் கூறினேன். அதாவது அவன் தந்தை அவனை விட்டுப் போனதாகக் கூறினேன். அதுமுதல் அவர்கள் இனி இவன் கையில் அகப்படமாட்டார்கள் என்கிற நம்பிக்கையிலேயே அப்படிக் கூறினேன். என் சொல்லைக் கேட்ட கள்வர் தலைவன் அவர்களுக்கு நீ உதவிசெய்யவில்லையா? அவளை அந்து கொண்டுபோகச் சொன்னது யார்? என்று கேட்டான். நான் அவர்களுக்கு உதவி செய்யவில்லை என்று கூறியும் அவன் நம்பவில்லை. பிறகு ஒன்றும் பேசாமல் வெளியில் போய்விட்டான். இரண்டுநாள் பரியந்தம் எனக்கு ஆகாரமே கொடுக்கப்படவில்லை. இன்று பொழுது அஸ்தமனமானவுடன் மூவர் என்னைப் பிடித்துவந்தார்கள். கள்வர் தலைவனும் அவன் தோழர்களும் எனக்கு முன் வந்தார்கள். பிறகு நீர் என்னைக் கண்ட மரத்தில் கட்டினார்கள். நான் அவர்கள் என்னை அப்படிச் செய்வதின் காரணம் வினவினேன். அக்கொடியார்கள் என்னைக் காறித் துப்பி முகத்தில் உமிழ்ந்தார்கள். அப்போது உக்கிரமசிங்கன் என்னைப்பார்த்து அந்தச்செருக்கி தப்பிப்போகும்படியாக நீ உதவிசெய்யவில்லையா என்று கேட்டான். நான் இல்லை என்றேன். உடனே என் கரத்தில் பழுக்கக் காய்ச்சிய கட்டி கொளுத்தப்பட்டது. அப்போதும் அவன் என்னை அக்கேள்வியைக் கேட்டான். என் உபாதையில் அவனுக்கு நான் என்ன பதில்சொல்லுவேன். என் உடல் நடுங்கியது. அப்போதுதான் நீர்வந்து உதவிசெய்தீர் என்று மூச்சுவிடாது கூறி பிறகு பெருமூச்சுவிட்டாள்.

இருவரும் பழைய அனந்தராமின் ஏகாந்த வாசத்தைக் கிட்டினார்கள். அப்போது வெண் உடை தரி

த்த மாது ஒருத்தி இவர்களை நோக்கி வந்தாள். அவள் சீதை என்பதை நமது வாசகர்கள் அறிந்திருக்கிறார்கள். பிரமாணிக்கமுள்ள ஊழியக்காரி வெண்மேகலையின் வேலையைப்பார்க்க அங்கு வந்து சுற்றுப்புறமுள்ள இடங்களில் கள்வர்களைத் தேடிக் கொண்டு வந்தாள். அப்போது அன்னியர்கள் வருவதைக்கண்டு அவர்களை நெருங்கி வந்தாள். இராஜகுமாரன்னைப் பார்த்ததில் அவளுக்கு உண்டான ஆச்சரியத்திற்கும் சந்தோஷத்திற்கும் எல்லையில்லாது போயிற்று. அருகில்வந்து "பிரபு!" என்று கூவினாள்.

உடனே, அவள் சீதை, முன் தனக்கு சிகிச்சை செய்த பண்டிதை என்று கண்டுகொண்ட வீரேந்திரன் திடுக்கிட்டு "நீயா இங்கு. இந்நேரவேளையில் என்ன செய்கிறாய்? கள்வர்கள் உன்னைக் கண்டால் உபத்திரவம் செய்வார்களே" என்றான்.

சீதை நகைத்துக்கொண்டே, "பிரபு, நான் அவர்களை உபத்திரவம் செய்யாமலிருந்தால் போதாதா?" என்று கூறிச் சற்று சும்மாயிருந்து, "பிரபு, நீர் என்று இங்கு வந்தீர்? அலமு அம்மாளையும் அவர்கள் தந்தையையும் காணவில்லையா? சுரத்தில் பிதற்றியபோது உம்முடைய நாமத்தையே அடிக்கடி உச்சரித்தார்கள் ..." என்று சீதை முடிக்குமுன் வீரேந்திரன் அமைதியற்றவனாக, "என்ன கூறுகிறாய்! யாரைப்பற்றிச் சொல்லுகிறாய்? உன் எஜமானி பழைய அனந்தன் மகள் அலமுவைப்பற்றியா கூறுகிறாய்? சீதா, யாரைப்பற்றிக் கூறுகிறாய்? ஆலசியம் செய்யாதே கூறு?" என்று ஆத்திரத்தோடு கேட்டான்.

சீதை.—பிரபு, நீர் சொல்லுவதைப் பார்த்தால்

அவர்களைப் பார்க்கவில்லை என்பது தெரிகிறது. அவர்கள் இன்று காலையிலேதான் இந்திய தேசம் போனார்கள்......"

வீரேந்திரன் பொறுமையற்றவனாக "யார்? யார்? ஆனந்தரும் அவர் மகளுமா"? என்றான். சீதை ஆம் என்று தலையசைக்கவும் இராஜகிரி மன்னன் ஒன்றும் தோன்றாதவனாக மெய்ம்மறந்து நின்றான்.

சிறிது நேரம் சென்றபின் சீதை வீரேந்திரனைப் பார்த்து, "பிரபு, நீர் ஒன்றும் அறியாதவராயிருக்கிறீர். எனக்குத் தெரிந்தமட்டிலும் அவர்களைப்பற்றிக் கூறுகிறேன். என்னுடன் வாரும். இன்றிரவு என் வீட்டில் தங்கிப் போகும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன். மேலும் இந்நேர வேளைக்குப் பிறகு எங்கே போகப்போகிறீர்கள். இந்த புட்பாவும் உம்முடன் வரட்டும். ஆனந்தரும் அவர் மகளும் இன்று காலை மலா என்ற கப்பலில் ஏறிச் சென்றதாக என் எஜமானன் சொன்னார்" என்று சொல்லிக்கொண்டே முன் நடந்தாள்.

இராஜகிரி மன்னன் ஒன்றும் தோன்றாதவனாக, காதலி! காதலி! என்று தன் வாய்க்குள் சொல்லிக் கொண்டே அனுமந்தனைப் பின்பற்றி நடந்த ஸ்ரீராமன் போல் சீதையைப் பின்பற்றி நடந்தான்.

# 36-வது அத்தியாயம்.

## மங்கள மாலை

கரிய போர்வையினின்று வெளிப்பட்டு மெதுவாகத் தலைநிமிர்ந்த கதிரவன் கிழக்கில் எழுந்தான். இரவு முழுவதிலும் தன் காதலியின் சமாசாரங்களைக் கேட்டுத் துயிலாது விழித்திருந்த வீரேந்திரன் எழுந்து இந்திய தேசம் செல்ல ஆயத்தமானான்.

கோகிலமும் இராஜகிரி மன்னனும் இந்திய தேசம் செல்லப் புறப்பட்ட கப்பல் நம்பிக்கை என்று பெயர் கொண்டிருந்தது. அந்தக் கப்பலில் தங்களிருவரையும் கருங்குயில் குன்றத்து மாளிகையருகே நிறுத்தி படகுமூலமாக நேரே மாளிகையில் கொண்டுபோய்விட வேண்டியதாக தனி நிபந்தனை செய்துகொண்டிருந்தார்கள்.

கப்பலும் குளம்புத் துறைமுகம் விட்டுப் புறப்பட்டது. வீரேந்திரன் மனம் எவ்வளவு துரிதமாகச் சென்றதோ அவ்வளவு சக்தியில் கப்பல் செல்லவில்லையே என்று அவன் பெரிதும் துக்கித்தான். சிறகை அடித்துப் பறந்து செல்லும் பருந்தின் சக்தியும் வழு கடலையும் ஒரு பாய்ச்சலில் தாண்டிய அனுமானின் சக்தியும் கூட தனக்கு இல்லையே என்று எண்ணினான். கேவலம் குரங்காகவேனும் பறவையாகவேனும் பிறந்திருந்தால் இந்நேரம் தன் காதலியிடம் சென்றிருக்கலாமே என்று வருந்தினான்.

மர.—அப்பா, தாங்கள் சொல்லுவது எனக்கு விளங்கவில்லை. அவர்களை என்ன காரணத்திற்காக இங்கு வரவழைக்கவேண்டும்.

மாரமார்.—காரணமா? அதனை உனக்கு முன்னமே கூறவில்லையா? அதுவும் எனது தப்பிதந்தான். மகளே, என் மனோவியாபாரத்தால் நான் அதனைக்கூற மறந்துபோனேன்.

மரகத.—அப்பா,......என்ன இன்னமும் நமக்கு புதிய கெடுதிகள் சம்பவிக்கப் போகிறதோ? நீங்கள் கலகப்படுங் காரணம் என்ன? விருந்தினர்கள் தானும் என்னத்திற்கு? சகலமும் எனக்குத் தெளிவாய்ச் சொல்லவேண்டும் என்று பணிவுடன் கேட்டாள்.

மாரமார்த்தாண்டப்பிரபு சற்றுநேரம் அமைதியாய் இருந்து பிறகு சொல்லுவாராயினர். "இன்று மாலை உனது அன்னையின் விஷயமாக ஒரு புதிய ஏற்பாடு செய்யவேண்டுமென்று பண்டிதர் கேட்டுக்கொண்டார். அவருடன் நான் வெகுநேரம் வாதாடினேன். கடைசியாக அவர் கூறியது கூடுமென்றே எனக்கு ஏற்பட்டது. யாதேனும் ஓர் திடுக்கிடச்செய்த சம்பவத்தினால் புத்தி தடுமாற்றம் அடைந்தவர்கள் அவ்வித மற்றோர் சம்பவத்தால் சுவாதீனமடைவார்கள் என்பது அவர் சித்தாந்தம்.

மரகத.—அப்பா, அவருடைய சித்தாந்தம், வேதாந்தம் எல்லாம் நமக்கு எதற்கு? அவர் எதுபற்றி தனது சித்தாந்தத்தைக் கூறினர்.

மாரமார்.—எதுபற்றி—சகலமும் உன் ஏழைத் தாயைப்பற்றிதான்.

செல்வக் குழந்தாய், கடவுள் நீதியுள்ளவர். நாம் எப்போதும் துன்பப்படும்படியாக அவர் எண்ணம் கொள்ளார். என் வார்த்தைகளை நம்பு. என்னிஷ்டப் படி செய். நமக்கு யாதொரு குறையும் ஏற்படாது” என்றார்

மர.—அப்பா, அவர் என்னுடன்......நம்முடன் இருப்பாரா

மார.—ஆம். இன்று வீரேந்திரன் உன்னுடன் நம்முடன் இருப்பான். என் வார்த்தைகளை நம்பு நமக்கு யாதொரு குறையும் ஏற்படாது கடவுள் நீதி யுள்ளவர் என்று மாரமார்த்தாண்டப் பிரபு கூறும் போது மரகதவல்லி பதில் கூறுபல விழித்த கண்விழித் தபடியே தன் தந்தையைப் பார்த்துக்கொண்டிருந் தாள். “திடமாயிரு. மகளே, இன்று மாலை விருந் தினர்களை உபசரிக்கத் தயாராயிரு” என்று சடைவி யாகச் சொல்லி கருங்குயில் குன்றத்தரசர் வெளியில் சென்றார்.

மரகத—ஆ! என் கணவர் இன்று மாலை என்று தன் வாய்க்குள் சொல்லிக்கொண்டாள். அனுபவித்த துன்பத்தினாலேயோ அல்லது இன்பத்தினாலேயோ அவள் செவ்வரிபடர்ந்த கண்களிலிருந்து நீர் வடியத் தொடங்கியது. ஆ தேவா, கடைசியாக அவர் வரு வார் என்று தன் வாய்க்குள் முணுமுணுத்துக்கொண்டாள். வேறு எண்ணமும், வேறு பேசவும் அவளால் கூட வில்லை. அசைவற்று தன் ஆசனத்தில் இருந்தாள்.

கடைசியாக பலரும் வேண்டிய சாந்திர மாலைக் காலமும் வந்துதோன்றியது. மேற்கில் செவ்வானம் தோன்றக் கருங்குயில் குன்றத்து மாளிகையில் விருந

தினர் வந்து குவிந்தனர். மணியும் ஐந்தை அடித்தது. திடீரென்று எங்கும் ஓர் கூக்குரல் ஏற்பட்டது. அது ஒரு பரிதாபமான கூக்குரல் அல்ல. ஆனந்தக் கூக்குரல். சந்தோஷத்தின் ஆரவாரம், இராஜகிரி மன்னன்............யௌவன ஜமீன்தார். .....அழகிய வீரேந்திரன் என்னும் நாமங்கள் திசைகள்தோறும் ஒலித்தன.

இராஜகிரி மன்னனும் கோகிலமும் கருங்குயில் குன்றத்து மாளிகையுள் நுழையும்போது விருந்தினர்கள் யாவரும் அவர்களை மொய்த்துக்கூடி ஆனந்தக் கூக்காரமிட்டார்கள். அப்போது பட்டாடை தரித்த மாது ஒருத்தி கூட்டத்தில் நுழைந்துவந்து வீரேந்திரனைக் கட்டிக்கொண்டாள். அவள் யார்? அவன் அரிய மனைவி அல்லது வேறு யாராயிருக்கலாம்? மரகதவல்லியின் முகம் சூரியனைக்கண்ட தாமரைபோலப் பூரித்தது. தாமரை மலர் கொப்பளிப்பதுபோல அவள் மைமதர்த்த கண்களில் நீர் கொப்பளித்தது. அப்படி நீர் நிறையப்பெற்ற கண்களோ களிக்கும் கயல்போல் குதித்து மின்னல்போல் ஒளிர்ந்தன. அவள் மெல்லிய உடல் ஒரு கொடிபோல் வளர்ந்து மரம்போல் நிற்கும் வீரேந்திரனைச் சுற்றிக்கொண்டது. இராஜகிரிமன்னன் தன் காதலியின் தோற்றத்தைக் கண்டு பேச நாவெழாதவனைச் சிலைபோல அசைவற்று நின்றுகொண்டிருந்தான்.

அப்போது அங்கு நின்ற யாவரும் சித்திர கூடத்திற்கு அழைக்கப்பட்டார்கள். விருந்தினர்கள் யாவரும் அவ்விடத்தை நோக்கிச்செல்ல வீரேந்திரனும்

[illegible] பனிவியும் அவர்களைப் பின்பற்றி நடக்கலானு [illegible]. அப்போது தான் மரகதவல்லி வாய்திறந்து நாதா, நாம் எவ்வளவு பாக்கியமுள்ளவர்களாய் இருக்கிறோம். கடவுள் நீதியுள்ளவர் என்பதின் உண்மையை இப்போதுதான் கண்டேன்" என்றாள்.

வரே.—சாதலி, ஈசன் என்றும் நீதியுள்ளவராகவே இருக்கிறார். அவர் காரியம் யாவும் நமக்கு மறைவாயிருக்கிறது. ஆனால் வெயிலில் வருந்தியவர்களுக்கே நிழலின் அருமை தெரிகிறது. அது போலவே துன்பம் அனுபவித்தவர்களாகிய நமக்கு இப்போது தான் இன்பத்தின் சுகம் தெளிவாய் விளங்குகிறது என்றான். இதற்குள் இருவரும் சித்திரகூடம் வந்து சேர்ந்தார்கள்.

மணமான மாலையில் எவ்விதம் சிங்காரித்து இருந்ததோ அதேவிதமாக எங்கும் அலங்கரித்திருந்தது. கருங்குயில் குன்றத்தரசர் சித்திர கூடத்தின் நடுவில் நின்று உரத்த குரலில் பேசத்தொடங்கினார். யாவரும் அரசர் கூறப்போவதில் செவி சாய்த்தவர்களாகக் கண் [illegible] இமைக்காது பார்த்திருந்தார்கள்.

"[illegible]பர்களே, நான் இங்கு எல்லோரையும் கூட்டி[illegible] [illegible]ரணம் உங்களில் சிலர் இன்னமும் அறியாமலிருக்கலாம். கேளுங்கள் எனது அரிய நண்பர்களே, என் மகள் மரகதவல்லிக்கும் இராஜகிரி மன்னனுக்கும் விவாகமான மாலை நடந்த அசம்பவத்தால் அன்று [illegible]ந்த கொண்டாட்டமெல்லாம் திண்டாட்டமாய் மாறி [illegible]. அப்படிப்பட்ட அக்ககரமான மணமாலையை [illegible] [illegible]யான இன்று பூமாலையையே மங்கள

மாலையாகக் கொண்டாடும் பொருட்டு இன்று [illegible] உங்கள் எல்லோரையும் இங்கு வரவழைத்தேன். இன்று மாலையை நாம் மணமாலையாகவும் மங்களமாலை யாகவும் கொண்டாடுவதின் அறிகுறியாக இப்போது மங்கள நாண்மலரால் தொடுக்கப்பட்ட மாலை[illegible] இராஜகிரி ஜமீன்தார் தன் காதலிக்குச் சூட்டு[illegible] என்று கூறி முடிப்பதற்குள் எங்கும் கரகோஷத்தின் பேரொலி முழங்கியது. மாரமார்த்தாண்டப் பிரபு பிறகு ஒன்றும் பேசாமல் தன்பத்தினியிடம் சென்றார்.

அவள் மணமாலையன்று தரித்திருந்த உடையையே அப்போதும் உடுத்திருந்தாள். அவள் கணவர் அவளிடம் சென்றதும் எழுந்து தன் ரத்தரசி புன்னகைபுரிந்து. "ஆ! நாதா, என்ன பாக்கியம்," என்றாள். அவள் கண்கள் அமைதியான பார்வை உடைத்தாயிருந்தன. மாரமார்த்தாண்டப் பிரபு ஆச்சரியங் கொண்டவராக அவளருகில் நின்ற வைத்தியரைப் பார்த்தார். பண்டிதர் மெல்ல கண்ஜாடையில் [illegible]கள் குணமடைந்தார்கள் என்று கூறினார். கருங்[illegible] குன்றத்தரசர் எல்லையில்லாத சந்தோஷம் அடைந்[illegible]ராக மறுபடியும் திரும்பினார்.

பலவித வாத்தியங்களும் இன்னிசையில் முழங்கின. சந்தோஷ ஆரவாரமும் கரகோஷமும் எங்கும் முழங்க வீரேந்திரன் மங்கள நாண்மலர் மாலை[illegible] மாகதவல்லிக்குச் சூட்டினான்.

இந்த சம்பவம் நடந்த ஒருவருட[illegible]கெல்லாம் இராஜகிரி மன்னனாய் அவன் காத[illegible]யவித் சந்தோஷத்திற்கு அறிகுறியாக மாக[illegible]

தையைப் பெற்றெடுத்தாள் என்றால் அவர்கள் அநுபவித்த சந்தோஷத்திற்கு எல்லைகூற எம்பிரானும் ஆகுமோ?

குழந்தையை வளர்க்க கோகிலம் செவிலித்தாயாக ப்பட்டாள். குழவியும் காளையில் வளர்ந்து வந் மரகதவல்லியின் குழந்தை சிரிக்கும் சிரிப்பிலும் சொல்லும் குதலைமொழியிலும் சதா மனோவியாதி கொண்டிருந்த அஞ்சனவதிதேவியும் தன் வியாதியை மறந்துபோனாள் என்றால் அந்த குடும்பத்தின் ஆனந்தத்தைப்பற்றி யாரால் சொல்லப்போகும்.

சுபம்!

முற்றிற்று.

